# சக்திவேல்

தமிழ்வளர்ச்சிக் கழகத்தாரின் பாராட்டுப் பெற்ற நூல்

அகிலன்




விற்பனை உரிமை ;

பாரி புத்தகப் பண்ணை

58. டி.பி.கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600 005

சக்திவேல் (சிறுகதைத் தொகுப்பு)
முதற் பதிப்பு: 1946
இரண்டாம் பதிப்பு: அக்டோபர், 1957
மூன்றும் பதிப்பு: செப்டம்பர், 1961
நான்காம் பதிப்பு: டிசம்பர், 1965
ஐந்தாம் பதிப்பு: மார்ச், 1976
ஆறும் பதிப்பு: ஏப்ரல், 1980

விலை: ரூ. 7 00

**SAKTHI VEL**
*tamil short story collection*
*by* **AKILON**

*PORKKODI VELIYEEDU*
*sixth edn: April, 1980*
*pages 184*
*10 pt. letters*
*11.6 kg white printing*
*18 × 12.5 cms*
*Box Board binding*
*ANNAI ANJUGAM ACHAGAM Madras-600 014*
*Sales Right :*
**PAARI PUTHAKAP PANNAI**
58, T. P. Koil Street
TRIPLICANE : MADRAS-600 005
**Price Rs. 7 00**

அச்சிட்டோர் :
அன்னை அஞ்சுகம் அச்சகம்
சென்னை-600 014




# மூன்றும் பதிப்பின் முன்னுரை

1941-ம் ஆண்டிலிருந்து 1945-ம் ஆண்டுவரையில் நான் எழுதத் தொடங்கிய காலத்தில் எழுதிய சிறுகதைகள் இவை. சிறந்த இலக்கியப் பத்திரிகையான 'கலைமக'ளுக்கும் எனக்கும் முதன் முதன் முதலில் தொடர்பு ஏற்படுத்திக் கொடுத்தது இந்தத் தொகுப்பில் உள்ள 'காசுமரம்' என்ற சிறுகதைதான். அந்தத் தொடர்பு பிறகு சிறுகதைகளிலும் நாவல்களிலும் வளர்ந்து என்னைத் தமிழ்வாசகர்களிடையே உலவச் செய்தது.

அன்று எழுதிய கதைகளை இன்று நான் மீண்டும் படித்துப் பார்க்கும்போது எனக்கு அது ஓர் இனிய அனுபவமாகத் தான் தோன்றுகிறது. எந்த ஓர் எழுத்தாளனையும் முறைப் படி தெரிந்துகொள்ள விரும்புகிறவர்கள் காலத்தின்வரிசைப் படி அவனைப் பகுத்துப் பார்த்தால் அவனுடைய வளர்ச்சி யையும், காலத்தின் வளர்ச்சியையும் அவன் எழுத்தில் கண்டு கொள்ளலாம். நானே ஒரு வாசகன் என்ற முறையில்தான் இதைப் படித்தேன். ஆனால் எழுத்தாளனாகிய எனக்குக் கதைகளில் சிற்சில மாறுதல்கள் தேவை என்று தோன்றி யது.—செய்யவில்லை!

இருபது ஆண்டுகளுக்கு முன்பு நாட்டில் வழங்கி வந்த சொற்கள் சில இப்போது வழக்கில் இல்லை. புதிய எளிய சொற்கள் தாமாக அவற்றின் இடத்திற்கு வந்திருக்கின்றன. ஒரு சில சொற்களை மட்டிலும் அங்கங்கே மாற்றியிருக் கிறேன். கதைகளில் நான் விரும்பிய திருத்தங்களைச்செய்யப் புகுந்தால், அன்றிருந்த ஆசிரியனைக்காணமுடியாதென்பதற் காக, சிறிதும் மாறுதல்களின்றி அப்படியேவிட்டு விட்டேன்.

தமிழ் நாட்டில் தலை சிறந்த சிறுகதைத் தொகுப்புக்களை அப்போது தொடர்ந்து வெ ...ட்டுப் புகழ் பெற்ற அல்லி

யன்ஸ் கம்பெனி திரு. குப்புசாமி ஐயர் அவர்கள் இதை முதல் பதிப்பாக வெளியிட்டார்கள். தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரின் பாராட்டும் இந்த நூலுக்குக் கிடைத்தது. இடையில் சில ஆண்டுகள் வாசகர்களுக்குப் புத்தகம் கிடைக்கவில்லை. மீண்டும் திரு. குப்புசாமி ஐயரவர்களின் புதல்வர்கள் இதை மறு பதிப்பாகக் கொண்டு வந்தார்கள். இப்போது இந்த மூன்றும் பதிப்பு பாரி புத்தகப் பண்ணை வெளியீடாக வெளி வருகிறது. இந்தச்சமயத்தில் ஏற்கனவே இதை வெளியிட்ட அல்லயன்ஸ் கம்பெனி திரு. குப்புசாமி ஐயரவர்களுக்கும் அவர்களுடைய குமாரர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

புதுமைத் தமிழ் இலக்கிய முயற்சியில் கற்றுக் குட்டியாக இருந்த ஒருவனின் முதல் கைவரிசை இது. இன்னும் நான் கற்றுக் கொண்டுதான் வருகிறேன். என்னுடைய வாசகர்களில் பலர் முன்பே இந்தக் கதைகளைப் படித்திருப்பார்கள். புதிய வாசகர்கள் பலர் பெருகிக்கொண்டே வரும் இந்த நாட்களில் இதுவரை படிக்காதவர்களும் பலர் இருக்கக் கூடும். அவர்களுக்கு என்னுடைய ஆரம்ப காலத்து சிறுகதைகளை எட்டிப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் எழுவது இயற்கையல்லவா? எட்டிப் பார்த்து பதினைந்து இருபது ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய அவர்களுடைய ஆசிரியனைக் காண்பார்களாக!

அன்பன்

**அகிலன்**

# அகிலனின் பிற படைப்புக்கள்

## நாவல்

சித்திரப்பாவை (பாரதீயஞானபீட பரிசு பெற்றது)

வேங்கையின் மைந்தன் (சாகித்ய அகாதமிப் பரிசு பெற்றது)

கயல்விழி (தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது)

எங்கே போகிறோம்? (ராஜா-சர் இலக்கியப் பரிசு பெற்றது)

பெண்
(கலைமகள் நாராயணசாமிஐயர் நினைவுப் பரிசு பெற்றது)

நெஞ்சினலைகள் (தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது)

வெற்றித் திருநகர்

பால் மரக் காட்டினிலே...

பாவை விளக்கு

வாழ்வு எங்கே?

புது வெள்ளம்

சிநேகிதி

பொன் மலர்

இன்ப நினைவு

கொள்ளைக்காரன்

அவளுக்கு

## சிறுகதைத் தொகுப்புக்கள்

எரிமலை (தமிழ்நாடு அரசின் பரிசு பெற்றது)
வேலியும் பயிரும்
பசியும் ருசியும்
விடுதலை
சத்திய ஆவேசம்
குழந்தை சிரித்தது
நெல்லூர் அரிசி
நிலவினிலே
ஆண்-பெண்
செங்கரும்பு
மின்னுவதெல்லாம்
வழி பிறந்தது
சகோதரர் அன்றோ?
ஒரு வேளைச் சோறு
மாபசான் சிறு கதைகள்

## கட்டுரை

வெற்றியின் ரகசியங்கள்
எழுத்தும் வாழ்க்கையும்
கதைக் கலை
நான் கண்ட ரஷ்யா
சோவியத் நாட்டில்...

## நாடகம்

வாழ்வில் இன்பம்

# உள்ளே...

# காணிக்கை

என் அன்னை

வை. அமிர்தம்மாள் அவர்களுக்கு

—அகிலன்

# சக்திவேல்

## 1

குடை கவிழ்ந்தாற்போல் பம்பலிட்டு வளர்ந்திருக்கிறதே அந்தப் பிரம்மாண்டமான பழையகாலத்து ஆலமரத்தடியில்தான், நாலு மூலைச்சதுரமான செம்பூராங்கல் மேடை மீது கம்பீரமாக நிற்கிறது சக்திவேல். வேலுக்கு அருகே, மண்ணால் செய்யப்பட்டுக் கரிப்புகை சூழ்ந்து கிடக்கும் ஒரு விளக்கு மாடம். மாடத்துக்கு அப்பால் சாம்பிராணித் தூபம் போடுவதற்காகப் பெரிய இரும்புக்கொப்பரை. அந்தக் கொப்பரைக்கு நேர் உயரே, சற்று ஒதுக்குப் புறமாக ஒரு வெண்கல மணி. ஆலமரத்தின் முரட்டுக்கிளை யொன்றிலிருந்து பித்தளைச் சங்கிலியின்உதவியால் அந்த மணி தொங்கிக் கொண்டிருக்கிறது.

சக்திவேல் கோவிலில் ஆண்டுக்கு ஒருமுறை திருவிழா. பக்கத்துக் கிராமங்களிலிருந்து ஏராளமான மக்கள் வந்து சாமிக்குப் பால் பொங்கலிட்டுக் கொண்டாடுவார்கள். அந்தத் திருவிழாதான் இன்றைக்கும்.

இன்று காலை திருவிழாக் கூட்டத்தில் யாரோ ஒரு பெண்ணைச் சரவணமுத்து கண்டான். சரவணமுத்து சபல சித்தம் படைத்தவன் அல்ல, எத்தனையோ பெண்களை அவன் கண்டிருக்கிறான்.எவளையும் கணத்தில் மறந்து விடுவதுதான் அவன் சுபாவம். ஆனால் இவளை மட்டிலும் அவ்வளவு எளிதாக அவனால் மறக்க முடியவில்லை. ''சீ! இதென்ன மூடத்தனம்!'' என்று தனக்குத்தானே பல முறை சொல்லிக்கொண்டான்; சிரித்துக்கொண்டான்.அங்கும்இங்கும் அலைந்து தன்அலுவல்களைச் செய்து கொண்டிருந்தான். ஆனால் அவன் மனதுதான் அவளை மறக்க முயன்றுகொண்டிருந்தது; கண்கள் மட்டில் அவளை மறுமுறைசந்திக்கமாட்டோமா என்று ஆவல் கொண்

டிருந்தன. எவளேக் கண்டாலும்,அவளாயிருக்குமோ என்று முகத்தை ஏறிட்டுப் பார்ப்பான். வேருயிருக்கக் கண்டு, சட்டென்று வேறுபுறம் திருப்பிக்கொள்வான் .''சீ! என்ன முட்டாள்தனம்?'' என்று மறுபடியும் சொல்லிக்கொள்வான்.

இரவு பத்துமணிக்கு மேல், கோவிலுக்கெதிரே, ஒரு மணல் பொட்டலில், ஒரு கருங்கல்மீது, ஆயாசம் தீர உட்கார்ந்திருந்தான். அவன் மனம் நிலேகொள்ளாமல், ஏக்கம் நிறைந்திருந்தது. கிராமாந்தரப் பெண்கள் நிலாப் பாட்டுப் பாடிக்கொண்டே, கும்பல் கும்பலாய்க் கும்மியடித்துக் கொண்டிருந்தார்கள்.

**பட்டப்பகல் போலே—நிலவொளி**
**பாய்ந்து வருகையிலே**
**வெட்ட வெளிதனிலே—நினேயே**
**வேண்டிஞேம் வேலவனே!**

ஆரம்பத்தில் இந்தப் பாட்டை ஒரு பெண்பிள்ளே மாத்திரம் தனிக் குரலில் பாடிஞள். அவள் பாடி முடிந்தவுடன், பிற பெண்களெல்லாம் அதையே திரும்பவும் சேர்ந்தாற்போல் பாடிஞர்கள். பாட்டு அமுத வெள்ளம்போல் சுற்றிலும் பரவி ஒலித்தது. சரவணமுத்துவும் அதிலே லயித்துப் போஞன்.

'முதல் முதலில் பாட்டைத் தொடங்குகிருளே அந்தப் பெண்மாத்திரம், நாம் இன்று காலேயில் சந்தித்த அந்த அழகியாயிருந்தால்?...ஆஹா! என்ன இனிமையான குரல்!' என்று அவன் எண்ணிஞன்.

அடுத்த நிமிடம், தான் அசட்டுத்தனமாய் மனக் கோட்டைகட்டுவதாக அவன் கருதிஞன். ஆஞல், அவ்விதம் அவஞல் மனக்கோட்டை கட்டாமல் இருக்கவும்முடியவில்லே. மெல்ல அவன் எழுந்தான்.கும்மியடிக்கும் அந்தப் பெண்கள் கூட்டத்தின் அருகே சென்ருன்; பாட்டை ஆரம்பித்து வைக்கும் அந்தப் பாடகி எவளாய்த்தான் இருக்கும் என்று பார்க்க முயன்ருன். விசித்திரம்! விசித்திரம்! இவள் அவளேதான்; காலேயில் அவன் கண்ட குமரிதான் இந்தப்பெண்களின் மத்தி

யில் நின்றுகொண்டு அலட்சியமாகப் பாட்டைத் தொடங்கி ஞள்! இதைக் கண்டவுடன் அவன் உள்ளம் குதூகலத்தோடு வானத்தில் பறப்பதுபோல் தோன்றியது. பேசாமல் அந்த இடத்தை விட்டு வெளியேவந்து மீண்டும் பாறையின் மேல் துண்டை விரித்துப் போட்டுப் படுத்து விட்டான்.

## 2

சரவணமுத்து காட்டுப்பட்டியில் காடு காவல் மேஸ்திரி கறுப்புத் தேவனிடம் சேவகஞ யிருக்கிருன். கொஞ்சம் நில புலம் உண்டு.அவன் தகப்பனுக்கும் காடு காவல் வேலைதான், அவனுக்கு வயதாகி அவன் உபகாரச்சம்பளம் பெற்றபின்பு, அதே வேலையைஇப்போதுசரவணமுத்து பார்த்துவருகிருன். இதுவரையில் சர்வணமுத்து இரண்டு மேஸ்திரிகளின் கீழே வேலை பார்த்து வந்திருக்கிருன். அவர்களுக்கெல்லாம் இவன் மீது அலாதிப் பிரியம். இப்போது வந்திருக்கும் கறுப் பத் தேவன் மூன்ருவது மேஸ்திரி. தேவனின் குணங்கள் ஒன்றும் தனக்குப்பிடிக்கவில்லையென்று, ஆரம்பத்திலிருந்தே சரவணமுத்து தன் தகப்பனிடம் புகார் செய்திருக்கிருன்.

ஒரு நாள் அந்திநேரம், காட்டுப்பட்டியை அடுத்தமலைச் சரிவில், உசிலமரத்து நிழலில், கறுப்பத்தேவனை உட்காரச் சொல்லிவிட்டு, தான் மாத்திரம் காட்டுக்குள் சுற்றிப் பார்த்துவிட்டு வருவதற்காக சரவணமுத்து புறப்பட்டான். கறுப்பத்தேவன் பக்கத்திலிருந்த சுனைத் தண்ணீரை அள்ளிக் குடித்துவிட்டு, நடந்த களைப்புத்தீர அங்கேயே சற்று அயர்ந்து படுத்தான். திறந்த வெளியாயிருந்ததால், சரி யாகத் தூக்கம் வரவில்லை.

காட்டுக்குள் சென்ற சரவணமுத்து நாலா பக்கமும் போய்ப் பார்த்துவிட்டு, கையில் கருங்காலிக் குச்சி ஒன்றை நறுக்கிச் சீவிக்கொண்டே, மெதுவாகத் திரும்பினுன். காட் டுக் கொடிகளில் கண் விழித்து நோக்கும் விதம் விதமான மலர்களையும் அந்த மலர்களைச் சுற்றிச்சுழன்றுகொண்டிருந்த வண்டினங்களையும் வேடிக்கை பார்த்துக் கொண்டும், ஏதோ

ரு ராகத்தைச் சீட்டியடித்துக் கொண்டும், அடிமேல் அடி வைத்து நடந்து கொண்டிருந்தான்.

அவன் நடை திடீரென்று தடைப்பட்டது. ராகமும் அப்படியே பாதியில் நின்றுவிட்டது. சந்தடி செய்யாமல் உற்றுக் கேட்டான். ஏதோ ஒரு குரல்; தீனமான ஒரு பெண்ணின் குரல்; பரிதாபமாகக் கதறும் அபயக் குரல்.

சரவணமுத்துவின் கால்கள் அசுர வேகம் பெற்று விட்டன. கல்லேயும் முள்ளேயும் பாராமல், குரல் வந்த திக்கை நோக்கிப் பிசாசுபோல், அந்தக்காட்டின் மத்தியில் ஓடினுன். குறுக்கே நின்ற புதர்களில் கால்கள் உரசி ரத்தம் பீரிட்டுக் கொண்டு வந்தது.

சரவணமுத்து அந்தச் சத்தம் பிறந்த இடத்தைநெருங்கி விட்டான், அங்கே அவன் கண்டதென்ன? கறுப்பத்தேவன் எவளோ ஒரு பெண்பிள்ளேயை முரட்டுத்தனமாகக் கையிலே பிடித்திருந்தான். அவனது இரும்புப் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்வதற்காக, அந்தப் பெண் அலறியவண்ணம் திமிறிக் கொண்டிருந்தாள்.

'என்ன மிருகத்தனம்! தேவனு இப்படிப்பட்ட அடாத செய்கைக்குத் துணிந்தான்? அவள் யார், அந்தப் பெண்?... யாராயிருந்தாலென்ன? உதவியற்றுத் தனியே தவிக்கும் ஒரு பெண்தானே!'

சரவணமுத்து புலிபோல் கறுப்பத்தேவன்மீது பாய்ந்து அவனேக் கீழே தள்ளினுன். அடுத்தகணம் கறுப்பத்தேவனின் முகத்தில் பளீர் பளீரென்று எண்ணற்ற அறைகள் மாறிமாறி விழுந்தன. ஒரு வழியாக அவன் பேச்சு மூச்சற்றுப் பிரக்ஞை இழந்தவுடன், அவனே அந்த இடத்திலிருந்து, சிறிது தூரத்தில்புரட்டித் தள்ளிவிட்டு, "உஸ்...அப்பாடா!" என்று தரையில் உட்கார்ந்தபடியே சரவணமுத்து பெருமூச்சுவிட்டான். அவன் பார்வை அங்கே நின்றுகொண்டிருந்த பெண்ணின் மேல் இப்போதுதான் விழுந்தது.

அவனுக்கு ஆச்சரியம் தாங்கமுடியவில்லே. வைத்த கண் வாங்காமல் அவளேயே நோக்கிவிட்டு, "நீ சக்திவேல் திருநாளேக்கு வந்திருந்தே இல்லேயா?" என்ருன்.

திகைத்து நின்ற அந்தப் பெண், ''ஆமாம், வந்திருந் தேன்'' என்று மெலிந்தகுரலில், நன்றி கனியப் பதிலளித் தாள்.

''நிலாக் கும்மியின்போது நீதானே ஆரம்பத்தில் பாடினது?''

''ஆமாம்.''

''சரி...நீ இங்கே எப்படி இந்த நேரத்தில் தனியா வந்தே? காட்டுக்குள்ளே உன்னைப்போல் ஒருத்தி தனியே வரலாமா?''

''வீட்டிலே அப்பனுக்கு உடம்பு சரியில்லே, ரெண்டு சுள்ளிக் குச்சி கொண்டு போவோமின்னு வந்தேன். இங்கே வந்தா இந்த மாதிரி...'' என்று கூறி, அதற்குமேல் ஒன்றும் சொல்லமுடியாமல் தலைகுனிந்து கண்ணீர் விட்டாள்.

''அது கிடக்கட்டும்; நீ எந்த ஊர்? உங்க ஆயா உன்னை தனியே விட்டுட்டு வீட்டிலே என்ன செய்யுறு? உனக்குத் தான் புத்தி வேண்டாம்? என்ன துணிச்சல் உனக்கு!''

''நான் இருக்கிறது பொன்னம்பட்டி. எனக்கு ஆயா இருந்தா நான் ஏன் இப்படி தனியா வர்ரேன்? அதுதான் செத்துப்போயிட்டுதே.''

இன்னும் அநேகம் கேள்விகளை அவளிடம் கேட்கவேண்டு மென்று தோன்றியது சரவணமுத்துக்கு. ஆனால், அவைகளை யெல்லாம் அவன் அவளிடம் கேட்கவில்லை. கேள்விகள் அவன் நெஞ்சில் துடிதுடித்துக் கொண்டிருந்தனவே யல்லா மல் வெளிவர அவைகளுக்குத் தைரியம் இல்லை.

''சரி, நீ பத்திரமாய் வீட்டுக்குப் போ. போவியா? இல்லை, நான் கொண்டுவந்து விடட்டுமா?''

''வேண்டாம். நானே போகிறேன்'' என்றாள். ஆனால் அவள் நகரவில்லை. தலைகுனிந்தவண்ணம் தயங்கித் தயங்கி நின்றாள்.

''ஏன் நிக்கிறே?''

''நீங்கள்தான் கடவுள் மாதிரி இங்கே வந்து காப்பாத்தி னீங்க...உங்க பேர் தெரிஞ்சா அப்பாகிட்டே சொல்ல லாம்.''

சரவணமுத்துவுக்குத் தன் விவரங்களை அவள் கேட்டதில் அடங்காத களிப்பு, தன்னையும் தேவனையும் பற்றிய தகவல்களை அவளுக்குத் தெரிவித்தான்.

''ஆமா, அந்தச் சக்திவேல் திருவிழாவில் என்னைக் கண்டது உங்களுக்கு என்ன இவ்வளவு ஞாபகம்?'' என்று அவள் கேட்டாள். அந்தக் குரலிலே சிறிது செருக்கும் வெட்கமும் தோய்ந்திருந்தன.

''அதுவா...அது எனக்குத் தெரியாது'' என்று சொல்லி கலகல என்று சிரித்தான் சரவணமுத்து.

பிறகு அவள் நடந்தாள்.

''இந்தா, உன்பேர் என்ன?'' என்று கேட்டான் சரவணமுத்து.

அவள் பாதி திரும்பியும் திரும்பாமலும், ''மீனான்னுகூப்பிடுவாங்க'' என்று சொல்லிக்கொண்டே அகன்றாள்.

''மீனா? மீனா!'' என்று தனக்குத்தானே உச்சரித்துக்கொண்டு திரும்பிய சரவணமுத்து, மேஸ்திரியைப் பார்த்து 'இந்தச் சனியனை எப்படி வீட்டிலே கொண்டுபோய்ச் சேர்ப்பது?'' என்று எண்ணினான். அப்போதுதான் அவன் உடல் சிறிது நடுங்கியது.

எப்படியோ தேவனை வீட்டில் கொண்டுபோய்ச் சேர்த்தான்.

## 3

கறுப்பத்தேவன் இதையெல்லாம் மறந்து விடுவானா? அவன் தன் வேலைத் தனத்தைக் காண்பித்துவிட்டான். சரவணமுத்துவின் மேல் பொய்க் குற்றமொன்று சாட்டி, அதற்கு வேண்டிய சாட்சியங்களையும் தயார் செய்து, அவனைப்பற்றி மேல் அதிகாரிகளுக்கு எழுதினான். ஒரு பெரிய காட்டு மரத்தை வெட்டிப் பக்கத்து ஊரில் ஒருவரிடம் சரவணமுத்து விற்றுவிட்டதாக, அவன் பழி சுமத்தினான்.

மேல் அதிகாரிகளிடமிருந்து உத்தரவும் வந்துவிட்டது. சரவணமுத்துவை வேலையை விட்டு நீக்கி இருப்பதாகவும், அவன்மீது கோர்ட்டில் வழக்குத் தொடரப் போவதாகவும், அவனைப் பிடித்துப் போலீசாரிடம் ஒப்புவிக்க வேண்டுமென்றும் அதில் கண்டிருந்தது. அதன்படியே சரவணமுத்து போலீசாரிடம் ஒப்புவிக்கப்பட்டான். அதிகாரிகள் அவன் மீது வழக்குத் தொடர்ந்தார்கள். சரவணமுத்துவுக்கு ஒரு வருடக் காவல் தண்டனை விதிக்கப்பட்டது. சரவணமுத்து சிறையில் அடைபட்டான்.

மறுநாளும் சாயங்காலம் காட்டுப்பட்டியில் சக்திவேல் சன்னிதியில் மூன்று பேர் நின்றுகொண்டிருந்தார்கள். சரவணமுத்துவின் தகப்பன், மீனு, அவள் தகப்பன் இந்த மூன்றுபேரும்தான். தன் மகனுக்கு நேர்ந்த கஷ்டத்தை சரவணமுத்துவின் தகப்பனுல் பொறுக்க முடியவில்லை. சக்திவேலை இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டே பொங்கிப் பொங்கி அழுதான். தள்ளாத வயதில் அவன் இப்படி அழுது கொண்டிருப்பதைக் காண மற்ற இருவருக்கும் பொறுக்கவில்லை. அவர்களும் அவனேடு சேர்ந்து கதறினுர்கள் அவன் வாய்விட்டுப் புலம்பத் தொடங்கினுன்.

''அட சக்தி! எனக்கு விவரந்தெரிஞ்ச காலத்திலேயிருந்து உன்னைத்தாண்டா நம்பி இருக்கேன். மனிதத் துணையாலே ஆகாத காரியம் உன்னுலே ஆகுமின்னு நினைச்சதெல்லாம் பொய்யா போச்சேடா! ஒரு பாவமும் அறியாத என் மகனை இப்படிச் சிறையிலே தள்ளிட்டானுகளே பாவிகள்! உன்னையே கதியின்னு உன் காலடியில் கிடக்கிற என்னை நீ இப்படிச் சோதிக்கலாமா?'' என்று கூறி, அப்படியே சுருண்டு விழுந்தான்.

மீனுவுக்கும் அந்தச் சக்திவேலின்மேல் கோபங் கோபமாய் வந்தது. நம்பினவர்களை நட்டாற்றில் கைவிடுவதற்கு ஒரு தெய்வமிருந்தால், அதைப்போல் தெய்வமொன்று இல்லாதிருப்பதே மிகவும் உத்தமமென்று அவள் கருதினுள். 'அட சக்தி! நீ மாத்திரம் அடுத்த வருஷத்துக்குள் இத்தனை அக்கிரமத்துக்கும் காரணமான அந்த கறுப்பத்தேவனை

ஒழிக்காமலிரு, அப்புறம் சொல்கிறேன் உன்னை! நீ சக்தி யுள்ள தெய்வமாயிருந்தால், உனக்கு இந்தப் பேர் நிலைத்து நிற்க வேணுமாயிருந்தால் அடுத்தவருஷம் இதே நாளைக்குள் அந்தப் பாழும் பயல் மேஸ்திரி மண்ணோடு மண்ணாய்த் தொலையவேண்டும்! இல்லாவிட்டால் நீ சக்திவேலில்லை. சாதாரணத் துருப்பிடித்த இரும்புவேல்தான். காடு காவ லுக்காக சரவணமுத்து தன் வீட்டுமூலையில் சார்த்தி வைத் திருந்தாரே, அந்தமாதிரி மழுங்கவேல்!' என்று மீனு தனக் குள் கறுப்பதேவனின் மீதிருந்த வயிற்றெரிச்சலையெல்லாம் சக்திவேலின் மேல்திருப்பி, அதோடு சபதமும் போட்டாள்.

# 4

மீனுவைச் சந்திப்பதற்கு முன்பு சரவணமுத்துவைச் சிறைக்கனுப்பியிருந்தால், அவனுக்குச் சிறைவாசம் ஒன்றும் அவ்வளவு கஷ்டமாயிருந்திருக்காது. ஆனால், இப்போதோ அவனுக்குத் தனிமையில் கணநேரப் பொழுது போவதுகூட ஒரு யுகமாய் இருந்தது. தினம்பொழுது விடிவதையும், இரவு வந்து மறைந்து அடுத்த நாள் கீழ்வானம் வெளுப்பதையும் மிக ஆவலோடு எதிர்பார்த்திருந்தான். அவனுடைய சிறை நண்பர்களிடமெல்லாம் தனக்கு ஒரு வருஷம் முடிய இன்னும் எத்தனை நாட்கள் போகவேண்டும் என்று கேட்பதுதான் வேலை.

ஒருமுறை அவன் தந்தை அவனைக் காண அனுமதி வாங்கிக்கொண்டு சிறைக்கு வந்திருந்தான். சரவணமுத்து அவனைப் பார்த்துக் கேட்ட முதல் கேள்வி இதுதான்: ''மீனு சுகமாயிருக்காளா?''

''இப்போ கூட உன்னைப் பார்க்கணும்னுதான் அவ இங்கே வரேன்னு பிடிவாதம் பிடிச்சா. நான்தான் கூட்டி வரலை'' என்றான் தகப்பன்.

''ஏன் கூட்டிவரப்படாது? அடுத்த தரம் மறந்திடாமல் அழைச்சுக்கிட்டுவா'' என்றான் சரவணமுத்து.

ஆனால் அடுத்த முறை அவர்கள் பார்க்க விரும்பிய போது அனுமதியே கிடைக்கவில்லை.

# 5

ஒவ்வொரு நாளாகக் கழிந்து, ஓராண்டும் நெருங்கிவிட்டது. நாட்கள் செல்லச் செல்ல ஒருவிதத்தில் மீனுவுக்கு சொல்ல முடியாத ஆனந்தம். ஆனால் அந்த ஆனந்தத்தை அவளால் பூரணமாக அனுபவிக்க முடியவில்லை. அவளுக்குச் சக்திவேல் சாமியின் பேரில் எல்லையற்ற ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது.

'இன்னும் அந்த மேஸ்திரி முதலில் இருந்ததுபோலவே ஒருகுறையும் இல்லாமல் இருக்கிறானே? அப்படியானால் நாம் அன்றைக்கு வேண்டிக்கொண்டோமே, அது தெய்வந்தானா? அல்லது அத்தனையும் பொய்யா? அந்தப் பழிகாரனுக்கு இன்னும் ஏன் ஒருகேடும் வரவில்லை?' என்று மீனு உள்ளுக்குள்ளே பொருமிக் கொண்டாள்.

இன்று இரவோடு அவள் சாமியை வேண்டிக்கொண்டு ஓராண்டு ஆகப்போகிறது. இந்தக் கடைசிநாளிலும் முக்கால் பகுதிப் பொழுதுக்குமேல் ஒரு பயனும் காணமல் சென்றுவிட்டது. இந்தக் குறுகிய நேரத்தில் எதுவும் முக்கிய நிகழ்ச்சிகள் நடந்துவிடக் கூடுமென்று மீனு கிஞ்சித்தேனும் நம்பவில்லை. 'ஒரு வருஷ காலமாய் ஒன்றுஞ் செய்யமுடியாத இந்தக் கையாலாகாத தெய்வம்,இனிமேல் தான் கறுப்பத் தேவனைப் புரட்டித் தள்ளிவிடப் போகிறதாக்கும்!' என்று நினைத்துக்கொண்டு, தன் வஞ்சம் தீர்த்துக்கொள்ள சக்திவேல் கோவிலுக்குத் தனியே காளிதேவி போல் வந்து சேர்ந்தாள்.

கோவிலில் இரவின் நிசப்தம் பயங்கரமாயிருந்தது. வழக்கமாக வந்து கூடும் காக்கைக் கூட்டங்கள் கூட எப்போதோ உறங்கிவிட்டன. என்றுமில்லாதபடி யாரோ அன்று அங்கே விளக்குப் போட்டுவிட்டுப் போயிருந்தார்கள். மாடத்துக்குள்ளிருந்த அந்த அகல் விளக்கின் தீபம் காற்றின் வேகத்தால் அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தது. இவைஒன்றையும் சட்டை செய்யாமல், மீனு சக்திவேலுக்கருகில் நின்றுகொண்டு, தன் மனக்கசப்பையெல்லாம் படபடப்போடு

கொட்டித் தீர்த்தாள். நிசப்தத்தைத் தகர்த்துக்கொண்டு அவள் குரல் உக்கிரமாய்க் கிளம்பியது,

''அடசக்தி! உனக்குச் சக்தியிருந்தால் நான் சொல்கிறதைக் கேட்டுக்கொள். இனிமேல் உனக்கு இங்கே வேலை கிடையாது. எங்கேயாவது சனங்களில்லாத இடத்துக்கு ஓடிப்போ! உன்னைக் கையெடுத்துக் கும்பிடுகிறார்களே, அத்தனை பேரும் மூடர்கள்! உனக்குத் திருவிழாக் கொண்டாடுகிறவர்களும் அப்படித்தான். போதும்! உன்னை நம்பி நாங்கள் மோசம் போனதெல்லாம் போதும்! நீ எங்களைக் காப்பாற்றியதெல்லாம் போதும்! ஓடிப்போ! நீ இருக்கிற இடத்திலே எவனாவது வழிப்போக்கன் வந்து இளைப்பாறலாம்... தெய்வமே! இனி உன்னைக் கையெடுத்துக் கும்பிட்டால் நான் மறுசாதி!...உன்னை நினைத்து நினைத்துக் கதறுகிறாரே அந்தக் கிழவர், அதைக் கேட்டாவது உன் நெஞ்சு இளக வேண்டாமா? உன்னைப்போல் உன் நெஞ்சும் இரும்புதானா? அவர் சிறையிலேயிருந்து வந்தவுடன், அந்தப் பாவிப்பயல் அவருக்கு இன்னும் என்ன தீங்கு செய்யப் போகிறானோ?''

மீனா கடவுளை முழுவேகத்தோடு தாக்கிக் கொண்டு நின்ற இந்தச் சமயத்தில், ஆலமரத்தின் இலைச் சருகுகளில் சரசர என்று ஒரு சத்தம் கேட்டது. அந்தத் திக்கில் மெதுவாகத் திரும்பிப்பார்த்தாள். ஏதோ சிறிது தூரத்தில் நிழலை ஒத்த ஓர் உருவம் தடதடவென்று ஓடுவதுபோல் தெரிந்தது. அதைப் பார்த்தவுடன் கணப்பொழுது மீனாவின் இதயம் திக்கென்று துடிப்பற்று நின்றது. அடுத்த நிமிடத்தில் அதைப் பற்றிக் கவலைப்படாமல், அவள் மென்மேலும் கடவுள் மீது வசை மாரி பொழிய ஆரம்பித்தாள். சத்தம் சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டேபோய்க் கடைசியில் முற்றும் நின்றுவிட்டது.

மீனா வீட்டுக்குத் திரும்பியபோது, அவள் தாழிடாமல் சாத்திவிட்டு வந்திருந்த வீட்டுக்கதவு அப்படியே இருந்தது. சந்தடி செய்யாமல் உள்ளே நுழைந்து விரித்துக்கிடந்த படுக்கையில் படுத்துக்கொண்டாள்.இரண்டு நாட்களாக அவளும் அவள் தகப்பனும், சரவணமுத்துவின் வீட்டில்தான் வாசம்.

சரவணமுத்துவை வரவேற்பதற்காக அவர்கள் அங்கே வந்து தங்கியிருக்கிறார்கள்.

மீனாவுக்கு அதன் பிறகு தூக்கமே வரவில்லை. சக்திவேல் கோவிலில் தன் கண்ணில்பட்ட விபரீதமான நிழலுருவத்தைப் பற்றியும் மறுநாள் தான் சந்திக்கப் போகும் தன் சரவணமுத்துவைப் பற்றியுமே திரும்பத் திரும்ப எண்ணிக் கொண்டு, இரவு கழியும் வரை விழித்திருந்தாள்.

## 6

அடுத்த நாள் பொழுது விடிந்தவுடன் ஊரெங்கும் இதே பேச்சு. முதல் நாள் இரவு கறுப்பத்தேவன் பக்கத்துக் கிராமத்திலிருந்து சக்திவேல் சன்னதி வழியாகத் தனியே வந்து கொண்டிருந்தானாம். ஆலமரத்தடியில் வந்தவுடன், அவனை என்னவோ அரட்டியது போலிருந்ததாம்; பயந்து போய் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஓட்டம் பிடித்தானாம். ஓடஓடச் சத்தம் அவனைத் தொடர்ந்து வருவதுபோல் இருந்ததாம். வழியிலேயே வாயாலும் மூக்காலும் ரத்தம் கக்கிச் சோர்ந்து விழுந்து மாண்டுவிட்டானாம். அவன் முதுகிலே வேல் குத்தியதுபோல் ஒரு காயமும் இருந்ததாம். இப்படி ஊர் மக்கள் பேசிக் கொண்டார்கள். இதையெல்லாம் கேட்ட மீனா யாருடனும் பேசவில்லை. வெகு நேரம் மௌனமாய் வீட்டிலே உட்கார்ந்திருந்தாள். பின்பு, குளத்திற்குப் போய்க்குளித்துவிட்டு,நெற்றியில் குங்குமம் இட்டுக்கொண்டு கையில் தேங்காய் பழத்தட்டுடன் சக்திவேல் கோவிலுக்குப் பயபக்தியுடன் புறப்பட்டாள். அங்கே மலர்களால் தெய்வத்தை நன்றாக அலங்கரித்த பிறகு, தேங்காய் உடைத்து வைத்து சாம்பிராணி கூடத் தீபாராதனை செய்வித்து, தான் செய்த பிழையை மன்னிக்கும்படி வேண்டினாள். அவள் கண்கள் அரை குறையாய்த் திறந்திருந்தன. அவைகளினின்றும் கண்ணீர் பொங்கி ஊற்றெடுத்தோடியது. மண்டியிட்டவாறே, ஈசனை மனங்கனியத் தொழுது கொண்டிருந்தாள்.

அப்போது, மேலே இருந்த வெண்கல மணியிலிருந்து 'டாண்...டாண்!' என்று ஓசை கணீரென்று எழுந்தது. மீனா

ஆச்சரியத்தோடு நிமிர்ந்துமேலே நோக்கினாள். அங்கே மரக் கிளையில் சாய்ந்த வண்ணமே குறும்புப்பார்வையோடு நின்று கொண்டிருந்தான் சரவணமுத்து.

மீனா திகைத்து நின்றாள். என்னவோ ஒரு பயமும் ஏக்க மும் அவளைப் பிடித்து ஆட்டின. ''அப்படியானால்...?'' என்று ஏதோ கேட்க வாயெடுத்தாள். இதற்குமேல் வார்த்தைகள் வெளிவரவில்லை,

சரவணமுத்து கலகல என்றுபேய் போல் சிரித்தான் ''ஆமாம், மீனா! ஆமாம்! துருப்பிடித்த சக்திவேலை நான் சுத் தம் செய்துவிட்டேன்'' என்றான்.

''என்ன காரியம் செய்தீர்கள்?'' என்று கத்தினாள் மீனா. அவள் உடல் நடுங்கியது. அவள் கண்கள் வெறித்து விழித் தன.

சரவணமுத்து மெல்ல நெருங்கி, அவளையணைத்து,முகம் திருப்பி, ''மீனா!ஏன் இப்படி விழிக்கிறே? நடந்தது நடந்து விட்டது.இந்தச் சீமையில் இனி எனக்கு இடமில்லை. உன்னைப் பார்க்கவே இந்நேரம் இங்கே நின்றேன். இனி நான் கண் காணாத கண்டிச் சீமைக்குப்போய் வாழ வேண்டியதுதான். போகுமுன் எனக்கு ஒரே ஒரு வரம் கொடு. ஒரே முத்தம்...' என்றான்.

மீனா உணர்வற்ற மரம்போல் அசைவற்று நின்றாள். சர வணமுத்து தன் ஆவல்தீர முத்தமிட்டான். பிறகு, கண்ணீ ருடன் அவளைவிட்டு நகர்ந்தான். அவன் கண் மறையும் தூரம் செல்லும் வரையில், கற்சிலைபோல் நின்ற அவள், அவன் மறைந்ததும், ''ஐயோ! போகாதே! என்னை விட்டுப் போகாதே!'' என்று அலறினாள்.

அவன் பின்னால் வெறியுடன் ஓடினாள்.

---

# சரஸியின் ஜாதகம்

சட்ட மறுப்பில் நான் சிறை சென்றுவிட்டு ஊர்சுற்றிக் கொண்டிருந்த காலம் அது.

ஒருநாள் மாலை விளக்கு வைக்கும் சமயம். வெகு நேரம் நடந்த களைப்புடன் ஒரு கிராமத்தின் சமீபத்தில் வந்து கொண்டிருந்தேன். எதிரே வீடுகள் இருப்பது தெரிந்ததும், களைப்பு இன்னும் அதிகமாவது போலத் தோன்றியது. அத்துடன் கால் வலியும் சேர்ந்துகொண்டதால் அடிமேல் அடி வைத்து மெதுவாக நடந்து சென்றேன்.

ஊருக்கு வெளியே அதன் எல்லையில் ஒரு பழைய வீடு இருந்தது. இரண்டு பக்கங்களிலும் திண்ணைகள். உள்ளே யிருந்து விளக்கு வெளிச்சம் மங்கலாக வெளியே தெரிந்தது.

திண்ணையில் சற்று உட்கார்ந்து இளைப்பாறிவிட்டுப் பிறகு ஊருக்குள் செல்லலாம் என்ற எண்ணத்துடன் அருகில் சென்றேன். அதே சமயத்தில் கதவைத் திறந்து கொண்டு ஒரு பெரியவர் வெளியே வந்தார். வந்தவர் ஒரு முறை என்னை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ''வாங்கோ; உட்காருங்கோ; எங்கேயிருந்து வருகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''வழிப்போக்கன்; சற்று இளைப்பாறிப் போகலாம் என்று வந்தேன்'' என்றேன்.

''ஆஹா, அதற்கென்ன? உள்ளே தான் வந்து உட்காருங்களேன்'' என்று உபசரித்துப் பெரியவர் என்னை உள்ளே அழைத்துப் போனார்.

வீட்டில் அவரையும் ஒரு சிறு குழந்தையையும் தவிர வேறு ஒருவரையும் காணோம். குழந்தை முழங்காலை மடித்துக்கொண்டு கையைத் தூக்கித் தூக்கி வைத்தபடி தரையில் தவழ்ந்து கொண்டிருந்தது. வீட்டில் எங்கே பார்த்தாலும் ஒட்டடையும் சிலந்திக்கூடுகளும் தொங்கிக்கொண்டிருந்தன.

அத்துடன் வெகு நாளைய கரிப்புகையும் சூழ்ந்திருந்ததால் அந்த வீட்டைப்பற்றி என் மனத்தில் கலவரம் ஏற்பட்டது.

சற்று நேரம் குழந்தையின் விளையாட்டில் கவனத்தைச் செலுத்தினேன். பிறகு கிழவரைப்பார்த்து, ''பையன் உங்களுடைய பேரப் பிள்ளையோ?'' என்றேன். உடனே, 'ஏன் இந்தக் கேள்வி கேட்டோம்?' என்று தோன்றிற்று.

கிழவர் முகத்தை ஒரு விதமாக வைத்துக்கொண்டு, ''இவனுக்குத் தாயும் நான்தான்; தகப்பனும் நான்தான்'' என்றார் சலிப்புடன்.

நான் ஒன்றும் புரியாமல் விழித்துப் பார்க்கவே, கிழவர் மேலும் தொடர்ந்து, ''குழந்தைஎன்னுடையதுதான்: பிறந்ததிலிருந்தே தாய்முகம் காணக்கொடுத்து வைக்கவில்லை. இந்தச் சிசுவால்தான் இன்றுவரையில் வீட்டில்விளக்கெரிந்து கொண்டிருக்கிறது. இல்லாவிட்டால்'' என்று பாதியில் நிறுத்தினார்.

அவருடைய குரல் பரிதாபகரமாக இருந்தது, கஷ்டத்தில் அடிபட்டவர்போல் தோன்றியதால் ஆறுதலான வார்த்தை ஏதாவதுசொல்லலாமென்று, ''குழந்தை மூக்கும் முழியுமாய் அழகாய் இருக்கிறான்'' என்றேன்.

''அதற்கென்ன? அவன் அம்மாவின் சாயல் அவனுக்கு வராமல் எங்கே போகும்?'' என்றார்.

மேலே பேச முடியாமல் அவர் குரல் தழுதழுத்தது.

அந்தக் குழந்தையின் நெற்றி, புருவம் கண்கள் யாவையும் எங்கோ பார்த்த ஞாபகம் எனக்கு உண்டாயிற்று. எப்போது,எவ்விடத்தில் என்பது சரியாக நினைவிற்கு வரவில்லை.

என் நெஞ்சு வேகமாக அடித்துக்கொண்டது. அந்தக் குழந்தையின் முகத்திலிருந்துகொண்டு அதே மாதிரியான இன்னொரு முகம் என்னைப் பார்த்துப்புன்னகை புரிவதுபோல் தோன்றிற்று. என் மனதில் தோன்றிய சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள வேண்டித் துடிதுடித்தேன்.ஆனால் எப்படிக்கேட்பது? ஒருவாறுசமாளித்துக்கொண்டு''குழந்தை தாயாரைக் கொண்டிருப்பதாகவா சொல்கிறீர்கள்? தாயாரும் இதேபோல்தான் இருந்தார்களோ?'' என்றேன்.

''ஆம், சரஸ்வதி என்ருல் சரஸ்வதி தேவியேதான். அவள் இருந்தாள்; வீட்டில் ஒளி இருந்தது. அவள் போய் விட்டாள்; வீட்டின் ஒளியும் போய்விட்டது. இனி ஒரே இருள் மயந்தான்...''

சரஸ்வதி! பெயரைக் கேட்டவுடன் ஒருகணம் இதயம் பட்டென்று நின்று, மீண்டும் படுவேகத்துடன் புறப்பட்டது. ''யார், சந்தானபுரம் பெண்ணு?'' என்றேன். ''ஆமாம்; உங்களுக்குத்தெரியுமா?'' என்று கேட்டார். நான் பதிலளிக்க வில்லை. குழந்தையை வாரி எடுத்து உச்சி மோந்தேன், வருடங்களின் எல்லையைத் தாண்டி, நினைவுப்பறவைசிறகடித்தது.

## 2

சரஸி அடுத்த வீட்டுப் பெண். ஆனுல் எங்கள் வீட்டில் தான் அவளுக்கு எப்போதும் இருப்பு. அம்மாவுக்குப் பெண் குழந்தை கிடையாது. அந்தக் குறையை நிவர்த்தி செய்ய வந்தாள் சரஸி.

அவளுக்குத்தான் அம்மாவின் செல்லம் அதிகம். நேரத்திற்கு ஒரு பூச்சூட்டி, உடை உடுத்தி அழகு பார்ப்பார்கள். அவளைப்பற்றி என்னிடமும் அப்பாவிடமும் பெருமையாய்ப் பேசுவதில் அம்மாவுக்கு ஆனந்தம்.

நான் அப்போது பத்தாவது படித்துத் தேறிவிட்டேன். மேல் படிப்புக்குப் பட்டணம் புறப்படுவதற்கான ஆயத்தங்கள் நடந்துகொண்டிருந்தன. மறுநாள் பொழுது விடிந்தால் கிளம்பவேண்டும். பெட்டிப் படுக்கைகளைச் சரிபார்த்துக் கொண்டு அறையில் உட்கார்ந்தேன்.

அறைவாசலில் நின்று யாரோ தேம்பும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தேன், சரஸி கண்ணும் கண்ணீருமாய் நின்றுகொண்டு, பாவடைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டிருந்தாள்.

''ஏன் சரஸி, அழுகிருய்?''

''நீ பட்டணத்துக்குப் போகப் போகிருயாமே!''

''ஆமாம். அதற்காக?''

''நானும் உன்னோடு வரேன், கோபு!''

''நீயா? நீ அங்கெதற்கு!'' என்றேன் ஆச்சரியத்தோடு.

''உன்கூடப் படிப்பதற்காகத்தான்!''

''அடி அசடே! உனக்கு என்னடி அங்கே படிப்பு வைத்திருக்கிறது? இதற்காக யாரும் அழுவார்களோ? உனக்குப் பட்டணத்திலிருந்து என்ன வாங்கிக்கொண்டு வரவேண்டும், சொல்''என்றேன்.

சரஸ்வதியின் வருத்தமெல்லாம் மறைந்து, அவளுக்குச் சிரிப்புக்கூட வந்துவிட்டது. தலையை ஒரு புறமாகச் சாய்த்துக்கொண்டு, என்னைப் பார்த்துவிட்டு வெளியே ஓடிவிட்டாள்.

அடுத்த ஆண்டு நான் ஊருக்கு வந்தபோது சரஸ்வதி எங்கள் ஊரில் இல்லை. அவளுடைய தகப்பனார் வேறொரு ஊருக்கு மாற்றலாய்ப் போய்விட்டார்.

## 3

நான்கு ஆண்டுகள் சென்றன.

பி.ஏ. தேர்வு எழுதிவிட்டு என் சொந்த ஊருக்கு வந்திருந்த சமயம். ஒருநாள் மாலை புத்தகமும் கையுமாய், குளத்தங்கரை அரச மரத்தடியில் உட்கார்ந்து கதை படித்துக்கொண்டிருந்தேன்.

அப்போது இடுப்பில் குடத்துடன் ஒரு பெண் படிக்கட்டுகளில் ஏறிக் குளத்தை விட்டு வெளியே வந்தாள்.

அவள் முகம் சற்று நிமிர்ந்ததும் ஆச்சரியத்தை என்னால் அடக்க முடியவில்லை. கண்களை அகல விழித்துக் கொண்டு பார்த்தேன்; சந்தேகமே இல்லை.

''சரஸி...!'' என்றேன் ஆவலுடன். சரஸி தலை நிமிர்ந்து என் முகத்தைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் பயத்துடன் கூடிய ஆர்வம் பிரகாசித்தது.

''என்னைத் தெரியவில்லையா உனக்கு?'' என்றேன்; அவளுடைய இதழ்கள் பேச முயன்றன; ஆனால் வார்த்தைகள்

வெளி வரவில்லை. மெதுவாக ஒரு புன்னகையால் பதிலளித்து விட்டுத் தலையை மறுபடியும் கவிழ்த்துக் கொண்டாள்.

''என்ன சரஸி பேசமாட்டாயா? என்னிடம் பேசுவதற்குக்கூடவா உனக்கு வெட்கம் வந்துவிட்டது...'' என்றேன் என்னை அறியாமலே.

பதில் உடனே வரவில்லை; அச்சத்தோடு சரஸி ஒரு பார்வை பார்த்தாள்.

''உங்களைத் தெரியாமல் என்ன? அப்பாகூட உபகாரச் சம்பளம் வாங்கிக்கொண்டு இங்கேயே வந்து விட்டார். மேல வீதியில் புது வீடு வாங்கிக்கொண்டு குடியிருக்கிறோம்'' என்று கீழே குனிந்தபடியே கூறிவிட்டுத் தன் வீடு நோக்கிச் சென்றாள்.

அன்று மாலை சரஸ்வதியின் வீட்டுக்கு நான் சென்ற போது கூடத்தில் உட்கார்ந்து தலை வாரிக்கொண்டிருந்தாள் சரஸி.

சந்தடி செய்யாமல் பின்னால் நின்று சில விநாடிகள் அவளைப் பார்த்துக்கொண்டிருந்தேன். நான் வந்ததைக் கவனியாமல் அவள் ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டே தன் வேலையில் ஈடுபட்டிருந்தாள். அப்பொழுது பின்புறத்திலிருந்து ஒரு கரம் என் தோளை மெதுவாகப் பிடித்தது.

எனக்கு உடம்பெல்லாம் குப்பென்று வேர்த்தது. தேள் கொட்டிய திருடனைப்போல் வெட்கத்துடன் திரும்பினேன். சிரித்துக் கொண்டே என் பின்னால் நின்றார் சரஸ்வதியின் தந்தை.

''என்ன கோபு! உன்னைத் தேடிக்கொண்டுதான் நான் உன் அப்பாவிடம் போயிருந்தேன். நீயே இங்கு வந்துவிட்டாய். வா, உட்கார்; எதைப் பார்த்துக்கொண்டிருந்தாய்?'' என்று அவர் கேட்டார்.

சரஸி கடைக் கண்ணால் என்னை ஒரு பார்வை பார்த்து விட்டு சமயலறைக்குள் போய்விட்டாள்.

''நீ அடிக்கடி சரஸியைப்பற்றி விசாரித்துக் கொண்டிருந்தாயாமே; அதைத்தான் உன் அப்பா என்னிடம் சொல்லிக்

கொண்டிருந்தார். நான் கூட அவளுடைய ஜாதகத்தை இப்போதுதான் அவரிடம் கொடுத்துவிட்டு வந்திருக்கிறேன். எல்லாம் கடவுளின் கருணையால் நன்றாக முடியவேண்டும்'' என்றார் சரஸியின் தகப்பனார்.

எனக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. அதன்பிறகு அவர் பேசிய வார்த்தை ஒன்றுகூட என் காதில் விழவில்லை.

## 4

இரண்டு தினங்களுக்குப் பிறகு, சரஸ்வதியின் தகப்பனாரும், என்னுடைய தகப்பனாரும் எங்கள் வீட்டில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்குத் தெரியாமல் நானும் நின்று கவனித்தேன்.

''சரஸியின் ஜாதகத்தில் குறைஇருக்கிறதாம்; குழந்தையே பிறக்காதாம்; இதற்கு வேறு பரிகாரமும் கிடையாதாம்'' என்றார் என் தந்தை.

சரஸியின் தகப்பனாருடைய முகம் வெளுத்தது. பதில் பேசாமல் பிரமை பிடித்தவர்போல் என் தந்தையைப் பார்த்தார். அந்த ஒரு விநாடியில் என் தலையில் ஆயிரம் இடிகள் சேர்ந்து விழுவனபோலத் தோன்றியது. ''எந்த ஜோசியன் இதை இவ்வளவு நுணுக்கமாய்த் தெரிந்து சொன்னவன்? அந்தத் திரிகால ஞானியை என் முன்னே அழைத்து வந்து அதை மறுபடியும் ஒருமுறை சொல்லச் சொல்லுங்கள்'' என்று கத்தலாமா எனத் தோன்றியது. ஆனால் ஆத்திரமும் படபடப்பும் அதிகமாயிற்றே தவிர, அப்பா முன்பு ஒன்றும் சொல்லத் தைரியம் வரவில்லை.

''அப்படியானால்...?'' என்று இழுத்தார் சரஸியின் தந்தை.

''அதற்கு நாம் என்ன செய்யலாம்? எல்லாம் தலையெழுத்தைப்போல் நடக்கும்; நம்முடைய எண்ணத்தில் என்ன இருக்கிறது? வேறு பெண் பார்க்கப் போகிறேனென்று தெரிந்தால் கோபுகூட என்மீது வருத்தப்பட்டுக் கொள்வான்.''

என்னுல் அங்கே நிற்க முடியவில்லே. மனம் இடிந்து போய் ஒன்றும் தோன்ருமல் அருகிலிருந்த நாற்காலியில் விழுந்தேன்.

ஊரெல்லாம் இதே பேச்சாகி விட்டது. சரஸ்வதியின் தலேயில், 'குழந்தை பிறக்காது' என்பதை மட்டும் அந்தப் பிரம்மா அழுத்தமாக எழுதியிருந்தாணும்!

இந்த வதந்தி காரணமாகச் சரஸிக்குக் கல்யாணம் ஆவதே மிகவும் கஷ்டமாய்ப் போய்விட்டது. நான் மறுபடியும் பட்டணம் சென்ற பிறகு, அவளே வயதான கிழவர் ஒருவருக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தாகிவிட்டது என்று கேள்விப்பட்டேன். அதனுல் அப்போது எனக்கு உண்டான மனத் துயருக்கு அளவே இல்லே. வாழ்க்கையிலேயே ஒரு வெறுப்பு உண்டாகிவிட்டது.

பெரியவர் திரும்பவும் பேசினுர். அவருடைய குரல் எங்கேயோ வெகு தூரத்திலிருந்து பேசுவதுபோல் என் காதில் ஒலித்தது.

''எந்த ஜோசியனே ஒருவன் 'சரஸ்வதிக்குக்குழந்தை பிறக்காது'என்று சொல்லியிருந்தாணும், கல்யாணத்துக்குப் பிறகுதான் எனக்கு அந்தச் செய்தி தெரிந்தது. அந்த ஜோசியனுடைய வார்த்தையைப் பொய்யாக்குவதற்குத் தானே என்னவோ, அவள் இந்த வீட்டுக்கு வந்த ஒரு வருடத்திற்குள், இவன் பிறந்தான். ஆனுல் சரஸ்வதிதான் என்னே மோசம் செய்துவிட்டாள். இவனே என்கழுத்தில் கட்டிவிட்டு இவன் பிறந்த ஆறு மாதத்துக்கெல்லாம் இறந்து போனுள்!''

இவ்விதம் சொல்லிவிட்டு அந்தப் பெரியவர் ஒரு துக்கச் சிரிப்புச் சிரித்தார். அந்தச் சிரிப்பின் எதிரொலி வீடெல்லாம் கேட்டது.

நான் எழுந்து நடந்தேன். கால் வலியைத் தீர்த்துக் கொள்ள அங்கு சென்ற எனக்கு, இப்போது கால்களுடன் சேர்ந்து நெஞ்சும் வலித்தது.



# சாவிலே வாழ்வு

செத்துப்போன மனிதர்களுடன் பேசுவதென்பது கந்தசாமிக்கு ஒரு பழகிப்போன காரியமாகத் தோன்றியது. அதிகம் சொல்லப்போனால் அந்த மாதிரித் துறையில் அவனுக்கென்றே ஒரு தனித்திறமை இருந்தது என்று கூடச் சொல்லிவிடலாம்.

முக்கியமாக அவனுடைய தினசரி வாழ்வின் ஆதாரம் முழுதுமே செத்துப்போனவர்களின் உதவியால்தான் அவனுக்குக் கிடைத்தது. ஆகையால் தன் குடும்பத்தைப் பஞ்சப் பழுதில்லாமல் காப்பாற்றி வந்த அந்த உயிரற்ற மனிதர்களிடம், அவன் ஒருவிதத் தனிப்பற்றுதல் கொண்டிருந்தான்.

கந்தசாமியின் தொழிலுக்கு 'ஒருநேரம் பொழுது' கிடையாது. எந்தச் சமயமாயிருந்தாலும் சரி. பட்டப்பகல், நடு இரவு, காற்று, மழை இவற்றையெல்லாம் அவன் சிறிதுகூடச் சட்டை செய்யமாட்டான்.

தன்னுடைய 'பேசா நண்பர்களை'க் கண்டவுடனேயே அவனுடைய உற்சாகம் உணர்ச்சியை மீறிவிடும். ஓட்டமாய் ஓடி, ஒரு நொடிப் பொழுதில் குடிசையிலிருந்து மூங்கில் தடியை எடுத்துக்கொண்டு வந்து, அவர்களைக் 'கவனிக்க' ஆரம்பித்துவிடுவான்.

தன்னைப்போலப் பேசக்கூடிய, பேர்வழிகளோ உணர்ச்சியுள்ள மனிதர்களோ பக்கத்தில் இருக்கும் வரையில் அவனுடைய நடைமுறை பாவனைகளெல்லாம் ஒரு விதமாக இருக்கும். மிகவும் அடக்க ஒடுக்கமாகத் தாழ்மையுடன் நடந்துகொள்வான். அவர்கள் சற்றுத் தூரம் அப்படிக் கண் மறைவாகப் போய்விட்டாலோ அப்புறம் கந்தசாமியின் பாடு கொண்டாட்டந்தான்.

முதன் முதலில் தனிப்பட்டமுறையில் அவர்களுடைய சொந்த நலன்களை விசாரிப்பான். அதற்குப் பிறகு குழந்தை

குஞ்சுகள், அண்ணன் தம்பிகள், சொத்து சுதந்திரம் முதலிய வைகளைப்பற்றிக் கேள்வி அம்புகள் சரமாரியாகக் கிளம்பும்.

மூச்சு விடாமல் தன்னுடைய கேள்விகளை அடுக்கிக் கொண்டு போவானே ஒழிய, ஒருபோதும் அவர்களது பதிலை எதிர்பார்ப்பதில்லை. நண்பர்களும் அதற்குத் தகுந்தாற் போல் அசதி மறதியில்கூடத் தப்பித்தவறி வாய் திறந்துவிட மாட்டார்கள்!

அப்படி அவர்கள் எப்போதாவது பதிலளிக்கும்படியான நிலைமை வந்துவிட்டால் நிச்சயம் கந்தசாமிக்குக் குலை நடுக்கம் எடுத்துவிடும். அவ்வித அசந்தர்ப்பங்களில்கண்ணை மூடிக் கொண்டு அவர்களுடைய தொடர்பைத் துண்டித்துக் கொள்ளுவதுமின்றி, தன்னுடைய வேலைக்குக் கூடச் சீட்டுக் கொடுக்கத் தயங்கமாட்டான்.

ஆனால் செத்தவர்கள் எங்கே பேசுகிறார்கள்?

ஒருவார காலமாக கந்தசாமியின் தொழிலில் சரியான சுறுசுறுப்புத் தட்டவில்லை. படுமோசமாகப் படுத்துவிட்டது. கந்தசாமியின் வீட்டுக்காரி செல்லம்மாளின் முகமும் முன் போல இல்லாமல் மலர்ச்சியற்றுச் சுருங்கியிருந்தது.

''அட கடவுளே!'' என்று முனகிக்கொண்டே ஆற்றங் கரையில் உட்கார்ந்திருந்தான் கந்தசாமி. அவனுக்குப் பொழுதே போகவில்லை; என்னவோ தான் ஒரு சோம்பேறி யாக மாறிவிட்டதாக நினைத்துக் கொண்டான்.

வெறுங்கையுடன் குடிசைக்குத் திரும்பலாமென்றாலோ, அதுவும் சரியான யோசனையாகப் படவில்லை. 'பின்னே என்னதான் செய்கிறது? எங்கேதான் போகிறது?...சேச்சே! இந்த ஒரு சாண் வயிறு வளர்க்க மனிதன் படுகிற பாடு!... ஹூம்...'

எழுந்து மணலைத் தட்டிவிட்டுஅங்குமிங்கும் சிறிதுநேரம் நடந்து கொடுத்தான். கடைசியில், ''ஆண்டவன் இன்னைக் கும் படி அளக்கல்லே; வீட்டுக்குத்தான் போய்த் தொலைக் கணும்; வேறே வழியைக் காணோம்...'' என்று நொந்து கொண்டே குடிசைப் பக்கம் புறப்பட்டான்.

வழியில் இருந்த காளிகோயிலில் என்றுமில்லாதபடி விளக்கு வெளிச்சம் தெரிந்ததால், 'ஒரு கும்பிடுதான்போடு வோமே; காசா, பணமா?' என்று உள்ளே விக்கிரகத்தை எட்டிப் பார்த்தான்.

அங்கே அவனுடைய மனைவி செல்லம்மாள் தலைவிரி கோலமாய் உட்கார்ந்துகொண்டு காளியிடம் முறையிட்டுக் கொண்டிருந்தாள், ''அடி காளியாத்தா! ஏண்டி எங்களைச் சோதனை பண்றே? ஒரு நாளா, ரெண்டு நாளா?...எட்டு நாளா எங்க பொளப்பிலே மண்ணடிச்சுட்டியே...நான் வாயும் வயிறுமா இருக்கிறது கூடவா உனக்குத் தெரியல்லே!...இன்னைக்கோ?...நாளைக்கோ...''

கந்தசாமிக்கு ஒரு பக்கம் வருத்தமாக இருந்தாலும் மற்றொருபுறம் மகிழ்ச்சிதாங்க முடியவில்லை. மனைவியை அழைத்துக்கொண்டு வீட்டிற்குக் கிளம்பினான்.

''என்ன செல்லம்மா? இன்னைக்கோ நாளைக்கோன்னு சொன்னியே அது என்ன?'' என்றான்.

வெட்கம் வந்துவிட்டது அவளுக்கு. ''அது என்னமோ ஒண்ணு! காசில்லாத சமயத்திலே அது வேறே வந்து...'' என்று இழுத்தாள்.

செல்லம்மாள் நிறைமாதக்காரி என்பது அவனுக்குத் தெரியாமல் இல்லை. இருந்தாலும் அவள் வாயைக் கிண்டினான், வேடிக்கையாக.

''செல்லத்துக்கு ஒரு பயல் பொறக்கப் பொறான்; அது தானே சங்கதி'' என்று பெருமையாகச் சொல்லி விட்டு, அவளைப் பிடித்து இழுத்துக்கொண்டே குடிசைக்குள் நுழைந்தான்.

* * *

இன்னும் ஒரு வாரம் கழிந்தது; பொழுது சரியாக விடிவதற்குள்ளேயே கந்தசாமிக்கு ஒரு பெரிய இடத்துக் 'கிராக்கி' வந்து சேர்ந்தது, அன்றையச் சோற்றிற்கு அவனுக்கு ஒரு செத்துப்போன 'அண்ணே' கிடைத்தார்.

பறைமேளம் சங்கு சேகண்டியுடன் நாலுபேர் தோளில் அந்த 'அண்ணே' சவாரிசெய்து வந்து இறங்கினர். ஊர்கூடி அங்கே அழுதது. உரிய மனிதர் நெருப்பு வைத்தார். பிறகு கந்தசாமிக்குச் சேரவேண்டிய காசை விட்டெறிந்து விட்டு அவர்கள் கலைந்தார்கள்.

அண்ணே, தனியாகக் கிடந்தார்.

மூங்கில் தடியுடன் அதிகார தோரணையில், அவரிடம் தன் கேள்விகளை ஆரம்பித்தான்.

"என்ன அண்ணே! நீ இந்த ஊர்தானு? என்ன சாதி?... ஒன்னோட குலங் கோத்திரமென்ன?"

"......"

"ஏண்ணே நீ இந்த வயதிலே செத்துப்போய்ட்டே? அட பாவமே! ஆசாமியைப்பார்த்தா,நல்ல வாட்ட சாட்டமா... குண்டுக்காளை மாதிரி!.............உனக்கு என்னண்ணே அப்படி நோவு?"

"........."

"நீ பெரிய சொத்துக்காரனுமே!மாடிமேலே மாடிவச்சு வீடு மேலே வீடு கட்டினியாமே? இப்போ ஒன்கையிலே தம் பிடிக்கு வழியுண்டா?...சொல்லு!அப்படி ஏதாச்சும்தெரியாமல் வச்சிருந்தா அதையும் எங்கிட்டே ரகசியமாய்ச் சொல்லண்ணே!"

அவனுடைய 'அணணே' ஒரு பதிலும் பேசாமல் விறகுப் படுக்கையிலிருந்து சற்றுமேலே எழும்பினர்.

அவ்வளவுதான்! கந்தசாமியின் மரியாதைப் பேச்செல்லாம் எங்கேயோ போய் ஓடி ஒளிந்துகொண்டது.

"அடத் தடியா! முண்டிப் பாக்கிறயா? நீ மாத்திரம் மேலே கிளம்பு; எலும்பை முறிச்சு எம்பது துண்டாப்போட்டுடறேன்."

படீர் படீரென்று மூங்கில் கழியால் நாலு போடு போட்டு விட்டு, "ஆளைப்பாரு ஆளை! மெத்தையிலே தூங்கின ஐயாவுக்கு விராட்டிக்குள்ளே தூங்கப்புடிக்கல்லியோ?" என்று உறுமினன்.

அதைக் கண்டு பயந்துதானே என்னவோ அப்புறம்அந்த 'அண்ணே' அந்தப் பக்கம் இந்தப் பக்கம் புரளவே இல்லை. வெகு சீக்கிரத்தில் சாம்பலோடு சாம்பலாய்க் கலந்துவிட்டார்! கந்தசாமியின் வேலையும் முடிந்துவிட்டது.

கையில் ஒண்ணேகால் ரூபாயும் நாலுமுழத் துண்டுமாக அவன் தன் குடிசைக்குள் நுழைந்தான்.

''ஒனக்கு ஒரு பயல் பொறந்திருக்காண்டா!'' என்று பொக்கைப் பல்லைக் காட்டிக்கொண்டே ஒரு கிழவி அவனை வரவேற்றாள்.

''அண்ணே முகத்திலே முழிச்ச அதிர்ஷ்டந்தான்போலேருக்கு'' என்றான் கந்தசாமி.

---



# நிலவொளியில்

**தோ**ட்டத்துக் கிணற்றின் சிமெண்டுத் தளத்தின் மேல், பாலாய்ப் பொழியும் நிலவொளியில் சாய்வு நாற் காலியை எடுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தேன். தெற்குப் பக்கத்திலிருந்து வந்த காவேரியின் குளிர்ந்தகாற்று தோட்டம் முழுவதும் மெதுவாக வீசிக்கொண்டிருந்தது.

என் மனம் என்னவோ அன்றைக்கு என்றும்இல்லாதபடி கட்டற்று இருந்தது. வெகு காலமாகச் சிறை வாழ்க்கை அனுபவித்த கைதி ஒருவன் ஒரு நாள் மாத்திரம் விடுதலை பெற்று, அவ்விடுதலை இன்பத்தில் முழுகியிருப்பதைப்போல் நானும் முழுகியிருந்தேன். என் நினைவுகளும் கனவுகளும் என்னிடமிருந்து வெகு தூரத்தில் சென்று முழு நிலவின் எழிலுருவத்தில் ஒன்றி விட்டன.

அலுவலகத்தில் 'ஜமாபந்தி' வேலைகளை யெல்லாம் ஒரு வழியாக அன்றுதான் முடித்துவிட்டு வந்தேன். இன்னும் சில நாட்களுக்கு வேலைத் தொந்தரவு அதிகமாக இருக்காது. இந்த ஆறுதலால் எழுந்த உற்சாகந்தான் எனது அப்போதைய கட்டற்ற தன்மைக்குக் காரணமோ என்னவோ?

வானத்து சந்திரனழகில் சொக்கியிருந்த என் கண்கள் வெகு நேரம் வரை அவ்விடத்தை விட்டு அகலவே இல்லை. நேரம் போனதே தெரியாமல் அப்படியே மெய்மறந்து இருந்துவிட்டேன்.

இத்தனை இன்பத்திற்கும் ஆழத்தில் துயரம் ஒன்று என்னை அரித்துக்கொண்டிருந்தது. அதை மறைப்பதற்காக நானே இப்படி என்னை உற்சாகப்படுத்திக் கொள்கிறேனோ என்றுகூட நினைத்தேன். அப்படியும் இருக்கலாம்.

''எசமான்'' என்ற குரல் பின்புறத்திலிருந்து கேட்டவுடன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன்.

கச்சேரிக் கேசவன் சிங்கமுத்து குனிந்தபடியே கும்பிடு போட்டுக்கொண்டு நின்று கொண்டிருந்தான்.

''என்ன சிங்கமுத்து, என்ன சமாசாரம்?'' என்றேன்.

''ஒண்ணுமில்லீங்க, இன்னிக்கி பக்கத்து ஊரிலே நாடகம். அவ இம்சை பொறுக்க முடியலே, அதனுலே...''

''அதனுலே...?''

''இன்னிக்கிக் கச்சேரி காவலுக்கு ராமனே வரச் சொல்லியிருக்கேன். அவனுடை முறையிலே நான் காவல் பார்த்துக்கிறேன்.''

''சரி, போயிட்டுவா.''

கும்பிட்ட கையை எடுக்காமல், வந்தவழியில் திரும்பி விட்டான் அவன்.

அவன் அந்த இடத்தை விட்டுப்போய் அரைநாழிகை பொழுதாகிவிட்டது. ஆனுல் அவனுடைய வார்த்தைகளில் ஒரு பகுதி மட்டும் திரும்பத் திரும்ப என் காதுகளில் ஒலித்துக்கொண்டே இருந்தது. ''அவ இம்சை பொறுக்க முடியல்லே. அதனுலே—''

அந்த வார்த்தைகளை அவன் சொல்லும்போது அவன் முகத்தில் ஏற்பட்ட குழைவைப் பார்க்கவேண்டுமே! இன்னும் அந்த பாவம் என் கண்முன் நிற்பதுபோல இருந்தது.

சிங்கமுத்துவுக்கு வயது அறுபதுக்கு மேலாகிவிட்டது. இதுவரையில் ஆணே, பெண்ணே அவனுக்கு ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. எவ்வளவோ பேர் அவனிடம் மறு கல்யாணம் செய்துகொள்ளும்படி சொல்லிவிட்டார்கள். அவனுடைய மனைவி தேவானையே இதைப்பல தடவை அவனிடம் கூறியிருக்கிருள். ஆனுல் இதற்கெல்லாம் சிங்கமுத்து சிறிதேனும் அசைந்தால்தானே?

'எனக்கு இனிமே கட்டையோடதான் மறு கல்யாணம்! எனக்குப் பிள்ளையும் வேண்டாம், கொள்ளியும் வேண்டாம்; அவ ஒருத்தியே போதும்'' என்று பெருமையோடு சொல்லிக் கொள்வான்.

சிங்கமுத்து என்னிடம் வந்து சொல்லிக் கொண்டுபோய் ஒரு நாழிகைப் பொழுதுக்குமேல் இருக்கும். அவனும் தேவானையும் இந்நேரம் நாடகம் பார்க்கப் புறப்பட்டிருப்

பார்கள். நான் மாத்திரம் முன்போலவே தனிமையில் உட்கார்ந்திருந்தேன்.

''அதிசயமான தம்பதிகள்!'' என்று அவர்களைப் பற்றி நினைக்கும்போது திடீரென்று என்னுடைய சொந்தக் குடும்ப வாழ்க்கையின் நினைவு வந்தது.

''ஏன் இதுவும் அதிசயந்தான்!'' என்று என்னுள்ளே இருந்து ஒரு குரல் என்னைப் பரிகசிப்பதாக உணர்ந்தேன்.

என் மனைவி தங்கம் தன் தாயார் வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்று பதினைந்து நாட்களுக்கு மேலாகிறது. இன்று வரை அவளிடமிருந்து ஒரு கடிதமும் வரவில்லை. இனியும் அவளிடமிருந்து ஒரு கடிதத்தையும் நான் எதிர்பார்க்கவில்லை. அப்படி ஏதாவது எதிர்பாராதவிதமாக வந்துவிட்டாலும் ஒருகாலும் அதற்குப் பதிலெழுதுவதில்லை என்று முடிவு செய்து கொண்டிருந்தேன்.

அவள் ஊருக்குப் புறப்படுவதற்கு முதல் நாள் மாலை; வேலையிலிருந்து சலித்துக் களைத்துப்போய்த் திரும்பி வந்தேன். அன்று அலுவலகத்தில் ஒரு குமாஸ்தாவுடன் ஏதோ ஒரு காரணமாகப் பெரிய சண்டை. கச்சேரி முடிந்து வெளியே வரும்போது, என்றுமில்லாத வெறுப்புடன் வண்டியில் ஏறினேன்.

வீட்டில் வழக்கம்போல் அவளுடைய அலங்காரம் முதல் தரமாக இருந்தது. தலை மயிரைத் தளதளவென்று வாரிப் பின்னிக்கொண்டு, அதில் மல்லிகைப் பூவைச் செருகியிருந்தாள். அவளுடைய உடலைச் சுற்றியிருந்த ஜரிகைக்கரை நீலநிறப் புடைவை அவளது அழகுக்கு அழகு செய்தது. குலுங்கும் வளைக்கரத்தால் ஒரு கிண்ணத்தில் சுடச்சுடத் தேநீரைக் கொண்டு வந்து வைத்தாள்.

வைத்தவுடன், ''என்னவோ மாதிரி இருக்கிறீர்களே, ஏன்?'' என்றாள் பரிவோடு.

''ஒரு மாதிரியும் இல்லையே; நன்றாகத்தானே இருக்கிறேன்.''

''ஊஹூம்! என்றும் போலில்லை. என்னமோ மனதில் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.''

''அதெல்லாம் ஒன்றும் இல்லை.''

''ஒன்றுமில்லை என்றால் முகம் ஏன் இப்படியிருக்கிற தாம்?''

''எப்படியிருக்கிறதாம்?''

''கண்ணாடியைக் கொண்டுவந்து காண்பிக்கட்டுமா? என்னைப் பிடிக்காவிட்டால் பிடிக்கவில்லை என்று சொல்லுங் களேன்! எதற்காக முகத்தைத் தூக்கிக்கொண்டு இருக்கிறீர் கள்? என்னுடன் பேசுவதென்றால் உங்களுக்குக் கசப்பாயிருக் கிறதோ?''

''ஆமாம்; கசப்புத்தான்.''

''அதுதான் தெரிந்து கிடக்கிறதே?''

''எதுதான் தெரிந்து கிடக்கிறது?''

''எதுவாயிருந்தால் உங்களுக்கென்ன; அதை ஏன் நீங்கள் கேட்கிறீர்கள்!''

''ரொம்ப சரி; என்னோடு நீ பேசவேண்டாம்!''

''நான் ஒன்றும் பேச வரவில்லை.''

''போய் வேலையைப் பார்; இங்கு நிற்காதே!''

சுட்டெரித்து விடுவதுபோல் என்னை வெறித்து நோக்கினாள் தங்கம். அவளுடைய முகமெங்கும் குப்பென்று ரத்தம் பாய்ந்து சிவந்தது.

திடீரென்று, ''நாளைக்கு நான் ஊருக்குப் புறப்பட வேண்டும்; காலையில் கட்டாயம் அனுப்பிவையுங்கள்'' என்று அறையில் புகுந்து துணிமணிகளை எடுத்துப் பெட்டிக்குள் வைக்க ஆரம்பித்தாள்.

''தாரளமாகப் புறப்படேன்! நான் என்ன உன்னை அனுப்பி வைப்பதற்கு? உன்னுடைய தம்பிதான் இருக்கிறானே, நல்ல வேளையில் அவனைக் கூட்டிக்கொண்டு போய்ச் சேருவதுதானே!'' என்றேன்.

அன்று இரவு சாப்பிடும்போது சமையற்காரன்தான் பரிமாற வந்தான். மறுநாள் புறப்படும் வரையில் அவள் பச்சைத் தண்ணீர்கூடப் பல்லில் ஊற்றவில்லை. அதைப்பற்றி ஒன்றும் நான் காதில்போட்டுக் கொள்ளாமல் வழக்கம்போல என் அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தேன்.

ஊருக்குப் புறப்படும் சமயத்தில் சுந்தரம் என்னிடம் வந்து, "நானும் அக்காளும் ஊருக்குப் போய் வருகிறோம்" என்றான்.

''தாராளமாகப்புறப்படுங்கள். உன் அக்காளை மாத்திரம் நான் வந்து அழைக்காமல், மத்தியில்இங்கு அனுப்பவேண்டா மென்று உன் அப்பாவிடம் சொல்லிவை'' என்றேன்.

"வந்து அழைத்தாலும் வரப் போவதில்லை என்று இப் போதே சொல்லிவிடு, சுந்தரம்!'' என்று வெடுக்கென்று கூறிவிட்டு, கதவின் மறைவில் நின்ற தங்கம், அவன் கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக்கொண்டு வெளியே வேக மாக நடந்தாள்.

இந்தவேலைத் தொல்லைகளுக்கிடையில் பலமுறை இப்படி நடந்திருக்கின்றன. தாலுகா ஆபீஸ் உத்தியோகத்தில் பெண்டாட்டியிடம் பேச எங்கே நேரம்? இது ஏன் இவ ளுக்குத் தெரியவில்லை.

ஆனால் இப்படிப் புறப்பட்டுப் போவாள் என்று நானும் நினைக்கவில்லை. போகட்டுமே!

'அதிசயமான குடும்ப வாழ்க்கை!'—மீண்டும் அதே நினைவு வந்தது.

யாருடைய வாழ்க்கை அதிசயமானது? என்னுடையதா, சிங்கமுத்துவினுடையதா? அல்லது இருவருடையதுந்தானா?

இருவருடையதுமே ஒரு வகையில் அதிசயமானதுதான். ஆனால் அதன் போக்குத்தான் ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாத நேர் விரோதமானது. அறுபது வயதாகியும் சிங்க முத்து தன் கிழட்டு மனைவியுடன் குடும்ப வாழ்க்கையில் சுகத்தைக் காண்கிறான். முப்பது வயதுக்குள்ளேயே நான் இவ்விளமை வாழ்க்கையில் சலிப்பையும் வெறுப்பையும்காண் கிறேன்;—இதுதான் எங்கள் இருவருக்கும்உள்ள வேற்றுமை.

ஆனால், இதுவரையில் என்னுடைய குடும்ப வாழ்க்கை முழுவதுமேஇப்படித்தான் சுவையற்றுக் கழிந்திருக்கின்றதா? நான் இன்பமென்று எண்ணி மகிழ்ந்திருந்தேனே அதெல் லாம் துன்பந்தானா?

அப்படியானால், இதே தோட்டதில், இதே தனிமையில், இதேபோல் இரவில் என் அருகில் நின்றுகொண்டு தன் குமுதச் செவ்வாயால் குழையக் குழையப் பேசி என் மனத்தை மயக்கியிருக்கிறளே தங்கம், அதெல்லாம் இன்பம் அல்லவா? இதே பால் நிலவு தன் இதயதாபத்தைக் கலேத்த தற்காக என்னெதிரே பொற்சிலேபோல் நின்று மார்பகம் விம்மப் பெருமூச்செறிந்திருக்கிருளே, இந்தக்காட்சியையெல்லாம் குடும்பச் சுமையின் துன்பமென்ரு சொல்வது?

நிலவு உச்சிக்கு வரும் வரையில் அவ்விடத்திலேயே இருந்துவிட்டுப் பிறகு எழுந்து படுக்கைக்குச் சென்றேன்; மூன்று மணி அடித்த பிறகுதான் உறக்கம் வந்தது.

ஆபீஸ் கட்டுகளின் முன்பு உட்காரும்போது மனேவியிடமிருந்து சில தினங்களுக்கு விடுமுறை கிடைத்ததாக எண்ணி மகிழ்ந்ததுண்டு.

இந்த நிலவொளி அதைப் பொய்யாக்கிவிட்டது.

காலே ஒன்பது மணிக்குப் படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது சமையற்காரப் பையன் காபியும் கையுமாக எதிரே நின்று கொண்டிருந்தான்.

யோசனே எனக்கு ஒன்றிலும் ஓடவில்லே; முதல் வேலேயாகச் சேவகனே அழைத்து,''உடனே புறப்பட்டு வா!—அவசரம்!'' என்று தங்கத்துக்குத் தந்தி கொடுத்துவிட்டு வருமாறு அனுப்பினேன்.

அவன் வாசற் கதவருகில் போவதற்குள் என் காதுகளில் சில வார்த்தைகள் இன்னிசை போல் ஒலித்தன.

''ராமா! ஐயாவிடம் போய் அம்மா ஊரிலேருந்து வந்துட்டாங்க. உள்ளே வரலாமான்னு உத்தரவு கேட்கச்சொன்ஞங்கன்னு கேளு'' என்ருள் தங்கம்.

ராமனும் அவளிடம் உடனே உள்ளதை ஒளிக்காமல் அப்படியே சொல்லிவிட்டான். ''உங்களே வரச் சொல்லித்தானம்மா இப்போ ஐயா தந்தி கொடுத்துவரச் சொன்ஞங்க!'' என்ருன்.

நானே எழுந்து சென்று ''வா, தங்கம்! வழி தெரிந்ததா?'' என்று அவள் கையில் இருந்த பெட்டியை வாங்கினேன்.

அன்றைக்கு இரவில் எங்களுக்கு நிலவொளி பேரானந்த மாக இருந்தது. வானத்துச் சந்திரனைப் பார்ப்பதற்குப் பதிலாக என் அருகே உதயமாயிருந்த தங்கத்தின் களங்க மற்ற மதிவதனத்தில் கண்களைப் பதித்திருந்தேன். ''ஆமாம், இன்றைக்கு நீங்கள் என்னை முற்றும் ஏமாற்றி விட்டீர்கள்!'' என்றாள் தங்கம்.

''எந்த விஷயத்தில்?''

''வரவேற்பு விஷயத்தில்தான்! நான் நினைத்தது வேறு, நீங்கள் செய்தது வேறு.''

''நீ மாத்திரம் உன்னுடைய எதிர்பாராத வரவால் என்னைத் திகைக்கச் செய்யவில்லையா?''

''ஓ! இதற்கெல்லாம் காரணம்?''

''அதோ பார்; அந்தப் பொல்லாத நிலவுதான்!''

''உண்மையிலேயா? இதே நிலவுதான் நேற்று இரவு என் நெஞ்சைக் குலைத்து என்னை இங்கே இழுத்து வந்தது!''

''சரி, அது கிடக்கட்டும்; இங்கே அருகில் வா.''

எங்கள் தனிமையைக் காண வெட்கப்படுவதுபோல் நிலவு ஒரு சிறிய மேகத் திரையின் பின்புறம் தன் முகத்தை மறைத்துக் கொண்டது.

---



# நொண்டிக் குப்பன்

சென்ற ஓராண்டுக்குள் இந்த உலகத்தில் ஏற்பட்ட எத்தனையோ மாறுதல்களில் எங்கள் ஊர் நொண்டிக் குப்பனின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாறுதலும் ஒன்று.

சென்ற ஆண்டில், உடுத்திக்கொள்ளப் போதுமான துணி மணி கிடைக்காத காரணத்தால், குப்பன் கிழிந்துபோன கந்தல் துணிகளை ஒட்டுப்போட்டுத் தைத்துக் கட்டிக்கொண்டிருந்தான். இந்த வருடத்திலோ அதே குப்பன் எப்பேர்ப்பட்ட நல்ல ஆடைகள் அவனுக்குக் கிடைத்த போதிலும் அவைகளைக் கிழிக்காமல் கட்டிக்கொள்வதில்லை என்ற சபதத்துடன் இருக்கிறான்! முன்பெல்லாம் அதிகாலையில் எழுந்து, ஆற்றில் குளித்துவிட்டு, விபூதியைப் பட்டை பட்டையாய்ப் பூசிக்கொண்டு தகரக் குவளையுடன் பிச்சை எடுக்கக் கிளம்பி விடுவான். இப்போதோ பசி, தாகம், உறக்கம், விழிப்பு ஒன்றையுமே கவனிக்காமல் அவன்பாட்டிற்குக் கட்டற்றவனாகத் திரிகிறான். இந்த உலகத்தில் வாழும் விவகாரத்திற்கு அவசியமான தேவைகளைப்பற்றி அவனுக்குச் சிறிதேனும் கவலையே இல்லை. காரணம், முன்பு அவன் பிச்சைக்கார நொண்டிக் குப்பன்; இப்போது பைத்தியக்கார நொண்டிக் குப்பன்!

கடந்தபோன ஒரு வருடம் அவனுக்கு அளித்த முக்கியமான மாறுதல் இதுதான்.

அவனுக்கு ஏன் இந்த மாறுதல் ஏற்படவேண்டும்? அதுதான் நான் கீழே சொல்லப்போகிற கதை.

* * *

''ரெண்டு நாலணா, மூணு ரெண்டணா, அஞ்சு காலணா ஆக மொத்தம் பதினஞ்சே காலணா; இன்னும் ஒன்பது தம்படி சேர்த்தால் ஒரு ரூபாய்;—ஒரு முழு ரூபாய்!''

நொண்டிக் குப்பன் ஒரு பெரிய புளியமரத்தின் வேர் ஒன்றில் உட்கார்ந்துகொண்டு தன்னுடைய பணப் பையை மடியில் கொட்டி, அதில் இருந்த காசுகளை வாய்க்குள் மெது வாக முனகியவாறே, ஐந்தாவது முறையாக எண்ணிப் பார்த் தான். ஐந்து தடவை கவனமாக எண்ணிய பிறகும் அந்தப் பணம் முதலில் இருந்த அதே தொகைதான்;—பதினைந்தே காலணுதான்!

'இன்னும் முக்காலணுச் சேர்க்கவேண்டும். ஒரு பெரிய காரியமல்ல! இரண்டு மூன்று நாளைக்குள் சேர்த்துவிடலாம். ஆனால் அதன் பிறகு அதை என்ன செய்வது? எப்படிச் செல வழிப்பது!—செலவழிப்பதா இல்லை, சேர்த்து வைப்பதா?'

இப்போதுதான் நொண்டிக் குப்பனுக்கு அவன் வாழ்க் கையில் முதல் முதலாகப் பணம் சேமித்து வைக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. அந்த எண்ணம் ஏன் தோன் றியதோ நமக்குத் தெரியாது; அந்தக் குப்பனுக்குக்கூடத் தெரியாதென்று சொல்லலாம். என்னவோ ஆசை பிறந்தது; சேர்க்க ஆரம்பித்தான்; அவ்வளவுதான். உலகத்திலே பணம் சேர்க்கும் ஒவ்வொருவரும் ஒரு காரணத்தைத் தேடி வைத்துக்கொண்டா சேர்க்கத் தொடங்குகிறார்கள்?

குப்பன் தன்னுடைய கவைக்குச்சியின் உதவியால் நொண்டி நொண்டி நடந்துகொண்டு, தெருத் தெருவாய்ப் பிச்சையெடுக்க வருவான். அவன் பாடிக்கொண்டு வரும் ரரமலிங்கசுவாமிகளின் அருட்பா அந்தத் தெருவெல்லாம் உருக்கத்தோடு கேட்கும். மணிமணியாகத் தெளிவாய்க் கணீரென்று ஒலிக்கும் அந்தப் பாடல்களைக் கேட்டு விட்டு, அநேகமாக அந்தத்தெருவில் உள்ள எல்லோருமே அவ னுக்குப் பிச்சையிடுவார்கள். தன் வயிற்றைக் கழுவப் போது மான பிச்சை அன்றைக்குக் கிடைத்துவிட்ட தென்றால், பேசாமல் தெற்குத் தெருவில் இருக்கும் ஒரு புளியமரத்த டிக்கு வந்து விடுவான். அங்கே ஒழிந்த நேரத்தில் தன்னிடம் இருக்கும் அருட்பா, பட்டினத்தார், தாயுமானவர் முதலிய புத்தகங்களை மெதுவாக மனப்பாடம் செய்வான்.

அவ்வப்போது அவனுக்குக் கிடைக்கும் சில்லரைக் காசுகளுக்கும் அவனுடைய சில்லறைத் தேவைகளுக்கும் சரியாக இருக்கும். நாளைக்கு என்ற கவலையே அவனிடம் கிடையாது. கலக்கமோ, கட்டுப்பாடோ, மகிழ்ச்சியோ, சஞ்சலமோ இவை ஒன்றிலும் அதிகமாக அகப்பட்டுக் கொள்ளாமல் அவன் நாட்களை ஓட்டிவந்தான்.

இந்த ஒரு மாத காலமாகவே குப்பனின் அழுக்குப் பிடித்த துணிப்பையில் நாலு காசுகள் சேர்ந்தாற்போல் குலுங்க ஆரம்பித்திருக்கின்றன. அவனும் அவைகளை வைத்துக்கொண்டு ஆரம்பத்தில் என்ன எல்லாமோ யானை குதிரை வாங்கும் யோசனைகளைச் செய்துவிட்டான். ஆனால் யோசனைதான் பலமாக இருந்ததே தவிர, அத்தியாவசிய மாகத் தோன்றிய இரண்டொரு செலவுகளுக்குக்கூட அவனு டைய கைக்காசுகள் தாராளமாக முன்வரவில்லை.

'எல்லாம் முழு ரூபாயாய்ச் சேர்ந்த பின்பு செலவைப் பற்றிக் கவனித்துக் கொள்வோம்' என்று சும்மா இருந்து விட்டான்.

அவனுடைய பணப்பையை இடுப்பில் செருகப்போன அதே சமயத்தில், அந்தப் பக்கமாக ஒரு தோட்டி கையில் ஒரு நாய்க்குட்டியைப்பிடித்து இழுத்துக் கொண்டு போனான். நாயின் கழுத்தில் கட்டியிருந்த கயிறு அதை சுருக்கிட்டுக் கொல்லுவதுபோல் அவ்வளவு இறுக்கமாகக் கட்டப்பட்டிருந் தது. குப்பனால் அந்தக் காட்சியைப் பார்த்துச் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை.

''ஏ, தோட்டி; இங்கே வா.''—அவன் வந்தான்.

''நாய்க்குட்டியை இப்படிக் குரல்வளையிலே கட்டிப் போட்டா அது செத்துப் போகாது?''

''போனாப் போகுதே! ரெண்டு நாளையிலேயே சாகப் போற குட்டி இப்பவே செத்துப் போனாத்தான் என்ன? குடியா முழுகிப்போயிடும்?''

''ஏண்டா சாகுது ரெண்டு நாளையிலே?''

''இதைப் புடிச்சா இதோட சொந்தக்காரர் ஏதாவது தருவாருன்னு பார்த்தேன்; அவர் பைசாக் குடுக்கிற வழியா

இல்லே. 'தாராளமாய்ப் புடிச்சிக்கோ; எனக்கு இது தேவையில்லே'ன்னு சொல்லிவிட்டார். நான் இதை, முனிசிபல் ஆபீசுக்குக் கொண்டு போறேன்.''

''முனிசிபல் ஆபீசுலே இதை என்னடா செய்வாங்க?''

''ரெண்டு நாள் வச்சிருந்துட்டு, நாய்க்காரர் வந்து பணங் குடுக்காட்டி, சாகடிச்சிடுவாங்க.''

''அட,பாவமே!''

இரக்கம் நிரம்பிய கண்களால் அந்த நாய்க்குட்டியை உற்றுப் பார்த்தான் குப்பன். அந்த நாய்க்குட்டியும் அவனேயே பரிதாபமாகப் பார்த்தது. 'என்னே மரணத்தின் கையிலிருந்து தப்புவிக்க முடியாதா' என்று அவனே நோக்கிக் கேட்பது போல இருந்தது அதன் பார்வை.

குப்பனுடைய முகம் திடீரென்று மலர்ந்தது.

''எனக்கு இதைக் குடுத்துட்டுப் போயேன்; நான் வளத்துக்கிறேன்'' என்றுன்.

''சரிதான்! அப்புறம் என்னேடை வரும்படி? எனக்கு ஒரு நாய்க்குக் கால் ரூபாய் தருவாங்களே முனுசிபாலிடியிலே.''

''அதை நான் தாரேண்டா!''

''ஊஹூம், முடியாது; இதெல்லாம் சர்க்கார் சங்கதி!''

கடைசியில் வெகுநேரம் அந்தத் தோட்டியோடு வாதமிட்டுத் தன் கையில் இருந்த காசையெல்லாம் கொடுத்து அந்த நாயை விலேக்கு வாங்கினுன். ஊருக்குப் பாரமாய்ப் பிறந்த நாயும் ஊருக்குப் பாரமாய்த் திரிந்த மனிதனும் ஒன்று சேர்ந்தார்கள்.

## 2

பொன்னி—அந்த நாய்க்குட்டிக்கு அவன் இட்ட புதுப் பெயர்—குப்பனின் கைக்கு வந்ததிலிருந்து குப்பனின் தினசரிப் போக்கிலேயே ஒரு புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டது. அவனுக்கு வாழ்க்கையில் பற்றுதலும் நம்பிக்கையும் தேவைகளும் அதிகமாக வளர்ந்து கொண்டே வந்தன.

புளிய மரத்தடியை இருப்பிடமாகக் கொண்டிருந்த குப்பன், அவ்விடத்தை வெறுத்து, ஊருக்கு அப்பாலுள்ள ஒரு பாழடைந்த காளிகோவிலுக்கு ஒரு நல்ல நாள் பார்த்துக் குடியேறினன். இரண்டு மூன்று சட்டி பானைகள், ஒரு தகரக் குவளை, ஒரு துணி மூட்டை இவைகள் இருந்த இடத்தில் இப்போது சிற்சில பித்தளைப் பாத்திரங்களும் ஒரு நாய்ச் சங்கிலியும் புதிதாகக் காணப்பட்டன.

அவனுடன் பிச்சையெடுப்பதற்கு அவனுடைய பொன்னியும் அவனைத் தொடர்ந்து செல்வது வழக்கமாகிவிட்டது. பொன்னி தன் வாயில் ஒரு தூக்குச் சட்டியைக் கவ்விக் கொண்டு அவனுக்குப் பின்னல் ஓடி வரும். இருவரும் சேர்ந்து பிச்சை யெடுத்து முடிந்தவுடன் மெதுவாகத் தங்களது இருப்பிடத்திற்கு வருவார்கள். கிடைத்த பழைய சாதத்தைக் காலை ஆகாரமாக வைத்துக்கொண்டு, இருக்கும் அரிசியைச் சமைத்து மதியத்திற்கும் இரவுப் பொழுதுக்கும் வைத்துக் கொள்வார்கள்.

வழக்கம்போல் ஒரு நாள் மதியச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு, புத்தகமொன்றைக் கையில் எடுத்துப் படிக்கத் தொடங்கினன் குப்பன்.

**''தந்தை தாய் தமர் தார**
**மகவென்னு மிவை யெல்லாம்**
**சந்தையிற் கூட்டமிதிலோ**
**சந்தேகமில்லை...''**

இதைப் படிக்கும்போது அவனுடைய கண்களில் நீர் ஊற்றுப் பெருக்கெடுத்து ஓடியது. அந்த வரிகளையே திரும்ப இதயக் குழைவோடு மெய்ம்மறந்து பாடினன். உணர்ச்சி எல்லையை மீறிவிட்டது.

இத்தனை தினங்களாய் அவன் மறந்து விட்டிருந்த ஆசா பாசங்கள், இன்று அவன் நெஞ்சத்தைக் கலைத்தன. அலை கடலில் அகப்பட்ட சிறு துரும்பைப்போல் உள்ளம் நிலை யற்றுத் தவித்தது.

பத்துப் பதினெரு வருடங்களுக்குமுன்பு இதே வார்த்தைகளை யார் சொல்லியிருந்தாலும் அவன் அதை அப்படியே நம்பியிருக்க மாட்டான். ஆனல் இன்றைக்கு அவன் அதை அப்படியே நம்பித்தான் ஆக வேண்டும். இவ்வார்த்தைகளின் கருத்தை அனுபவத்தின் வாயிலாக அவன் அறிந்திருக்கும்போது அவனல் அதை எப்படி மறுக்க முடியும்?

'எல்லோரும் இருந்தார்களே. அவர்களெல்லாம் இப்போது எங்கே? நான்தானே இருக்கிறேன் தனியாக!... ஆமாம்; நான் உயிருடன் இருக்கும் வரையில் நான்மாத்திரம் தான் இருப்பேன்!—நான் போகும்போதுகூட நான் மாத்திரம்தான் போவேன்!...என்ன பயங்கரமான தனிமை இந்த உலகத்தில்!'—வாழ்க்கையின் நிரந்தர ஏகாந்தத்தை எண்ணி ஏங்கியது அவன் மனம்.

இந்தச் சமயத்தில் திடீரென்று அவனுடைய பொன்னி குறுக்கே பாய்ந்து அவன் கையில்இருந்த புத்தகத்தைக் கீழே தள்ளியது. கீழே விழுந்த புத்தகத்தைத் திரும்பவும் எடுக்காமல் அப்படியே பொன்னியை மார்புடன் வாரி அணைத்துத் தன் ஆர்வமெல்லாம் தீர அதை முத்தமிட்டான்.

அவனுடைய இறந்துபோன தாய், தகப்பன், மனைவி, மக்கள் இவர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து அவன் எதிரில் தோன்றியிருந்தால்கூட அவன் அவ்வளவு மகிழ்ச்சியடைந்திருக்கமாட்டான்; பொன்னியின் ஸ்பரிசம் அந்த நிமிடத்தில் அவனை அவ்வளவு தூரம் மெய்ம்மறக்கச் செய்துவிட்டது.

''நீதானம்மா எனக்குத் துணை, நான் செத்துப் போனப் பறங்கூட!..........இப்படியேதான் எல்லோரையுமே மறந்து போறது!.........ஆனல் இனி இந்த உயிரை இந்தக் கட்டையிலே கிடக்கிறமட்டும் உன்னை மறக்கவே மாட்டேன்.''

அவன் படித்த வேதாந்தமெல்லாம் அவனுடைய புத்தகத்தளவிலேயே நின்றுவிட்டது.

சில தினங்களாகப் பொன்னிக்கு உடல் நலமில்லை; சுறுசுறுப்பற்றுச் சோர்ந்துபோய் ஒருமூலையில் சுருண்டு கிடந்தது. எழுந்து நடக்கக்கூடச் சக்தி இல்லை; வேளைக்குச் சாப்பிடுவதும் இல்லை.

இன்னதுதான் செய்வதென்று தெரியாமல் குப்பன் தன்னால் முடிந்த வைத்தியமெல்லாம் செய்து பார்த்து விட்டான். அந்தப் பக்கத்தில் வளர்ந்து கிடந்த செடி கொடிகளில் ஒன்று விடாமல், எல்லாவற்றிலும் சாறுபிழிந்து அவன் சகோதரப் பிச்சைக்காரன் ஒருவனுடைய யோசனைப் படி அதையும் மருந்தாகக் கொடுத்தான். என்ன செய்தும் பலன் ஏதும் கிடைக்கவில்லை.

மற்றவர்களைப்போலத் தன்னுடைய நாய்க் குட்டிக்கு மிருக ஆஸ்பத்திரியில் வைத்தியம் செய்யலாமென்றாலோ, அதை நினைக்கும்போதே அவனுக்கு அது 'வெறும் ஆசை' என்று தோன்றிவிட்டது; இருந்திருந்தும் ஓர் ஏழைப் பிச்சைக்காரன், தன்னுடைய நாய்க்கு ஆஸ்பத்திரி வைத்தியம் கிடைக்குமென்று எதிர்பார்க்கலாமா?

குப்பன் பிச்சை வாங்கும் நேரத்திலெல்லாம் அவனுடைய நினைவு கோயிலில் தனியாகத் துவண்டு கிடக்கும் பொன்னியிடமே சுற்றிக் கொண்டிருக்கும். நாலு தெருக்கள் கூடச் சரியாகப் போய்ப் பார்க்காமல் அவசரம் அவசரமாக இருப்பிடம் திரும்பி விடுவான். வந்தவுடன் அதன் முகத்தை ஒரு தரம் பார்த்து அன்றைக்கு யாரிடமாவது தான் கேட்டு வந்த ஒரு புது வைத்தியத்தை அதற்குச் செய்தால்தான் அவன் மனம் நிம்மதி அடையும்.

## 3

பொன்னி, தன்னுடைய நண்பன் கொண்டுவந்து கொடுத்த மருந்தின் காரணத்தாலோ அல்லது அவன் வேண்டிக்கொண்ட அந்தக் காளிதேவியின் அருளினாலோ சிறிது சிறிதாகக் குணமடைந்து வந்தது. அதன் உயிருக்கு வந்த ஒரு பெரிய கண்டம் தனது காரியம் பலிக்காமல் தோற்றுப் போய் ஓடிவிட்டதென்று குப்பன் கருதினான். தோல்வியின் அதிர்ச்சியிலேதான் வெற்றி பிறக்கிறது போலும்!

தனியாக ஒரு நாள் அவன் ஊருக்குள் சுற்றிவிட்டுத் திரும்பும்போது அந்தக்கோயிலில் அவனுடைய நாய்க்குட்டி

காணப்படவில்லை. எங்கெங்கேயோ அலைந்து திரிந்து பார்த்தான். "பொன்னி, பொன்னி" என்று கூவிக்கொண்டே சுற்றுப் புறத்தின் ஒவ்வொரு மூலை முடுக்குகளையும், புதர்களையும் பள்ளங்களையும் தேடி விட்டான்.

தேடிக் களைத்த பின்புதான் அவனுக்கு இந்த யோசனை வந்தது; 'ஒரு வேளை, தோட்டியின் கையில் அகப்பட்டிருக்குமோ!......லைசென்சு வாங்காத நாயாச்சே!'

இதை நினைத்த மாத்திரத்திலே அவன் நெஞ்சு குபீரென்று பற்றிக்கொண்டு எரிவதுபோல இருந்தது.

எத்தனையோ ஆயிரந் தடவை அவன் தன்னுடைய பொன்னிக்கு 'லைசென்சு' வாங்குவதைப்பற்றி எண்ணமிட்டிருக்கிறன். ஆனால் இந்த எண்ணமெல்லாம் அவனிடம் கீழ்க்கண்ட முடிவைத்தான் கொண்டுவந்தன.

'நொண்டிப் பிச்சைக்காரன், வீடு வீடாய்ச் சென்று ஒரு பிடிச் சோற்றுக்குக் கையேந்துபவன், தன்னுடைய நாய்க்குட்டிக்கு 'லைசென்சு' வாங்கி யிருக்கிறனென்றல் அந்த ஊர் அவனைப்பற்றி என்ன நினைக்காது?...இருக்கும் பரதேசிப் பிழைப்பிலும் மண்ணை வாரிப் போட்டுக்கொள்வதற்காகவா இந்தக் குருட்டு யோசனை?'

அவனுடைய மனத்திற்குள் ஏதோ ஒன்று சொல்லியது, பொன்னி தோட்டிகளிடந்தான் அகப்பட்டு விட்டதென்று.

"ஐயையோ! நான் அப்பவே என் பொன்னிக்குத் தகடு வாங்காமல் இருந்து விட்டேனே!" என்று அலறினன்.

நாய்களை அடைத்து வைத்திருக்கும் அந்த முனிசிபல் கட்டிடத்திற்குப் போய்ப் பார்த்ததில், பொன்னி அங்கே தான் சிறை வைக்கப்பட்டிருந்தது.

## 4

இரண்டு கைகளுக்குள்ளும் தலையைக் கவிழ்த்துக் கொண்டு, அந்தக் காளிகோயில் மண்டபத்தில் கல்லாய்ச் சமைந்து உட்கார்ந்திருந்தான் குப்பன். "ரெண்டு ரூபாய் எட்டணுவாமே! நாளைக்குச் சாயந்தாரத்துக்குள்ளேயாமே! ...குடுக்காட்டி?"

'நாளன்னைக்குக் காலை பத்து மணிக்கு என்னுடை பொன்னி கூண்டுக்குப் போயிடும். அதற்கப்புறம் நான் அதைப் பார்க்கவே முடியாது. இது சர்க்கார் சட்டம்! ரெண்டரை ரூபாய் இல்லையென்றால் எமவாதனை! இந்த ரூபாய்க்கு நான் எங்கே போறது? யாரிடம் கேட்கிறது?'

தன் துணிப்பையைத் தலைகீழாக உதறினான். ஐந்து தம்பிடிகள் நாலாபுறமும் உருண்டு ஓடின. தன் சாமான்களை யெல்லாம் ஒரு தரம் கவனித்தான். ஒரு தூக்குச்சட்டி, ஒரு குவளை, ஒரு நாய்ச்சங்கிலி இவையே உருப்படியாக விற்பனைக்குத் தயாராக இருந்தவை. இவற்றை விலைக்குக் கொடுத்து வந்ததில் ஒன்றே முக்கால் ரூபாய் கிடைத்தது. இன்னும் முக்கால் ரூபாய்தான் தேவை.

இந்த முக்கால் ரூபாய்க்காகக் கெஞ்சாத இடமெல்லாம் கெஞ்சினான்; பிச்சைக்காரர்கூட்டத்தில் தனக்கு இருந்தசெல்வாக்கை யெல்லாம் பிரயோகித்துவிட்டான். சிறிதேனும் பலனளித்தால்தானே?

''ஒரு நாய்க்குட்டிக்காக இப்படிக் கிடந்து உயிரை விடலாமா?'' என்றார்கள் எல்லோரும்.

பொன்னியைக் கூண்டுக்குக் கொண்டுபோகிற தினம். ஒவ்வொரு நிமிடத்தையும் பதைபதைக்கும் உள்ளத்தோடு எண்ணிக்கொண்டிருந்தான் குப்பன். மணி ஒன்பதுக்கு மேலாகிவிட்டது. அவனுடைய பொன்னியின் உயிர் அந்தக் கடைசி மணி நேரத்தையும், அவனது கையில் குறைவாக இருந்த சில சில்லறைக் காசுகளையும் எதிர் நோக்கி, அவை இரண்டிற்கும் மத்தியில் ஊசலாடிக் கொண்டிருந்தது.

காசு எப்படியோ கிடைத்துவிட்டது! தான் கடன் வாங்கியதைப்போல் பத்து மடங்கு திரும்பக் கொடுத்துவிடுவதாக வாக்களித்து ஒருவனிடம் வாங்கினான். இந்த மாதிரி ஆபத்தில் உதவி செய்த அந்த நண்பனைத் தன் உயிருள்ள வரையில் மறந்துவிடக்கூடாதென்று முடிவு செய்துகொண்டான்.

கையில் காசை இறுக மூடிக்கொண்டு, வழியில் கால்கள் தரையில் ஊன்றுவதுகூடத் தோன்றாமல், அவ்வளவு வேக

மாக ஓடினான். கால வேகத்தின் எல்லையை மீறி, அதைத் தடுக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தது அவன் மனம்...ஆனால்?

''டாண்! டாண்! டாண்!''—அடித்துக்கொண்டே இருந்தது மணிக்கூண்டுக் கடிகாரம். ஒன்று...இரண்டு... பத்து.

பத்து மணி! குப்பனின் தலையில் ஒவ்வொன்றாய்ப் பத்து இடிகள் விழுவது போலிருந்தது. பெருமூச்சின் வேகத்தை அடக்கமுடியாமல் பொங்கி வடியும் மார்போடு முனிசிபல் கூண்டின் எதிரே போய் நின்றான். கூண்டிற்குள் அவனுடைய பார்வை பாய்ந்தது.

அங்கே அவன் கண்ட காட்சி! ஐயோ! நாகரிக மனிதர்கள் வாழும் உலகந்தானா இது?

'கிளிக்' என்றெழுந்தது ஒரு சத்தம். கண்ணிமைக்கும் நேரங்கூட இல்லை. பொன்னியின் கண்கள், பாதங்கள், வாய் இவற்றிலெல்லாம் மின்னலைப்போல் ஓர் ஒளி படர்ந்து மறைந்தது. அடுத்த கண நேரத்தில், இரும்புச் சங்கிலியில் மாட்டிய ஒரு வளையத்தில், தன் தலையைக் கொடுத்தவாறே ஊசலாடிக் கொண்டிருந்தாள் பொன்னி.

''என்னோட பொன்னி சாமி!'' என்று கதறினான் குப்பன்.

''இந்தா உன்னுடைய பொன்னி...''

உயிரற்ற பொன்னி அவன் காலடியில் வந்து தொப் பென்று விழுந்தாள்.

குப்பன் ஒரு பயங்கரச் சிரிப்புச் சிரித்தான். அந்தச் சிரிப் பொலியின் அலைகள் முனிசிபல் கச்சேரியின் சுற்றுச் சுவரி லெல்லாம் மோதி எதிரொலித்தன. அவன் இன்னமும் சிரித்துக்கொண்டுதான் இருக்கிறான். அவன் பைத்தியக் காரன்!

* * *

''பிச்சைக்கார நொண்டிக் குப்பனுக்குப்பைத்தியமாமே? அவனுடைய நாய் செத்துப் போனதால்தான் அவனுக்குப் பைத்தியம் பிடித்ததாமே? இது என்ன ஆச்சரியம்!''

''அவனுக்கு வெறும் நாய்க்குட்டியில்லே அது! ஆசையும் பாசமும் காட்டி, அவனிடம் அன்பு செலுத்தாத இந்த உலகத்திலே, அவனிடம் நன்றி செலுத்தி அவனை மதிச்ச ஒரு உயிர் அது. அந்த உயிருக்காக அவன் நடத்திய போராட்டத்திலே தோற்றுப் போய்விட்டான், ஐயா!''

எங்கள் ஊர்த் திண்ணைப் பேச்சில் அடிபட்ட இச்சொற்களைப் பேசியவர்கள், குப்பன் வந்து கடன் கேட்டுக் கெஞ்சியபோது அவனை விரட்டியடித்தவர்கள்.

---



# கோஷா

'தநுஷ்கோடி எக்ஸ்பிரஸ்' எழும்பூரை விட்டுக் கிளம்பி மூன்று மணி நேரத்திற்கு மேல் இருக்கும். அதில் இரண்டாவது வகுப்பு வண்டியில் நான் மாத்திரம் இப்போது தனியாக உட்கார்ந்திருந்தேன், இதுவரையில் என்னுடன் இதே வண்டியில் பிரயாணம் செய்துவந்த ஒரு வட நாட்டாருடைய குடும்பம் சற்று முன்புதான் ஏதோ ஒரு ரயிலடியில் இறங்கிச் சென்றது.

அவர்கள் எந்த ஊரில் இறங்கிச் சென்றார்கள் என்பதைக் கூட நான் கவனிக்கவில்லை. என்னுடைய கவனமெல்லாம் ஏதோ ஓர் உலகத்தை, எனக்கே இன்னதென்று சொல்லத் தெரியாத ஓர் அற்புத உலகத்தை, நாடிச் சுழன்று கொண்டிருந்தது.

நான் விரும்பி வந்த தனிமை வெகு சீக்கிரத்தில் எனக்குக் கிடைத்ததால் ஒருவிதமான மகிழ்ச்சியை வரவழைத்துக் கொண்டு, வண்டிக்குள் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு சன்னல் வழியாக வான வெளியை உற்று நோக்கினேன். அங்கே சந்திரனைக் காணவில்லை; அப்போதுதான் கீழ்த்திசையில் ஒரு மலைப்பிளவின் பின்புறமிருந்து பால்போன்று நிலவொளி சிறிது சிறிதாகப் பரவிக்கொண்டிருந்தது.

'ஐயோ! இந்த மனத் தவிப்பின் கொடுமைக்கு அணுவளவேனும் நிம்மதி என்பதே இல்லையா? தனிமையை விரும்பி வந்த எனக்கு அந்தத் தனிமையிலும் சாந்தி கிடைக்கவில்லையே!' என்ற ஏக்கத்தோடு முனகிவிட்டு, சன்னலருகில் கையை மடித்து வைத்து கொண்டு, மேல் வானத்து நட்சத்திர மணிகளையே வெறித்துப் பார்த்துக்கொண்டு வந்தேன்.

நிமிடத்திற்கு 'நிமிடம்' இருதயம் கனத்துக்கொண்டே வந்தது; நிலைமை பொறுக்க முடியவில்லை, காலுக்குக் கீழே வைத்திருந்த கைப்பெட்டியை எடுத்து அதனுள் பத்திரமாக

ஒரு புத்தகத்தில் மடித்து வைத்திருந்த ஒரு சிறு கடிதத்தை எடுத்து ஐம்பதாவது தடவையாகப் படித்தேன்:

பிரியமுள்ள அப்துல் ரஹீமுக்கு,

உன்னுடைய கதீஜா அன்புடன் எழுதுகிறேன்;

நீ கல்கத்தாவுக்குப் போவதைப் பற்றி எனக்கு அளவற்ற ஆனந்தம். அங்கே போய்ச் சுகமாகஇன்னும் இரண்டு வருடமும் கவனமாகப் படித்துத் தேறி இங்கு வரவேண்டுமென்று அல்லாவை முழு மனத்தோடு வேண்டுகிறேன். நீ அங்கே போனவுடன் புதுப் புதுசிநேகிதர்களுடன் சேர்ந்துகொண்டு என்னை முழுவதும் மறந்து விடாதே. ஒரு நாளைக்கு ஒரு தரமாவது ஒரு நிமிடநேரம் என்னை நினைவில்|வைத்துக்கொள். இங்கே நீ படித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் நான் வந்து உன்னிடம்அடிக்கடி தொந்தரவு செய்வதுபோல் அங்கேவந்து என்னால் செய்யமுடியாது. அந்தமாதிரித் தொல்லையிலிருந்து உன்னை விடுவித்து வைத்ததற்காகவாவது என்னைக் கட்டாயம் நீ ஞாபகத்தில் வைத்துக்கொள்ளத்தான் வேண்டும்!... இன்னும் உனக்கு என்ன எல்லாமோ எழுதவேண்டுமென்று நினைத்து வைத்திருந்தேன். ஆனால் இந்த அவசரத்தில் எனக்கு ஒன்று கூடச் சரியாக நினைவில் வரமாட்டேனென்கிறது. நீ மட்டும் இங்கே திரும்பிவரும்போது மறந்துவிடாமல் கல்கத்தாவிலிருந்து ஏதாவது விநோதமான பொருள் ஒன்று வாங்கி வா.

உன் அன்புள்ள,

**கதீஜா**

13—7—39

மூன்று வருடங்களுக்கு முன்பு எழுதப்பட்ட கடிதம். நான் திருச்சிராப்பள்ளியை விட்டுக் கல்கத்தாவுக்குப் படிக்கப் புறப்படப்போகும் சமயத்தில் கதீஜா இதை எழுதியிருக்கிறாள். ஆனால் என்னுடைய துரதிருஷ்டமோ அவளுடைய துரதிருஷ்டமோ, எனக்கு இக்கடிதம் மூன்று நாட்களுக்கு முன்புதான் கிடைத்தது!

என்னுடைய கைப்பெட்டியை வர்ணம் பூசுவதற்காக எடுத்துச் சுத்தம் செய்து கொண்டிருக்கும்போது, பெட்டியின் அடியில் வைத்திருந்த அட்டையின் பின்புறத்திலிருந்து இந்தக் கடிதம் விழுந்தது.

இதே கடிதத்தை நான் இந்த மூன்று ஆண்டுகளுக்கு முன்பு காண நேர்ந்திருந்தால் என் மனம் அப்போது எந்த நிலையில் இருந்திருக்குமோ எனக்குத் தெரியாது. ஆனால் இந்த மூன்று தினங்களாக என் இருதயத்தில் ஏற்படும் போராட்டத்தை என்னால் இன்னதென்றே விவரிக்க முடியவில்லை.

* * *

அப்போது கதீஜாவுக்குப் பதின்மூன்று வயது. புனிதச் சிலுவைக் கல்லூரியில் ஒன்பதாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். நானும் ஜோஸப் கல்லூரியில் பி. ஏ. இரண்டாவது வகுப்பு மாணவனாக இருந்தேன். கதீஜாவின் தந்தை எனக்குத் தூரத்து உறவினராக இருந்தாலும் என் தந்தைக்கு நெருங்கிய நண்பராக இருந்ததால் அவருடைய மேற்பார்வையில் என்னை வைத்துக் கல்லூரிக்கு அனுப்பி வந்தார். அவருடைய மனைவி மக்கள் எல்லோரும் என்னை அவர்கள் குடும்பத்தில் ஒருவனாகவே பாவித்து நேசித்து வந்தார்கள். ஆனால் மற்ற எல்லோரையும்விட என்னிடம் தனிமையான அன்புடன் உயிருக்கு உயிராய் இருந்தவள் கதீஜா ஒருத்திதான்.

ஒருநாள் இரவு என்னுடைய மாடி அறையில் தனியாக உட்கார்ந்து தேர்வுக்காகக் கஷ்டப்பட்டுப் படித்துக் கொண்டிருந்தேன். மேசையில் புத்தகக் கட்டுகளும் ஒரு 'பிளாஸ்க்' நிறையச் சூடான தேத்தண்ணீரும் இருந்தன. அடுத்த நாள் ஆங்கிலத் தேர்வு தொடங்கியதால் எனக்குப் படிப்பதைத் தவிர மற்ற ஒன்றிலும் கவனம் செல்லவில்லை.

எரிந்துகொண்டிருந்த மின்சார விளக்கை யாரோ அணைக்கும் சத்தம் கேட்டது. உடனே அறை முழுவதும் இருள் பரவியதால் எனக்குக் கோபம் பொறுக்கமுடியவில்லை.

வேகமாக எழுந்து சென்று என் எதிரே குறுக்கிட்ட ஓர் உருவத்தின் தோள்களை இறுகப் பிடித்துக்கொண்டு, ''யாரது?'' என்று அதட்டியவாறே பலமாகக் குலுக்கினேன். பதில் ஒன்றும் பேசாமல் 'கொல்'லென்று சிரித்துவிட்டு ''இப்போது யார் என்று தெரிகிறதா?'' கேட்டுக் கொண்டே மறுபடியும் குலுங்கக் குலுங்க நகைத்தாள் கதீஜா.

''போதும், கதீஜா! விளையாடாதே, போய் விளக்கைப் போடு; நான் படிக்க வேண்டும்'' என்றேன்.

''இதோ இங்கே வா! என்னுடன் வந்து நான் காண்பிக்கும் விளக்கை பார்; பார்த்துவிட்டு அப்புறம் வேண்டுமானால் உன் பாடத்தை விழுந்து விழுந்து படித்துக்கொள்'' என்று கையைப் பிடித்துக் கரகரவென்று இழுத்துக் கொண்டே வந்து மொட்டை மாடியின் கைபிடிச் சுவரருகில் நின்று கீழ்வானத்தைச் சுட்டிக் காண்பித்தாள்.

அங்கே இன்றைக்கு நான் ரெயிலின் சன்னல் வழியாகப் பார்க்கும் காட்சியைப் போலவே காட்சியளித்துக்கொண்டு சந்திரன் மேல் வானத்தில் எழும்பி வந்தான். கதீஜாவின் முகமெங்கும் சிறிது சிறிதாக அந்த நிலவொளியின் பொன்னிறம் படிந்தது.

''சரி கதீஜா. நேரமாகிறது; நான் போய்த் தேர்வுக்குப் படிக்க வேண்டாமா?'' என்றேன்.

''நீ படித்துத் தேறினால்தான் அப்பா உன்னைக்கல்கத்தாவுக்கு அனுப்பப் போகிறாராமே; அப்படியிருக்கையில் நீ ஏன் சிரமப்பட்டுப் படிக்கவேண்டும்?''

''அப்படியானால் நான் அங்கே போய்ப் படிப்பதில் உனக்கு விருப்பம் இல்லையா?''

''விருப்பந்தான்...ஆனால்...'' என்று இழுத்துக் கொண்டே வந்து என்னை ஒரு விதமாக உற்றுப் பார்த்து விட்டு திடீரென்று மாடிப்படிகளில் குதித்துக் கீழே இறங்கி ஓடிவிட்டாள். நான் அறைக்குள் புகுந்து ஒரு கோப்பைத் தேத்தண்ணீரைக் குடித்துவிட்டுத் திரும்பவும் படிப்பைத் தொடங்கினேன்.

கல்கத்தாவில் இரண்டு வருடங்கள் படித்து முடித்து விட்டேன். அதனுடன் சேர்ந்தாற்போல் சென்னையிலும் ஒரு வருடம் உத்தியோகம் பார்த்துவிட்டேன். இந்த மூன்று ஆண்டுகளிலும் இந்தக் கடைசி மூன்று நாட்களைத் தவிர, கதீஜாவைப் பற்றி என் மனத்தில் தனியான எண்ணம் எதுவும் தோன்றியதே இல்லை. ஆனால் அந்தக் காரணத்தின் வேகந்தானோ என்னவோ. எனக்கு இந்தச் சில தினங்களும் யுகங்களைவிடக் கடுமையாகத் தோன்றுகின்றன.

ஃ ஃ ஃ

ரெயிலிலிருந்து இறங்கி குதிரைவண்டியொன்றை அமர்த்திக்கொண்டு பாலக்கரைக்கு புறப்பட்டேன். மனத் துடிப்பின் வேகத்தை எதிரொலிப்பது போலவே குதிரை யின் கழுத்துச் சலங்கையும் 'ஜல் ஜல்'லென்று ஒலித்துக் கொண்டே வந்து வீட்டெதிரே வந்ததும் ஓய்ந்தது.

''வா, அப்பா ரஹீம், இப்போதாவது வீட்டிற்கு வழி தெரிந்ததா?'' என்று சிரித்துக்கொண்டே வந்து என்னை வரவேற்றாள் கதீஜாவின் தாய். அவள் கணவரும், ''வா ரஹீம்! எத்தனை நாள் லீவு எடுத்துக்கொண்டு வந்திருக் கிறாய்? வருகிற சமாசாரம் தெரிந்தால் ரெயிலடிக்குக் கார் அனுப்பி இருப்பேனே; ஒரு கடிதமாவது போட்டிருக்கக் கூடாதா?'' என்றார். பையன்கள் சுல்தானும் ரசூலும் படுக் கையை விட்டு எழுந்து முகத்தைக் கூடக் கழுவாமல் ஓடோடியும் வந்து என்னுடைய கால்களைக் கட்டிப்பிடித்துக் கொண்டனர்.

வீட்டிற்குள் வந்து பரபரப்புற்ற மனத்தோடுஓரிடத்தில் உட்கார்ந்து கதீஜாவின் தாய் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் தொடர்பு இல்லாமல் பதில் சொல்லிக்கொண்டிருந்தேன். என்னுடைய கண்களும் நினைவும் ஏதோ ஓர் உருவத்தைக் கவனிப்பதற்காக அந்த வீட்டிற்குள்ளேயே மூலைக்கு மூலை சுழன்றுசுழன்று நோக்கிக் கொண்டிருந்தன. நான் அங்கே போய் அரைமணி நேரத்திற்கு மேலாகியும் என் கதீஜா இன்னும் ஏன் எதிரே வரவில்லை?

காலையில் சிற்றுண்டி முடிந்தவுடன் சுல்தான் என்னை என் பழைய மாடி அறைக்கு அழைத்துச் சென்றான். அந்த அறை இப்போது கதீஜாவின் ஆதிக்கத்தில் இருந்திருக்கவேண்டும். அறையில் எங்கே பார்த்தாலும் சன்னலுக்குச் சன்னல் கதவுக்குக் கதவு பின்னல் துண்டுகள் தொங்கிக்கொண்டு இருந்தன. ஒவ்வொரு துண்டின் மத்தியிலும் பூங்கொடிகள் பின்னப்பட்டு அவைகளினூடே கொட்டை எழுத்துக்களில் 'ரஹீம்' என்று அழகாக எழுதப்பட்டிருந்தது. கதீஜாவின் மேசையைத் திறந்து அங்கே அடுக்கிவைக்கப்பட்டிருந்த பழைய புத்தகக் கட்டுக்களைப் புரட்டினேன். அவைகளின் மத்தியில் அங்கங்கே ஒரு காகிதத்தில் படத்தைப்போட்டு அதன் கீழே 'ரஹீம் சாஹேப்' என்று எழுதிவைத்திருந்தாள் கதீஜா.

''எங்கே ரசூல், நான் வந்ததிலிருந்து கதீஜாவைக் கண்ணுலே கூடக் காண முடியவில்லையே!'' என்று பையனிடம் ஒரு தரம் விசாரித்தபோது ''ஓஹோ! முன்னைப்போல் கதீஜா இப்போது உன்னிடம் பேச வருவாள் என்று நினைத்தாயோ! அவள்தான் இரண்டு வருடத்திற்கு முன்பே கோஷாவாச்சே!'' என்று குறும்புத்தனமாக ஒரு போடு போட்டான்.

என்னுடைய உள்ளத்திலிருந்து 'குபு குபு'வென்று பொங்கி வழிந்துகொண்டிருந்த கற்பனை ஊற்று, அப்படியே அடைபட்டுப் போய், திடீரென்று நின்றுவிட்டது. அதற்கு மேல் அவனிடம் பேச்சுக் கொடுக்கக்கூடாதென்று நினைத்து அவனைக் கீழே அனுப்பிவிட்டுத் தனிமையில் பேசாது உட்கார்ந்திருந்தேன்.

ஐந்து நாள் விடுமுறை வாங்கி வந்ததில் மூன்று தினங்கள் இரவும் பகலுமாய்ப் பயனற்றுக் கழிந்துவிட்டன. வீட்டை விட்டு வெளியே போகவும் மனமில்லாமல் வீட்டினுள்ளே தங்கவும் மனமில்லாமல் நிலையற்ற மனப்போக்குடன் ஒரு விதத் தீர்மானமும் இன்றி அந்த மாடி முழுவதும் தனிமையில் அங்கும் இங்கும் அலைந்துகொண்டே பொழுதை ஓட்டி வந்தேன்.

எப்போதாவது வீட்டின் கீழ்த்தளத்தில் 'குபீ'ரென்று கதீஜா வாய்விட்டுச் சிரிக்கும் சத்தம் கேட்கும். அத்துடன் முத்து முத்தான அவள் வார்த்தைகளும், 'கலகல' வென்று ஒலிக்கும் வளையொலியும் இடையிடையே என் காதில் விழுந்து இவ்வுலகையே மறக்கச் செய்யும். மௌனத்தோடு பெருமூச்செறிந்து கொண்டே அவ்வொலிகளைக் கவனமாக உற்றுக்கேட்டு, என் நாற்காலியில் வந்து பொத்தென்று விழுவேன்.

ஐந்தாவது நாள் காலையில் சென்னைக்குப் புறப்படுவதற்குத் தயார் செய்துகொண்டிருக்கையில் ரசூல் என்னிடம் வந்து "கதீஜா உன் புகைப்பட மொன்றைக் கேட்கிறாள்; கொடுத்துவிட்டுப் போ" என்றான் மெதுவான குரலில். 'அவளுக்கு வேண்டுமானால் என்னை நேரில் வந்து கேட்டு வாங்கிக்கொள்ளச் சொல்' என்று வெடுக்கென்று பதில் சொல்லுவதற்கு வாயெடுத்தேன். அதற்குள் கதீஜாவின் தாய் நான் இருந்த இடத்திற்குவந்துவிட்டதால் உதட்டைக் கடித்துக்கொண்டு ஒன்றும் பேசாமல் ஒரு படத்தை எடுத்து ரசூலிடம் ரகசியமாகக் கொடுத்து அனுப்பினேன்.

ஊருக்குப் புறப்படுவதற்கு முன் அங்கிருந்த ஒவ்வொருவரிடமும் சுமார் நாலைந்து முறையாவது உரத்த குரலில், "போய் வருகிறேன்" என்று சொல்லிக்கொண்டிருப்பேன். அப்படி இருந்தும் என் மனம் அமைதியடையவில்லை. பெட்டி படுக்கை முதலியவற்றை வேலையாள் வெளியே எடுத்துக் கொண்டு போனவுடன் தலையைக் கவிழ்த்துக் கொண்டே மெதுவாக வெளிவாசலுக்கு நடந்து வந்தேன். உள் வாசலைத் தாண்டியவுடன் வலது புறத்தில் இருந்த அறைக்கதவு மெதுவாகத்திறந்தது. காலில் போட்டிருந்த 'பூட்ஸின்' கயிற்றை இழுத்துக்கட்டும் பாவனையாக ஒரு கணம் தாமதித்தேன். திறந்த கதவின் பின்புறம் தொங்கிய மெல்லிய பட்டுத்திரை சற்று விலகியது. தனது முகத்தில் கவிழ்ந்திருந்த மற்றொரு பூத்திரையை லேசாக அகற்றியவாறு, புன்னகை பூத்த முகத்தோடு என்னை அப்படியே பரந்த செவ்விழிகளால் கணநேரம் நோக்கினாள் கதீஜா. அவளது மார்பகம் விம்மி ஒரு பெரு

மூச்செறிந்து அந்தப் பட்டுத் திரையைச் சற்று அசைத்தது. அத்துடன் இரண்டு கண்ணீர்த்துளிகளும் அவள் கன்னத்தில் உதிர்ந்து கீழ்நோக்கி வழிந்தன.

'இந்த விழிக்கோணத்தின் பார்வை ஒன்றே போதும், இந்த வாழ்க்கை முழுவதும் என்னைப் பரவசப்படுத்துவதற்கு' என்று நினைத்துக்கொண்டு எனக்காக வாசலில் காத்து நின்ற காரை நோக்கி வேகமாக நடந்தேன்.






# பெற்ற மனம்

ரத்தினம்பிள்ளையின் மனைவி சுப்பம்மாள் தன்னுடைய ஒன்றுவிட்ட தமையன் ராமசாமியிடம் அவனுடைய கல்யாணப் பந்தலிலேயே சம்பந்தம் போடத் தொடங்கிவிட்டாள்.

கல்யாண தினத்தன்று மாலையில் ராமசாமியும் அவனுடைய புதுமனைவி அலமேலுவும் மணக்கோலத்துடன் மஞ்சள் நீருக்காக ஆற்றுக்குச் சென்று திரும்பும் போது, கல்யாண வீட்டின முன்கதவு தாழிடப்பட்டிருந்தது.

''என்னுடைய மகன் நாகராஜனுக்கு, உங்களுக்கு அடுத்த வருடம் பிறக்கப்போகும் பெண் குழந்தையைக் கல்யாணம் செய்துகொடுப்பதாக உறுதி சொன்னால்தான் கதவைத் திறப்பேன்'' என்று கதவுக்குப் பின்புறம் இருந்துகொண்டு கூறினாள் சுப்பம்மாள்.

''அப்படியே ஆகட்டும்'' என்று பெண்ணும் மாப்பிள்ளையும் ஒரு தரத்திற்கு இரண்டுதரம் அழுத்தமாகச் சொல்லிய பிறகுதான் கதவு திறக்கப்பட்டது.

சுப்பம்மாள் விளையாட்டைப்போல் அன்றுகூறிய வாக்கு இன்று அப்படியே பலித்துவிட்டது. அடுத்த வருடம் கல்யாணி பிறந்த அந்த நிமிடத்திலிருந்தே அந்தக் குழந்தையைத் தன்னுடைய சொந்த மருமகள் போலவே சுப்பம்மாளும் பாவிக்கத் தொடங்கினாள்.

கல்யாணியை முதல் முதலாகப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கும்போது நாகராஜன் ஐந்தாவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்தான். அவனையும் அந்தச் சிறுமியையும் பார்த்து அவரவர்களுடைய பெற்றோர்கள் தங்களுக்குள் ஒருவிதமாகப் பேசிக் கொள்வதைப் பார்த்து குழந்தைகள் தங்கள் இருவருக்குள்ளும் ஏதோ ஒரு சொல்லவியலாத

பிணைப்பை உணர்ந்தார்கள். நாளுக்கு நாள் அவர்களது அன்பு வளர்ந்து வந்தது.

இப்போது நாகராஜனுக்கு வயது இருபத்து மூன்று. தன்னுடைய தகப்பனுரை இழந்துவிட்டு,வேருெரு ஊருக்குச் சென்று சொற்ப சம்பளத்தில் உடற் பயிற்சி ஆசிரியராக ஒரு பள்ளிக்கூடத்தில் வேலை பார்த்து வருகிருன். இன்னும் இரண்டொரு ஆண்டில் கல்யாணியைக் கல்யாணம் செய்து கொண்டு அதே ஊரில் குடித்தனத்தை ஆரம்பித்துவிடலா மென்று அவன் நம்பியிருந்தான்.

கல்யாணியும் தன்னுடைய படிப்பை முடித்துக்கொண்ட வுடன், ஒவ்வொரு நாளும் தன்னுடைய அத்தானின் வரவைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய பொழுதில் பெரும் பகுதி தன்னுடைய எதிர்காலத்தைப் பற்றிக் கனவு காண்பதிலேயே கழிந்தது. தன்னைப் படைத்த அந்தப் பிரமதேவன் தன் அழகு, இளமை, கல்வி, முதலிய யாவற்றையுமே அந்த நாகராஜனை மகிழ்ச்சி செய்வதற்காகத் தான் ஏற்படுத்தியிருக்கிருன் என்பது அவள் எண்ணம்.

ஆனுல் கல்யாணியின் தாயாரின் மனத்தில் திடீரென்று ஒரு மாறுதல் ஏற்பட்டு விட்டது. இலங்கையிலிருந்து புதுச் சம்பாத்தியத்துடன் ஊருக்குத் திரும்பி வந்த ஒரு தூரத்து உறவினரின் மகனுக்குத் தன்னுடைய பெண் கல்யாணியைக் கொடுக்க அலமேலு ஒப்புக்கொண்டாள். அதற்காக அவளது கணவன் ராமசாமியையும் கரையாய்க் கரைத்து அவன் மனத்தில் நாகராஜனைப்பற்றி ஏற்பட்டிருந்த நினைவை அடியோடு ஒழித்து விட்டாள்.

கல்யாணிக்கும் நாகராஜனுக்கும் இவ்விஷயம் தெரிந்த போது அவர்களுடைய தலையில் ஆயிரம் இடிகள் ஒரே சமயத்தில் விழுவதுபோல் தோன்றியது.

இத்த எதிர்பாராத அதிர்ச்சியை நாகராஜனுல் தாங்க முடியவில்லை. ஒன்றுந் தோன்ருமல் சில தினங்கள் சுவாதீனமின்றிக் காலம் கழித்தான். அவனுக்கு கல்யாணியைப் பற்றிய செய்திகூட அவ்வளவு கலக்கத்தைக்கொடுக்கவில்லை. தன்னுடைய அத்தை இப்படி ஒரேயடியாய்த் தன்னை

நம்பிக்கை மோசம் செய்வாளென்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. அவள் தனக்கு வஞ்சகமும் துரோகமும்செய்து விட்டதாகவே நினைத்தான். 'இந்த மாதிரி சூது நிறைந்த ஒருவரின்வீட்டில்இனிமேல் தண்ணீர்கூடக் குடிக்கக்கூடாது!'

நேரே கல்யாணியின் வீட்டிற்குப் புறப்பட்டுவந்து அவளுடைய தாய் தகப்பனிடம் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் கல்யாணியிடம் மட்டும், "நீ என்னை நினைத்து வருத்தப் பட்டுக் கொண்டிருப்பதில் பயனில்லை. இந்த ஆயுள் முழுவதும் உன்னால் என்னைக் கண்டுபிடிக்க முடியாது. உன் தாயாருக்குப் பிடித்த பணக்கார வாலிபனை மணந்து கொண்டு சுகமாக இரு" என்று சொல்லிவிட்டுக் அவளுடைய பதிலை எதிர்பாராமல் விர்ரென்று வீட்டை விட்டுக் கிளம்பி விட்டான்.

ஆனால் அவன் ரெயிலடிக்கு வந்து சேருவதற்குள் அவனுக்காக அங்கே கல்யாணி காத்திருந்தாள். "நீங்கள் எங்கெங்கே போகிறீர்களோ அங்கெல்லாம் நானும் வந்தே தீருவேன். தாயாயிருந்தாலும் சரி, தகப்பனுயிருந்தாலும் சரி, அல்லது நீங்களாகவே இருந்தாலும் சரி, யாராக இருந்தாலும் என்னை உயிருடன் உங்களிடமிருந்து பிரிக்க முடியாது" என்றுள் கல்யாணி.

அவளுடைய தீர்மானம் அவனைப் பிரமிக்கச் செய்து விட்டது. என்றுலும் அதற்காக அவனுல் அவளுடைய தாய் அலமேலுவின் வஞ்சகத்தைப் பொறுக்க முடியவில்லை.

"இவ்வளவு உறுதியோடு இருக்கும் நீ, என்னுடன் வருவதாக இருந்தால், அடியோடு உன் தாயார் வீட்டை மறந்து விடமுடியுமா?" என்றுன்.

ஒரு கணம் அவன் முகத்தை கல்யாணி திகிலோடு நோக்கினுள்.

"உன் அன்பு என் உயிரைவிடப் பெரியது; ஆனுல்அந்தக் காரணத்தால் உன் தாயாரிடமிருந்து அணுவளவு அவமானத்தையும் என்னுல் பொறுக்க முடியாது."

பதில் பேசாமல் கல்யாணி அவனுடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்தாள்.

இதற்குள் ரெயிலடிக்கு ராமசாமியும் அலமேலுவும் வந்துவிட்டார்கள், ஆனால், அவர்களால் ஆவேச உருவத்தோடு விளங்கும் கல்யாணியின் முன் ஒரு வார்த்தைகூடப் பேசமுடியவில்லை.

வேறு வழியில்லாமல் அலமேலு தன்னுடைய 'அடங்காப் பிடாரி' கல்யாணியை, பிடிக்காத மாப்பிள்ளை நாகராஜனுக்கு வேண்டா வெறுப்புடன் திருமணம் செய்து கொடுத்தாள். தன் தாயார் வீட்டைவிட்டுப் புக்ககம் கிளம்பிய கல்யாணி மறுபடியும் இன்றுவரை அந்தப் பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை.

இரண்டு வருடங்கள் சென்றுவிட்டன. இருவரும் மிகுந்த பாசத்தோடும் பற்றுதலோடும் குடும்ப வாழ்க்கையை நடத்துகின்றனர். ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துவதிலும் குடும்பப்பொறுப்பை உணர்ந்து பகிர்ந்து கொள்வதிலும் இரண்டு பேரும் சளைத்தவர்களாகத் தெரியவில்லை. அமைதியோடு நாட்கள் கழிந்தன.

என்ன இருந்தாலும் கல்யாணியால் முழுவதுமே மகிழ்ச்சியோடு இருக்க முடியவில்லை. அவளுடைய இருதயத்தின் ஒரு மூலையில் ஏதோ ஒரு குறை இருந்து கொண்டு அவளைக் குழப்பிக்கொண்டே இருந்தது. அதன் காரணத்தையும் அவள் நன்றாக அறிந்திருந்தாள்.

நாகராஜன் முன்னிலையிலும் மற்ற வீட்டுக் காரியங்களைக் கவனிக்கையிலும், அவளுக்குக் கொஞ்சமேனும் சஞ்சலமே தோன்றாது. ஆனால் தனிமையில் அவளால் அவ்வளவு சுலபமாகத் தன்னைத் தேற்றிக்கொள்ள முடியவில்லை. தன்னைப்பற்றித் தாயார் என்ன நினைக்கிறாளோ? எந்தவிதமாக ஏங்கித் தவிக்கிறாளோ என்றெல்லாம் நினைப்பாள் கல்யாணி.

ஆனால், என்னதான் வருத்தம் இருந்தாலும் அத்தனை வருத்தமும் அவளுடைய கணவனின் முகத்தைக் கண்டவுடன் இருந்த இடம் தெரியாமல் பறந்து போய், அலாதியான முகமலர்ச்சி ஒன்று அவளை வந்து அடைந்துவிடும்.

ஒரு நாள் மாலை பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிவந்த நாகராஜன் எள்ளும் கொள்ளும் வெடிக்கும் முகத்துடன்வீடு வந்து சேர்ந்தான். அவனுடைய கோபத்திற்குக் காரணம் இதுதான். அவன் தன் வீட்டிற்கு நாலைந்து வீடுகளுக்கு அப்பால் ஒரு வீட்டில் அவனுடைய அத்தை அலமேலு வந்திருப்பதைப் பார்த்துவிட்டான். அத்துடன் ஒரு பெரிய சந்தேகமும் அவனுக்கு உதித்தது.

அவன் வீட்டிற்குள் நுழைந்தபோது, அங்கே அவன் அத்தை தங்கியிருந்த வீட்டின் சொந்தக்காரியும் கல்யாணியும் எங்கேயோ புறப்பட ஆயத்தமாக இருப்பதைக் கண்டான். அவன் முகத்தில் குரூரக் களை தாண்டவமாடியது.

''எத்தனை வருடங்களாக இந்தக் கபட நாடகம்?'' என்று உறுமினான் நாகராஜன்.

கல்யாணி அப்படியே கல்லாய்ச் சமைந்து விட்டாள்.''

''இவ்வளவு நாளாய் நான் நம்பியிருந்ததெல்லாம் வெறும் வேஷந்தானா? நம்பிக்கை மோசமே உங்கள் குடும்பத்தில் ஏற்பட்ட வழக்கமா?''

அவளால் நிதானிக்க முடியவில்லை. ''எதையும் புரியும்படி பேசுங்கள், இந்தமாதிரி அர்த்தமற்றபேச்சை இன்றைக்குத்தான் நான் உங்களிடமிருந்து கேட்கிறேன்'' என்று பதறினாள்.

''நெஞ்சின்மேல் கையை வைத்துச் சொல், உன்னுடைய தாயாரை உன் கல்யாணத்திற்குப் பிறகு எத்தனை முறை இப்படித் திருட்டுத்தனமாய்ச் சந்தித்திருக்கிறாய்?''

''என்ன!...நீங்களா இப்படிக் கேட்கிறீர்கள்?—அதன் பிறகு மறுமுறையாக நான் தாயாரின் முகத்தில் விழித்திருந்தால் நான் நாசமாய்ப் போவேன்.''

''அப்படியானால் இப்போதுதான் இந்த அம்மாளின் வீட்டில் வந்து தங்கியிருக்கும் உன் தாயாரை முதல் தடவையாக ஆவலுடன் காணப்போகிறாயாக்கும்?'' என்று குத்தலாகக் கூறினான் நாகராஜன்.

''இதோ பாருங்கள்; உங்கள்மீது ஆணை. இந்த விஷயம் ஒன்றுமே எனக்குத் தெரியாது. இந்த அம்மாள் இதுபற்றி

என்னிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. தெரிந்திருந்தால் நான் அப்போதே தகுந்த பதில் சொல்லி இருப்பேன்'' என்று கூறி, அவளை அனுப்பி விட்டாள்.

அன்று இரவு, ஆராய்ந்து பாராமல் தான் முரட்டுத்தனமாய் நடந்துகொண்டதைப்பற்றி நாகராஜன் தன் மனைவியிடம் கூறி மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். கல்யாணி தனது இரண்டுங் கெட்டான் நிலையை நினைத்துக் கண்ணீர் உதிர்த்தாள்.

* * *

சென்ற பத்து மாதமாய் கல்யாணி கண்டுவந்த கனவெல்லாம் நனவாக மாறப்போகிற சமயம். பிரசவ வேதனையால் மிகவும் சிரமத்திற்குள்ளாகி, ஒரு தனி அறையிலிருந்து முனகிக் கொண்டிருந்தாள். அண்டை அடுத்த வீட்டுத் தாய்மார்களும் மருத்துவச்சிகளும் அவளைச் சூழ்ந்திருந்தார்கள்.

அவ்வளவு பொறுக்கவொண்ணுத் துயரத்தின் மத்தியிலும் அவள், 'நாம் இன்னும் சில மணி நேரத்தில் ஒரு குழந்தைக்குத் தாயாகப் போகிறோம்' என்ற எண்ணத்தால் மிகவும் ஆறுதலடைந்தாள். அதனால் ஏற்பட்ட துன்பமனைத்தும் அவளது பொறுமையைச் சோதிக்க வலியற்று விட்டன.

மருத்துவச்சியும் சுற்றியிருந்தவர்களும் தங்களாலாகாது என்று கை விரித்து விட்டார்கள். பின்பு 'லேடி டாக்டர்' வரவழைக்கப்பட்டாள். அவள் வந்து அரை மணி நேரத்திற்குள், ''என்னைக் கொன்றாலும் கொன்றுவிடுங்கள்; என் குழந்தை மட்டும் உயிரோடு இருந்தால் போதும்'' என்ற தீனமான கல்யாணியின் குரல் அறைக்கு வெளியே இருந்த நாகராஜனின் காதுகளில் விழுந்தது.

நல்ல வேளையாகத் தாய் வேறு, குழந்தை வேறாக உயிருடன் பிரிக்கப்பட்டனர். தனக்குப் புதியதாய்ப் பிறந்த பெண் குழந்தையைக் கண்களால் கண்டும் அதன் பச்சிளங் குரலைக் கேட்டும் கல்யாணி உலகையே மறந்தாள். அவளது வேதனையின் நினைவெல்லாம் இன்பகரமாக மாறியது.

நான்கு நாட்கள் சென்றன. ''உடம்பை அதிகம் அலட்டிக்கொள்ளாதே'' என்று டாக்டர் சொல்லிவிட்டுப் போனதைக்கூடக் கவனிக்காமல், கல்யாணி எப்போதும் தன் குழந்தையிடம் கொஞ்சிக்கொண்டேயிருந்தாள். அதை வாரி எடுத்து உச்சிமோவதிலும் அதன் மெல்லிய கன்னங்களில் முத்தமாரி பொழிவதிலுமே அவளுடைய மனமெல்லாம் சென்றிருந்தது.

இந்தச் சமயத்தில்தான் நாகராஜன் ஒருமுறை தன்னுடைய சிசுவைப் பார்த்துவிட்டு, ''குழந்தை உன்னையே உரித்துக்கொண்டு வந்திருக்கிறதே! அதனுடைய கண்களையும், அந்த மூக்கையும் பார்; உனக்கும் உன் குழந்தைக்கும் கொஞ்சங்கூட வித்தியாசமே காணோமே!'' என்றான்.

கணவன் இப்படிக் கேட்டவுடன் அவளுக்குப் பெருமை தாங்க முடியவில்லை. ஆனால் அடுத்த நிமிடமே ஒரு விபரீத எண்ணம் அவளிடம் தலை காட்டியது.

''ஆமாம்...நான் பிறந்தபோதுகூட எல்லோரும் என் தாயைப் பார்த்து அப்படித்தான் சொன்னார்களாமே!''

உடல் நிலை பலஹீனமாயிருக்கும் இந்தச் சமயத்தில் அவளுக்குத் தன் தாயின் நினைவு ஒரு மின்னலைப்போல் தோன்றியது. 'நம்முடைய அம்மாவும் நம்மை இந்தப் பத்து மாதங்களும் சுமந்து, இந்த அபாயகரமான வேதனைகளைச் சகித்துத்தானே பெற்றிருப்பாள்? அவளுடைய கனவும், கற்பனையும், அன்பும், ஆர்வமும் அப்போது நானாகத் தானே இருந்திருப்பேன்? இன்றைக்கு என் குழந்தையை நான் எவ்விதம் உயிருக்குயிராகக் கருதுகிறேனோ அதுபோலத் தானே அவளும் நினைத்திருப்பாள்?...தன்னுடைய பெண் வேறொரு பணக்காரனை மணந்துகொண்டால் இதைவிடச் சுகத்தில் இருப்பாள் என்ற குருட்டு நம்பிக்கையால்தானே என் கணவருக்குக் கொடுத்த வாக்குறுதியை மறந்துவிட்டாள்?...ஆமாம், இப்போது எனக்குப் பிறந்திருக்கும் குழந்தையைப் பார்த்தால் அவள் மனம் எவ்வளவு குதூகலமடையும்!'

அன்றைக்குப் பிற்பகல் ஆரம்பித்த காய்ச்சல் கல்யாணியை மணிக்கு மணி அதிகமாக வாட்டத்தொடங்கியது. இரவெல்லாம் ஜுரம் தாங்காமல் பிதற்ற ஆரம்பித்தாள்; உடல் நெருப்பைப்போல் காய்ந்து கொண்டிருந்தது. நாகராஜனுக்கு ஒன்றுமே புரியவில்லை; ஏதோ ஓர் அபாயம் தன்னை நோக்கி வருவதாக உணர்ந்தான்.

டாக்டர்களுடைய திறமையெல்லாம் கல்யாணியின் காய்ச்சலிடம் பலிக்கவில்லை.அவளுக்குத் திடீரென்று ஜன்னி கண்டுவிட்டது. அனலாகத் தகித்துக் கொண்டிருந்த தேகம் சில்லிட்டுப் போயிற்று. எந்த நேரமும், 'அம்மா,'அம்மா' என்று உளற ஆரம்பித்தாள். இரவிலும் பகலிலும் அந்த அம்மாவும் அவளுடைய குழந்தையைப் பற்றியுமேதான் பேச்சு.

''ஏண்டி கண்ணு! நீ என்னைப் போலவே பிறந்திருக்கிறாயாமே? நான்கூட என் அம்மாவைப் போலவேதான் பிறந்தேன்!......என்ன இருந்தாலும்பெற்றவர்களல்லவா?... ஐயையோ! பெற்ற வயிறு எப்படித் துடிக்குமோ...''

* * *

கல்யாணி கண்களை மிரள விழித்துப் பார்த்தாள். எத்தனை தடவை விழித்துப் பார்த்தாலும் அவள் எதிரே தெரிந்த அந்த உருவம் இலேசில் மறைவதாக இல்லை.

''நீ யார்...என் அம்மாவா?''

''ஆமாண்டி, என் செல்வமே'' என்று கல்யாணியின் முகத்தோடு தன் முகத்தை வைத்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள் அலுமேலு.

''ஊஹூம்; ஏமாற்றுகிறாய்; நீ என் அம்மா இல்லை!''

''இதோ, நன்றாக என்னை உற்றுப் பார்!...உன்னைப் பெற்ற இந்தப் பாவி மனம் என்ன பாடு படுகிறது தெரியுமா?...இன்னும் அடையாளம் தெரியவில்லையா உனக்கு?''

ஒரு நிமிடம் பதில் இல்லை.

பிறகு, ''ஆமாம் அம்மாதான்!—எப்படி இங்கே வந்தாய்?''

“மாப்பிள்ளை தந்தி கொடுத்திருந்தார்.”

‘உண்மையாகவா!’ என்று கேட்பவைபோல் கல்யாணியின் கண் இமைகள் ஆச்சரியத்தோடு உயர்ந்தன.

எதிரே கண்ணீரை மாலை மாலையாய்ப் பொழிந்து கொண்டு, “உனக்கும் உன் அம்மாவுக்கும் செய்த கொடுமைக்கு என்னை மனப்பூர்வமாக மன்னித்துவிடு கல்யாணி என்று தடுமாறினான் நாகராஜன்.

“அம்மா, இந்தா உன்னுடைய பேத்தி! இரண்டு மூன்று நாட்கள் இவளைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்; அப்புறம் நான் பிழைத்துக்கொள்வேன்! ஆமாம் நிச்சயம் பிழைத்துக் கொள்வேன்!”

நாகராஜனும் அலுமேலுவும் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள்.



# சினிமா வண்டி

## 1

பொன்னம்மாள் அழகிதான், அவ்வளவு நல்ல சிவப்பு இல்லாவிட்டாலும் மிகவும் கறுப்பல்ல; மாநிறம். கூந்தல் கருகரு வென்று வளர்ந்து அடர்ந்து கிடக்கும். முகமும் விழிகளும் கடைந்தெடுத்ததுபோல், பச்சைக் கிளியாக இருப்பாள்.

அவள் 'கீழ்ச்சாதியில்' பிறந்திருந்தாலும் தகப்பன் சர்க்கார்ச் சம்பளம் வாங்கியதால் அவளை ஐந்தாவது வரையிலும் படிக்க வைத்துவிட்டான். இப்போது அவளுக்குப் பதினேழு வயது. பருவத்திற்குத் தகுந்த ஓர் இன்பமும் ஒரு விதப் பூரிப்பும் அவளை வந்து தழுவிக்கொண்டன.

ஒருநாள் மாலை பொன்னம்மாள் தலைவாரிப் பின்னிக் கொண்டே கண்ணாடியில் முகத்தைப் பழிப்புக் காண்பித்துக் கொண்டிருந்தாள். எங்கிருந்தோ 'கிளாரினட்' வாத்தியத்தின் இனிமையான கானம் மெல்ல மெல்ல வந்து மிருதுவான தொனியில் ஒலித்தது. வியப்புடன் உற்றுக் கேட்டாள்; அதில் ஓர் உற்சாகங்கூடப் பிறந்துவிட்டது.

மெதுவாக எழுந்து சென்று தெருக்கோடியைக் கவனித்தாள். சினிமா வண்டி அப்போதுதான் வெகு ஆடம்பரத்துடன் ஆடி அசைந்து வந்து கொண்டிருந்தது.

தினம் தினம் பார்த்துச் சலிப்படைந்த அதே சினிமா வண்டிதான். அலங்காரம்கூட அதில் ஒன்றும் பிரமாதமாக இல்லை. ஆனால், அந்தப் பாண்டு வாத்தியமும் அதன் இனிமையும் மாத்திரம் இன்று ஒரு புதுவகையில் அமைந்திருந்தது. என்றைக்கும் கேட்கும் விதத்தில் அந்தப் பழைய ராகங்கள் ஊதப்படவில்லை; அதற்குப் பதிலாக என்றுமே

அவள் கேட்டிராத ஓர் இனிமையான ராகம் காற்றில்சுழன்று வந்தது.

'ஒருவேளை, வேறே ஆள்தான் வந்து ஊதுகிறானோ? அல்லது வாத்தியந்தான் மாறியிருக்கிறதோ!... கேட்கக் கேட்க அபூர்வமாக இருக்கிறதே...நிச்சயம் இதை ஊதுபவன் ஒரு புதுமனிதனாகத்தான் இருக்கவேண்டும்...சற்று நேரம் போனால் தானே தெரிந்துவிடுகிறது. அவசரம் எதற்கு?'

வண்டி அருகில் நெருங்க நெருங்க அவளைக் கேட்காம லேயே அவள் கால்களின் மெட்டிகள் தரையில் தாளம் போட ஆரம்பித்தன. ஆனந்தம் அவளையும் மீறிவிட்டது. ராக மயக்கத்தில் கட்டுப்பட்டு அப்படியே நின்றாள். வண்டி சீக்கிரத்தில் அவள் வீட்டைத் தாண்டிச் சென்றது;கவனித் தாள்.

தினந்தோறும் வண்டியின் மூலையில் உட்கார்ந்து வாசிக்கும் அந்தக் கிழவனுக்குப் பதிலாக அதே இடத்தைக் 'கிராப்' வைத்த ஓர் இளைஞன் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டிருந்தான்.

பொன்னம்மாள் முதலில் அவனைச் சிறு பிள்ளைபோல் ஆவலுடன் பார்த்தாள். அவனும் அதைப் போலவே நோக் கினான். ஆனால் அவனுடைய அந்தப் பொல்லாத பார்வையில் ஏதோ ஒரு காந்த சக்தி கலந்திருக்கிறது.

திடீரென்று வெட்கம் பிறந்துவிட்டதால் உள்ளே ஓடிக் கதவைத் தாழிட்டுக்கொண்டாள் பொன்னம்மாள்.

இந்த முப்பது நாட்களுக்குள் பொன்னம்மாள் எவ்வ ளவோ தூரம் மாறிவிட்டாள். இப்போதெல்லாம் மாலை மூன்று மணிக்குமேல் அவளுக்கு ஒரு வேலையிலும் இருப்புக் கொள்வதில்லை. எதற்கெடுத்தாலும் அவசரமும் பரபரப்புந் தான். ஒரு காரியத்திலாவது நிதான புத்தி கிடையாது. நொடிக்கு நூறு தடவை கண்ணாடியில் தன் முகத்தை அழகு பார்த்துக்கொள்வதுதான் அவள் செய்யும் முக்கியமான வேலை.

மணி நாலு அடிக்க வேண்டியதுதான் தாமதம்; கணக்குத் தவறாமல் தெருவின் மூலையில் சினிமா வண்டி

வந்து கொண்டிருக்கும். பொன்னம்மாளும் எல்லா அவசர வேலைகளையும் விட்டுவிட்டு, நீர் தெளிப்பதற்காக வாசலுக்கு வந்துவிடுவாள்;—அந்த வேலையைச் செய்ய அவளால் தேர்ந் தெருக்கப்பட்ட நேரம் அதுதான்!

வாத்தியக்கார ஜான் முத்துசாமியின் உள்ளக்கிளர்ச் சிகள் பொன்னம்மாளைக் கண்டவுடன் அலைகள்போல் பொங்கி எழுவதுண்டு. வாத்தியங்கள் வாயிலாக வெளியே தனக்குத் தெரிந்த அத்தனை ராகங்களையும் அள்ளி அள்ளிச் சொரிந்து விடுவான். இந்தி, ஆங்கிலம், வங்காளி, இன்னும் என்ன என்னவோ ராகங்கள்!—அவையெல்லாம் ஒன்ருய்ச் சேர்ந்து பொன்னம்மாளின் உள்ளத்தை ஆட்டி அசைத்துக் குலுக்கிக் குலைத்துவிடும்.

கண்களுக்குக் கண்கள் பேசிக்கொண்ட விஷயங்கள் இப்போது கடிதத்தளவில் வந்துவிட்டன. பொன்னம்மாளின் தம்பி சின்னச்சாமி இந்த வேலையில் தீவிரமாய் ஈடுபடுத்தப் பட்டான். காதற் செய்திகள் இறக்கைக் கட்டிக்கொண்டு கற்றை கற்றையாய்ப் பறந்து சென்றன.

நாட்கள் கழிந்தன; செய்தி எப்படியோ அவள் தகப்ப னுக்கு எட்டிவிட்டது. அவனும் உடனே எச்சரிக்கை செய்து வைத்தான். "இதோ பார் பொன்னம்மா! பேரைக் கெடுத்துப் போடாதே, அவன் சாதி கெட்டவன்; மதம் கெட்டவன்; வேதம் படிக்கிறவன்; நம்ம சாதியாய் இருந் திட்டாலும் அவன் கும்பிடுகிற சாமியெல்லாம் வேறே...! என் பேச்சைக் கேட்காதபடி ஏதாவது செய்தியோ அப்புறம் உங்கப்பனைத் தலைமுழுகிப்பிட வேண்டியதுதான்" என்ருன்.

## 2

சினிமா கொட்டகைக்குள் நடந்து கொண்டிருந்த ஒரு சமூகத் தமிழ்ப் படத்தின் காதற்கட்டம் வந்தது. முதன் முதலாக நடிப்புக் காதலர்கள் ஒருவரையொருவர் சந்தித்து தங்களது ஆர்வத்தை வார்த்தைகளால் அள்ளிப் பொழிந்து கொள்கிருர்கள்; ருசிகரமான பாகமாதலால் ரசிகர்கள்

வாயைத் திறந்தபடியே திரையிடம் மனத்தைப் பறிகொடுத்திருந்தார்கள்.

அந்த நேரத்தில் கொட்டகையின் பின்புறத் தோட்டத்தில் உண்மையிலேயே இரண்டு காதலர்கள் சந்தித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் இவர்களுடைய வாயிலிருந்து ஆர்வம் ததும்பும் அன்புப் பேச்சுக்களோ, கற்பனை மிக்க காதற் பாட்டுக்களோ ஒன்றும் வெளிவரவில்லை.

ஜான் முத்துசாமி பீடியைப் புகைத்துக் கொண்டே தலையைக் கீழே தொங்கவிட்டுக் கொண்டு நின்றான். அவனுடைய கண் நரம்புகள் சிவந்திருந்தன. அருகில் நடுங்கியபடியே ஒன்றும் தோன்றாமல் நின்றாள் பொன்னம்மாள்.

பைத்தியம் பிடித்தவன் போல் முத்துசாமி தன்னையே ஒரு முறை அங்கம் அங்கமாகப் பார்த்துக்கொண்டான்—இதற்காகவா அவ்வளவு அலங்காரங்கள்...பட்டுக்கரை வேஷ்டி,சலவை கலையாத சட்டை, விசிறிமடிப்பு அங்கவஸ்திரம்...இதற்குத்தானா இவள் என்னை முதல் முதலில் தனியாகச் சந்திப்பதாக எழுதியிருந்தாள்? இந்தச் செய்தியைச் சொல்ல இவள் ஏன் நேரில் வரவேண்டும்?

மறுபடியும் மனத்திற்குள்ளேயே முத்துசாமி முணுமுணுத்துக் கொண்டான், 'அவளுடன் தனிமையில் நின்று, பேசப் போகிறோம். அவளுடைய கொஞ்சும் மொழிகளைக் கேட்கப் போகிறோம். அவளுடைய மெல்லிய கரத்தைப் பற்றி இழுக்கப் போகிறோம்...இன்னும் என்ன எல்லாமோ எண்ணிக் கோட்டைக் கட்டினேமே...ஆனால்? 'நான் உன்னுடைய பொன்னம்மா அல்ல;என்னை மறந்துவிடு' என்கிறாளே அதெப்படி முடியும்?'

ஏக்கமும் ஏமாற்றமும் முத்துசாமியின் தொண்டையை அடைத்துக்கொண்டன. "பின்னே என்ன யோசனை,பொன்னம்மா!ஏன் உங்கப்பா வந்து எங்க கிறிஸ்துவ வேதத்துலே சேர்ந்திடப்படாது?நீதான் கொஞ்சம் சொல்லிப்பாரேன்" என்றான்.

"அவர் சங்கதி உங்களுக்கு ஒண்ணுமே தெரியாது" என்றாள் பொன்னம்மாள்.

''நானுச்சும் வந்து பழையபடி உங்க சாமியையே கும்பிடப்படாதா? என்னை உங்க சாதியிலே சேர்த்துக்க மாட்டாங்களா? முந்தியெல்லாம்...நான்...பொன்னம்மா; எனக்காக உங்கப்பாகிட்டே?''...அவனுடைய குரல்கெஞ்சும் பாவனையில் தழுதழுத்தது.

உள்ளிருந்து குமுறிவரும் வேதனையை பொன்னம்மாள் அறிந்து கொண்டாள். கன்னங்களில் தாரை தாரையாய் வழிந்து கொண்டிருந்த நீரைத் துடைக்க அவளுக்கு நினைவு இல்லை. ஏதோ ஒரு கனத்த பாரம் அவளது மார்பை அழுத்திக் கொண்டிருந்தது, என்னவோ பேச வாயெடுத்தாள். முடியவில்லை—குமுறினாள்; தேம்பினாள்; விம்மினாள்; அது தான் அவளது முதல் சந்திப்பின் கடைசிப் பேச்சு.

யாரோ தூரத்தில் இருமிக்கொண்டே வரும் சத்தம் கேட்டது. இருவரும் பிரிந்தனர். சினிமாவிலும் காதற் காட்சி முடிந்தது. வாழ்க்கைப் போராட்டத்தின் வலியற்ற பாகந்தான் அதன் தொடர்ச்சி.

சினிமா வண்டியின் பாண்டுவாத்தியம் தன்னுடைய மோகன ராகங்களையெல்லாம் அடியோடு மறந்து விட்டது. அதற்குப் பதிலாகத் துக்கமும் துயரமும் அந்தக் குழாயின் வாயிலாக சதா காலமும் பெரு மூச்சாய்ப் பெருகிக் கொண்டே இருந்தன.

மாலைநேரத்தில் ஊதிவரும் சோகத்தின் எதிரொலியைக் கூட, பொன்னம்மாள் அநேக நாட்கள் கேட்கக் கொடுத்து வைக்கவில்லை. வெகு சீக்கிரத்திலேயே அவளுடைய ஒன்று விட்ட மாமன்மகன் பழனிவேலுஅவளைக் கல்யாணம் செய்து கொண்டான். முறைப்படியே சில நாளைக்கெல்லாம் பெரம்பலூர் போய்ச் சேர்ந்தாள்.

ஜான் முத்துசாமியின் எண்ணத்தில் மண்ணைப் போட்டதுமல்லாமல் அவனுடைய வயிற்றிலும் மண்ணைப் போடுவதற்காக ஒரு புதுச் சட்டம் கிளம்பியது.'நீயூசென்ஸ்' விதிப்படி சினிமா வண்டியில் வாத்தியங்கள் வாசிப்பது தடைப் படுத்தப்பட்டது.பிழைப்புக்கு வழியில்லாமல் ஊர் ஊராய்ச் சுற்றினான்.

# 3

அதெல்லாம் பழங்கதை; மூன்று ஆண்டுகளுக்கு முன்பு நடந்தவை. பொன்னம்மாள் இன்றைக்கு ஒரு தாய். அவள் இடுப்பில் தங்கத்தால் உருக்கி வார்த்த பதுமைபோல் ஓர் இளம் குழந்தை காலை ஆட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறது. அதன் அழகில் ஈடுபட்டு மனம் மயங்கியவாறே பொழுதைப் போக்குகிறாள் அவள்.

பொன்னம்மாளின் கணவன் பழனிவேலு கவலையற்ற மனிதன்; சரள சுபாவமுடையவன். எல்லாம் அவள் விருப்பப்படியே விட்டுவிடுவான். இத்தகைய வீட்டுக்காரன் ஒருவன் அகப்பட்டதால் அவளுக்கே மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. அதே காரணத்தால் முத்துசாமியின் நினைவைக்கூட வெகு விரைவில் அகற்றிவிட எண்ணினாள்.

குழந்தை பிறந்து ஒரு மாதமானதும் ஒரு நாள் பழனிவேலு, ''நம்ம பையனுக்கு செல்லமுத்துன்னு பெயர் வைப்போமா?'' என்று பொன்னம்மாளைக் கேட்டான்.

''என்ன செல்லமுத்தா!''—முத்து என்ற பெயர் காதில் விழுந்தவுடன் அவளுக்குத் தூக்கிவாரிப்போட்டது. ஒரே கலவரமடைந்து விட்டாள்; நெஞ்சில் அந்த ஒரு சொல் சுரீலென்று தைப்பதுபோல் இருந்தது. அந்த வேதனையின் மத்தியில் பழைய நாடகங்கள் மின்னலாகத் தோன்றிமறைந்தன.

''முத்துசாமி என்று கூப்பிடுவோமே'' என்றாள் தன்னையும் மீறிய உணர்சசியுடன். மறுவார்த்தை பேசாமல் பழனிவேலு அதை உடனே ஏற்றுக்கொண்டான்.

நாட்கள் வளர்ந்தன; குழந்தை முத்துசாமியின் வயதும் வளர்ந்தது. தள்ளாடித் தள்ளாடி நடக்கும் சக்தியை அடைந்து விட்டான். எந்த நேரமும் வீட்டில் கொட்டி வைக்க முடியாத மழலையும் சிரிப்புந்தான். அவனுடைய தாய், கொஞ்சிக் குலவுவதற்குக் குழந்தை இருந்ததால் அதே பெயருடைய ஒருவன் இருந்தான் என்பதையும் சிறிது சிறிதாக மறந்து வந்தாள்.

ஒரு நாள் பொன்னம்மாளின் கணவன் அவளையும் குழந்தையையும் அழைத்துக்கொண்டு, அடுத்த ஊரில் இருந்த அவன் தங்கை வீட்டிற்கு வந்திருந்தான். இரண்டு மூன்று நாட்கள் விருந்துச் சாப்பாட்டில் தடபுடலாகக் கழிந்தன. பழனிவேலு தன் தங்கையின் கணவனை அழைத்துக்கொண்டு முத்துவுக்குச் சட்டைத் துணி வாங்கக் கடை வீதிக்குப் போயிருந்தான்.

வீட்டின் வாசற்பக்கத்துக் கதவு பாதி திறந்தும் திறவாமலும் வைக்கப்பட்டிருந்தது. கூடத்து நடையின் முன் பக்கத்தில் உட்கார்ந்தபடியே பொன்னம்மாளும் அவள் நாத்தியும் குழந்தையை வைத்து விளையாடிக்கொண்டிருந்தார்கள். சிறிது நேரம் கழிந்தது. குழந்தையும் அவர்களிடமிருந்து நழுவி வெளியே கதவின் பக்கமாய் நடக்க ஆரம்பித்தான்.

பையனைப்பற்றிய பேச்சைத் துவக்கினர் மைத்துனிகள். இருவரும் தங்கள் தங்கள் குடும்ப விவகாரத்தை விவரிக்க ஆரம்பித்துவிட்டார்கள். ஒவ்வொருவருடைய பிறந்த கதை வளர்ந்த கதை, வாழ்ந்த கதை எல்லாம் அடுக்கடுக்காகச் சபைக்கு வந்தன. பேச்சில் சுவை மிகுந்துவிட்டது.

குழந்தை கதவிடுக்கில் ஒளிந்துகொண்டே தலையை மாத்திரம் வெளியே நீட்டி ஒரு முல்லைச் சிரிப்புச் சிரித்தான். அதை ஒருவரும் கவனித்துப் பார்க்கவில்லை. அவன் பாட்டில் மெதுவாகக் கதவை இழுத்து மூடிவிட்டு, திண்ணையில் கட்டியிருந்த நாய்க் குட்டியுடன் விளையாடப் போய்விட்டான்.

வழக்கமாக அந்த ஊரைச் சுற்றிவரும் சினிமா வண்டி அந்த வீதி வழியே வந்துகொண்டிருந்தது. தூரத்திலிருந்து கொட்டு முழக்கச் சத்தம் அடக்கமாகக் கேட்கத் தொடங்கியது.

தினசரி நடக்கும் சாதாரண நிகழ்ச்சியாதலால் அதை ஒருவரும் கவனிக்கவில்லை. 'அப்படி அதில் சிரத்தை எடுத்துக்கொண்ட, பாழாய்ப்போனநாட்கள்தாம்தேய்ந்துவிட்டனவே' என்று பொன்னம்மாள் எண்ணினாள். அவளு

டைய மனத்தில் ஒருவித துடிதுடிப்போ போராட்டமோ ஏற்படவில்லை.

தெருத் திண்ணையில் கட்டிக்கிடந்த நாய் எதையோ கண்டு 'வள், வள்'ளென்று குலைத்தது. கவனம் அதிலும் செல்லவில்லை.

தன் தாய் வீட்டுப் பெருமையைப் பற்றி பொன்னம்மாளின் மைத்துனி மூச்சுவிடாமல் பேசிக்கொண்டிருந்தாள். நிலபுலம், வீடுவாசல் முதலியவைகளைப் பற்றிப் பேச்சுப் போய்க்கொண்டிருந்தது. பொன்னியின் கண், காது, மனமெல்லாம் அவளுடைய வர்ணனையில் லயித்திருந்தன. சுற்றியுள்ள உலகைப்பற்றி அவளுக்குச் சிறிதேனும் நினைப்பே வரவில்லை.

''ஐயோ!......குழந்தை போச்சே!'' என்று திடீரென்று வாசலில் ஒரு கூச்சல் கேட்டது. சினிமா வண்டியும் கடக் என்ற ஓர் ஆட்டத்துடன் நின்றது; வண்டிச் சக்கரத்தில் அடிபட்ட குழந்தை தரையில் மல்லாந்து கிடந்தான்.

''ஐயோ! அட பாவி! முத்துசாமி!......சண்டாளா!'' என்று கதறிக்கொண்டே ஓடி, கீழே ரத்தத்தில் விழுந்து கிடந்த குழந்தையைப் பொன்னம்மாள் இரண்டு கைகளாலும் வாரியெடுத்தாள்; அவள் தலை மயிர் அலங்கோலமாய் அவிழ்ந்து விட்டது. சிறுவனை அணைத்துக்கொண்டே கதறிப் புலம்பினாள்; துடியாய்த் துடித்தாள்.

''முத்துச்சாமி...'' என்ற குரல் வண்டியிலிருந்து கீழே குதித்துக் கொண்டிருந்த ஒருவனுக்கு, தலையில் ஆயிரம் இடிகள் விழுவனபோல் இருந்தது. பெரிய அதிர்ச்சியுற்றவன் போல் கலவரமடைந்தான். கையிலிருந்து கீழே விழுந்த வாத்தியத்தையும் கவனிக்காமல், உலுக்கி எடுத்த நெஞ்சுடன் அருகில் வந்தான்.

''முத்துசாமியா?......நான் என்ன செய்தேன்?''...... அவன் வாய் குழறியது; கண்கள் சுழன்றன. நடுங்கிக் கொண்டே ஆவேசம் பிடித்தவன்போல் மிரள மிரள விழித்தான்.

குனிந்து கதறிய அவள் தலையை மேலே தூக்கினான். இருவர் கண்களும் சந்தித்தன. இருவருடைய நெஞ்சுகளும் ஒரு கணம் 'திக்'கென்று துடிப்பற்று நின்றுவிட்டன. அசையாது நின்றார்கள்.

''உங்களையல்ல நான் பேசியது. என் பிள்ளை பெயர் முத்துசாமி...அந்தப் பெயரிட்ட தண்டனைதான் இது!'' என்றாள். அழுகையை அவளால் அடக்கமுடியவில்லை, 'கோ' வென்று கதறிவிட்டாள்.

தாய் உருவத்தில் தன் எதிரே நின்று கண்ணீர் வடிக்கும் பொன்னம்மாளையும் அவளுடைய இறந்த குழந்தையையும் ஒருமுறை பிரேதக்களையுடன் நோக்கினான் ஜான்முத்துசாமி. அவனுடைய மார்பு, 'அடி பாவி' என்று முணுமுணுப்பது போல் ஒரு பெருமூச்சை வெளியே தள்ளியது.

குழந்தைக்கு வாங்கிய புதுச்சட்டையுடன் வந்துகொண்டிருந்த பழனிவேலுக்கு வண்டியின் பின்புறம் உடைந்து கிடந்த இசை வாத்தியம் ஓர் அபசகுனமாகத் தென்பட்டது.

அதன்பிறகு ஜான் முத்துசாமி கிளாரினெட் வாசிப்பதே யில்லை.



# புயலுக்குப் பின்

## 1

''கௌரி, புயலுக்குப்பின் என்ன தெரியுமா?'' என்றாள் குமுதம்.

''அமைதி!'' என்று நான் இயந்திரம்போல் பதிலளித்தேன்.

''இரவு முழுவதும் புயல்; கோரப் புயல்; பொழுது விடியு முன்னே அமைதி! ஆனால் நீ கூறியதைப் போன்ற அமைதி அல்ல; பயங்கரமான அமைதி; சாவைப்போன்ற அமைதி, இல்லை, சாவின் அமைதியேதான்!'' என்று அவள் தொடர்ந்து கூறினாள்.

எனக்கு ஒன்றும் பொருள் விளங்கவில்லை. அவளை உற்று நோக்கினேன். அவளுடைய நிலைமை என் கண்களிலிருந்து கரகரவென்று நீரைக் கொண்டுவந்து கொட்டியது.

குமுதம் நோய்ப் படுக்கையிலே புழுப்போல நெளிந்து கொண்டிருந்தாள். அவள் உடம்பெல்லாம் அனலாகத் தகித்தது, அவளுடைய மூச்சில் நெருப்புப் புகை வீசியது.

''வீணாக உன்னை அலட்டிக்கொள்ளாதே, குமுதம்; பேசாமல் கண்ணை மூடித் தூங்கு'' என்றேன். அவள் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

''நான் சொல்வது உனக்குப் புரிகிறதா?'' என்றாள்.

''புரியவில்லை; நான் புரிந்து கொள்ளவும் வேண்டாம், நான்சொல்வதைக்கொஞ்சம் கேளேன்'' என்று மெதுவாகப் போர்வையை அவள்மீது இழுத்து விட்டேன்.

''அப்படிச் சொல்லாதே, கௌரி. உன்னிடம் சொல்வதற்குத்தான் இந்த ரகசியத்தை ஒளித்துவைத்திருக்கிறேன். இதை வெளியிடாவிட்டால் என் நெஞ்சு வெடித்துவிடும்; வெடித்த நெஞ்சுகூட வேகாது!'' என்றாள்.

அவளுடைய கரங்களைப் பற்றி என் மார்பில் புதைத்துக் கொண்டு விம்மினேன். உணர்ச்சி உள்ளத்தை உருக்குலைத்து விட்டது. ''சொல்லு. குமுதம்; சொல்லு!'' என்று மீண்டும் விம்மினேன்.

''அவர் சாதாரண மனிதரல்ல; உயர்ந்த மனிதர்; அவரைச் சோதனை செய்ய முயன்றேன். அதன் பலன்தான் இது, அவரும் போய்விட்டார்; இதோ நானும் போகப் போகிறேன்...நான் பாவி! சண்டாளி! கொலைபாதகி! எனக்கு இனி விமோசனமே கிடையாது!''

நான் பெருமூச்செறிந்தேன். அவள் திடீரென்று என்னை ஒரு கேள்வி கேட்டாள்.

''விசுவாமித்திர ரிஷியின் பிரம்மசரியத்திற்கு ஒருமுறை பங்கம் ஏற்பட்டதே. அந்தக் கதை உனக்குத் தெரியுமா?'' என்றாள்.

''தெரியும்'' என்றேன்.

''எத்தனையோ வருடம் கடுந்தவஞ்செய்து, புலன்களை வென்று சித்தி பெற்ற அந்த யோகீசுவரரே ஒரு பெண் பிள்ளையின் கணநேரக் கண்வீச்சில் கருத்தழிந்தாரென்றால், பாவம், இவர் எம்மாத்திரம்?—அதிலும் நான் செய்தது, பரிபக்குவ மறியாத பதற்றத்தின் சோதனை!''

எனக்கு அவள் இதுவரை கூறியது ஒன்றுமே சரியாக விளங்கவில்லை. ''விளங்கும்படியாகச் சொல்'' என்றேன். அவள் கூறினாள்.

கூறிவிட்டுக் கடைசியில், ''இதை நான் உயிருடன் இருக்கப்போகும் இந்த இரண்டுநாட்கள் மாத்திரம் ஒருவரிடமும் சொல்லாதே. அதற்குப் பிறகு நான் உன்னைத் தடை செய்யவில்லை. உன்விருப்பம்'' என்றாள். அவள் தெரிவித்த விதமே, இரண்டு தினங்களில் என்னிடமிருந்து அவள் என்றைக்குமே பிரிந்து விட்டாள்! இனிமேல், என் உள்ளத்தைக் கருவண்டு போல் துளைத்துக்கொண்டிருக்கும் அந்தக் கதையை, அவளது பைத்தியக்கார முயற்சியின் பலனை, நான் உங்களுக்குச் சொல்லலாம்;—

முதலில் அவளைப் பற்றி இரண்டு வார்த்தைகள்.

எங்களுடைய கலைவாணி கல்லூரியின் பெயருக்கே ஒளி கொடுத்தவள் அவள்தான். அவள் அழகி. அவளுடைய அழகின் உயர்வை அநேகமாக எங்கள் கல்லூரி மாணவிகள் அத்தனை பேரும் உணர்ந்திருந்தோம். அவளுடைய அழகு சாதாரண உடலழகுடன் ஒப்பிடக்கூடியதல்ல; அது அசாதாரணப் பொலிவுடன் கூடியது. அது மாத்திரமல்ல. அவள் மதுரமான சாரீரக்காரி. நளினமாக நடிக்கும் திறமையுடையவள். பெரும்பாலும் எங்கள் பள்ளிக்கூட நாடகங்களிலெல்லாம் அவளுக்குத்தான் கதாநாயகி பாத்திரம். அவள் என் உயிர்ச் சிநேகிதி; நானும் அவளும் விடுதியில் ஒரே அறையில் இருந்தோம். வகுப்பும் ஒன்றுதான்.

குமுதத்திற்குத் தாய் இல்லை; அவளுடைய தகப்பனார் மறுமணம் செய்து கொண்டிருந்தார். குமுதத்தின் சித்தி வடநாட்டுக்காரி. அவள் பெயர் கிரிஜா. அவள் குமுதத்தைத் தன் உயிர்போல் நினைத்து வந்தாள். அவளுக்கும் வேறு குழந்தைகள் இல்லை, படிப்புச் செலவுக்கெல்லாம் மாதந்தோறும் கிரிஜாவின் கைப்படத்தான் பணம் வரும். கடிதங்கள் இரண்டுபேரும் சேர்ந்தே எழுதுவார்கள்.

குமுதம் எங்கள் விடுதியில் நாங்கள் நடத்திவந்த 'சக்தி கழக'த்திற்குச் செயலாளராக இருந்தாள். அவளுக்கு பள்ளிக்கூடப் புத்தகங்கள் படிப்பதைவிட பத்திரிகைகளைப் படிக்கத்தான் பொழுது இருக்கும்.

பத்திரிகை உலகத்தில் அவளுடைய கவனத்தை மிகவும் கவர்ந்தவர் ஜம்புநாதன். அவர் அடிக்கடி 'தமிழ்க்குமரி'க்கு கதையோ கட்டுரையோ எழுதிவருவார். அவருடைய எழுத்துக்களில் ஆழ்ந்த கருத்துக்களும் பரந்த நோக்கங்களும் காணப்படும். என்னைப் பொறுத்த மட்டில் நான் அவரை ஒரு வேதாந்தி என்றும் வயோதிகரென்றுமே கருதி வந்தேன். ஆனால், அவர் இளமை மாறாத யுவர் என்பது குமுதம் கூறிய பிறகுதான் எனக்குத் தெரிந்தது. இந்த விஷயத்தை அவள் எப்படித்தான் தெரிந்து கொண்டிருந்தாளோ!

அவளுடைய வார்த்தையில் எனக்கு நம்பிக்கை ஏற்படும் படியாக அந்த ஆண்டில் 'தமிழ்க்குமரி' மலர் வெளிவந்தது. அதில் ஜம்புநாதனுடைய புகைப்படத்தைப்போட்டு, அதன் கீழ்ப் பத்திரிகையின் ஆசிரியர், ஜம்புநாதனைப் புகழ்ந்து நாலு வார்த்தைகள் எழுதியிருந்தார். அந்தப் படத்தையே நான் அருகில் இருப்பதைக்கூட லட்சியம் செய்யாமல், அரை மணி நேரம் பார்த்துக்கொண்டிருந்தாள் குமுதம்.

## 2

ஒருநாள் இரவு, நான் சாப்பிட்டு வந்தவுடன் படிக்காமல் படுக்கையை விரித்துப் படுத்துக்கொண்டேன். உடனே தூக்கம் வந்துவிட்டது. மறுபடியும் திடீரென்று சில மணி நேரத்தில் விழிப்பு வந்ததால் கண் திறந்து நோக்கினேன். அறையில் இன்னும் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. மணி பன்னிரண்டு.

போர்வையைச் சரிவர விலக்காமல் குமுதம் உட்கார்ந்திருந்த நாற்காலிப் பக்கம் பார்த்தேன். அவளுடைய மடியில் அந்த 'மலர்' விரிந்து கிடந்தது. ஜம்புநாதனின் படம் வந்த அதே பக்கந்தான்! அவள் கைகளுக்குள் தலையைக் கவிழ்த்துக்கொண்டு கண்ணீரைச் சொரிந்த வண்ணம் இருந்தாள். நான் இதையெல்லாம் ஒன்றும் அறியாதவள்போல் மீண்டும் உறங்கிப் போய்விட்டேன்.

மறுநாள் அந்த மலரை எடுத்து அவர் எழுதியிருந்த அந்தக் கட்டுரையை இரண்டாவது தடவையாகப் படித்தேன். 'ஒளியும் இருளும்' என்ற தலைப்புடன் ஒரு லட்சியவாதி இந்த உலகத்தில் தம்முடைய நெஞ்சுடன் நடத்தும் இடைவிடாத போராட்டத்தைப் பற்றி எழுதியிருந்தார்; கொடுமை நிறைந்த இந்த உலகப் போக்கை அந்த லட்சியவாதி அடியோடு வெறுக்கிறார். அதற்காக அவர் தம்மையே பலியிட விரும்பி, அந்த பலிப்பொருளாகத் தம்மைமாற்றிக் கொள்ள விரும்புகிறார். உலகத்தின் கவனங்களும் அவற்றின் வழி நோக்கும் ஐம்புலவேட்டைகளும் அவருடைய நோக்கத்

திற்கு எதிரே நிற்கின்றன. இன்பதுன்பம் நிறைந்த 'இந்த வாழ்க்கைக்கிடையே இருதலைக் கொள்ளி எறும்பு போல் அகப்பட்ட அவர் தம்மையும் உலகையும் இந்த துன்பத்தி லிருந்து மீட்குமாறு இறைவனிடம் ஓலமிடுகிறார். கட்டுரை யின் சாரம் இதுதான்.

ஜம்புநாதன் தம்முடைய மன நிலையை இந்தக்கட்டுரை யில் அப்படியே வெளிப்படையாகக் கொட்டியிருக்கிறார். இப்போதுதான் நான் இதைத் தெரிந்து கொண்டேன்.

## 3

''இந்தவருடம் நமது கழகத்தின் ஆண்டுவிழாவின்போது ஜம்புநாதனைப் பேசுவதற்கு அழைக்கலாமா?'' என்றேன்.

அவள் உடனே பதிலளிக்கவில்லை. யோசித்துவிட்டு, ''உன் இஷ்டம்'' என்றாள்.

ஆண்டுவிழாவிற்காகத் துரிதமாக ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. எங்கள் கல்லூரித் தலைவியின் தலைமை யில் ஜம்புநாதனைச் சொற்பொழிவாற்றுவதற்கு அழைத் தோம். அவரும் ஒப்புக்கொண்டார். அன்றே நடத்துவ தற்கு விடுதி மாணவிகளால் சிவ பார்வதி நடனம் ஒன்றும் தயார் செய்தோம். குமுதந்தான் பார்வதி. விழா நெருங்க நெருங்க நான் குமுதத்தின் போக்கை மறைவாகக்கவனித்து வந்தேன். அவள் இரவு நேரத்தில் வெகு நாழிகை வரையில் விழித்துக் கொண்டிருப்பாள். அப்படியே நேரத்தில் படுக் கைக்குப் போய்விட்டாலும் சரியாகத் தூங்குவதில்லை. தூங்கும் சமயத்தில் ஏதேதோ அர்த்தமில்லாமல் பிதற்று வாள். நான் காரணம் கேட்டால் ''ஒன்றும்இல்லை!'' என்ற வார்த்தையுடன் அவள் வாய் அடைத்துவிடும்.

விழாவன்று காலையிலேயே ஜம்புநாதன் வந்திருந்தார். வட்டமான முகம்; விசாலமான நெற்றி! நெற்றியில் ஓரி ரண்டு மெல்லிய சிந்தனைக் கோடுகள்; மத்தியில் வகிடு எடுத்த 'கிராப்', பார்ப்பதற்கு அழகர், உயரமாக வளர்ந்து

வெள்ளை நிற உடையுடன் விளங்கினார். அவர் முகத்தில் எப்போதும் புன்னகை தவழ்ந்தது.

அவரது பேச்சைக் கேட்பதற்காக எல்லோரும் துடி துடித்துக் கொண்டிருந்தோம். நேரமும் வந்தது. அவரும் பேசினார்.

பத்திரிகைப்பைத்தியமாக இருந்த மாணவிகள் யாவரும் அவர் எழுத்தின் மந்திர சக்தியைத்தான் இதுவரை அறிந் திருந்தோம். அவர் பேசி நேரில் கேட்டதில்லை. இன்றுதான் கேட்டோம். கார்வானத்தில் இடி முழங்கி மழை பொழியும் பெருமேகம்போல் அவர் அன்று கர்ஜித்தார். அவர்உணர்ச்சி யோடு எங்கள் உணர்ச்சிகளை ஒன்றச் செய்து மெய்ம்மறந் திருந்தோம். நேரம் சென்றதே தெரியவில்லை. அன்று 'கலை யும் கற்பும்' என்ற விஷயத்தைப்பற்றிப் பேசி முடித்தார்.

இரவில் எட்டு மணி வரையில் நடனம் நடந்தது. மாணவிகளின் கலைத்திறனை ஐம்புநாதன் மிகவும் பாராட் டினார். அன்றிரவு அவருக்காக விடுதியில் ஒரு தனி அறை ஒழித்துக் கொடுக்கப்பட்டது.

அவர் மறுநாள் முற்பகலில் ஊர் திரும்புவதற்காக இருந் தார்.

''ஐம்புநாதனின் பேச்சைக் கேட்டாயா? எப்படி இருந் தது?'' என்றேன் குமுதத்திடம்

''பேச்சு நன்றாகத்தான் இருந்தது. ஆனால் ...'' என்றாள்.

''ஆனால் என்ன?''

''எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்கிறதோ;என்னால் யாரையுமே நம்பமுடியவில்லை.—ஏன்,என்னைக் கூடத்தான்!''

''விபரீதமாய்ப் பேசாதே,குமுதம்! உன் கற்பனையெல் லாம் தெய்வலோக வாழ்க்கைக்குத்தான் சரி. என்னவோ, எனக்கு அவர் தனித் திறமை படைத்தவர் என்று தோன்று கிறது. ஒழுங்கான மனிதரென்றே எண்ணுகிறேன்.''

பகற்பொழுதெல்லாம் மும்முரமாக விழாக் கொண் டாட்டத்தில் பங்கெடுத்துக் கொண்டதால், அதி விரைவி லேயே விடுதி உறங்கத் தொடங்கிவிட்டது. நானும் அறைக்கு வந்து களைப்பு மிகுதியால் கண்களை மூடிக்கொண்

டேன். பொழுது விடிந்து எட்டு மணிக்குப் பிறகுதான் நித்திரை கலைந்தது.

கண்களைத் துடைத்துக்கொண்டு குமுதத்தின் படுக்கையைப் பார்த்தேன். அவளைக் காணவில்லை. கதவைத் திறந்து வெளியே வந்தேன். விடுதி முழுவதும் ஒரே பரபரப்பாக இருந்தது. சிநேகிதிகளெல்லாம் கவலை தோய்ந்த முகத்துடன் என்னிடம் கூட்டமாக வந்து, ஒரு விஷயத்தைப் பதற்றத்தோடு தெரிவித்தனர். என் நெஞ்சின்மேல் ஒரு மலை பெயர்ந்து விழுவதுபோல் இருந்தது.

பரக்கப் பரக்க ஜம்புநாதன் தங்கியிருந்த அறைக்கு ஓடினேன். எனக்கு முன்பே அங்கே பெரிய கூட்டமொன்று அடைத்துக்கொண்டு நின்றது. படுக்கையில், ஜம்புநாதன் மடித்த கைகளுக்கிடையே' தலையைப் போட்டுக்கொண்டு குப்புறப் படுத்திருந்தார்.— ஆமாம்! இறந்துபோன ஜம்புநாதன்! ஜம்புநாதனின் சடலம்! டாக்டர் வந்து பார்த்துவிட்டு, ''சுமார் இரவு ஒரு மணிக்கு இவர் மாரடைப்பால் செத்துப்போயிருக்க வேண்டும். அளவுக்கு மீறிய ரத்தக் கொதிப்புதான் காரணம்'' என்றார். நாங்கள் பெருமூச்சு விட்டோம்; கண்ணீர்விட்டுக் கதறினோம்.

''அவர் செத்தே போய்விட்டாரா? இனி அவர் எழுந்திருக்கவே மாட்டாரா? இனி... அவர் என்னோடு...இல்லை இல்லை...ஒன்றும் இல்லை!'' என்று என்னிடம் தனிமையில் தடுமாறினாள் குமுதம். அவளைப் பார்க்கையில் எனக்குப் பகீரென்றது. அவள் ஏன் இப்படி உருமாறிப்போய், பேயறைந்த முகத்துடன், சாவின் சலனத்தைத் தன் விழிகளில் தாங்கி நிற்க வேண்டும்?

அவருடைய மரணம் குமுதத்தை அன்றே நோய்ப் படுக்கையில் தள்ளியது. அவள் விநாடிக்கு விநாடி சாவை எதிர் பார்த்திருந்தாள். அப்போது அவள் கூறிய கதையை இனித்தான் கூறப்போகிறேன்.

ஜம்புநாதன் குமுதத்தின் கணவர். அவருடைய சாவிற்கும் குமுதந்தான் காரணம்!

குமுதத்தின் பத்தாவது வயதிலேயே அவளுக்கும் ஐம்பு நாதனுக்கும் கல்யாணம் நடந்துவிட்டது. குமுதத்தின் தகப் பனார் சில வருடங்களில்— கிரிஜாவை—வடக்கத்தியாளை இரண்டாம் தாரமாக மணந்துகொண்டார். அந்தக்குற்றத் திற்காக ஐம்புநாதனின் தந்தை குமுதத்தைத் தம் வீட்டிற்கு அழைத்துக் கொள்ளவில்லை. ஐம்புநாதனுடைய நடை முறையோ வேறு விதமாக இருந்தது. அவர் தம்மை முற்றும் பொதுநலப் பணிக்கே அர்ப்பணித்துக்கொள்ள விரும்பினார். குமுதத்தைப் பற்றியும் அவளுடைய தற்போ தைய நிலையைப்பற்றியும் அவருக்கு அதிகமாய்த்தெரியாது. காலம் வந்தவுடன் கவனித்துக் கொள்வோம் என்று இருந் தார் போலும்.

குமுதத்தின் நெஞ்சிற்குள் என்னவோஒன்று அடிக்கடிகுறு குறுத்துக் கொண்டிருந்தது. 'என்றாயினும் ஒரு நாள் விரை வில் அவரை அடைந்துவிடுவோம். அது வரையில் அவருக்கு நம்மைப் பற்றித் தெரிவிக்கவேண்டாம். விதி எந்தக்காரணத் தால் என்னைப் பிரித்ததோ, அதே காரணத்தால் அவரிடம் என்னைச் சேர்த்துவிடும்' என்று நம்பியிருந்தாள், பேதை!

ஐம்புநாதனின் ஒழுக்கத்தைப் பரிசோதிக்க விரும்பினாள் குமுதம் ஆண்டு விழாவன்று. இரவு, அவருடைய இறுதிக் காலத்திற்கு அரைமணி முன்பு, அவளுடைய சோதனை நடந்தது.

அன்று இரவு நடுநிசி; ஐம்புநாதன் தங்கியிருந்த கோடி அறையில் மாத்திரம் இன்னும் விளக்கு எரிந்துகொண் டிருந்தது, மற்ற இடமெல்லாம் ஒரே இருள்.

குமுதம் அவருடைய அறைக்குச் சென்று கதவருகே சிலை போல் நின்றாள். படுக்கப் போகுமுன் கண்மூடித் தியா னித்துக் கொண்டிருந்த ஐம்புநாதன் விளக்கை அணைப்பதற் காக எழுந்து கதவருகில் வந்தார் அவருக்கு ஒன்றுமே புரிய வில்லை. சில நிமிடங்கள் கண் இமைக்காமல் குமுதத்தை விழித்து நோக்கினார்.

''நான் உள்ளே வரலாமா?'' என்ருள் குமுதம். அவர் தயங்கினுர். பின்பு, ''வரலாம்.....ஆனுல் எதற்காக?'' என்ருர்.

அவருக்கு அவள் யார் என்று தெரியாது.

அவள் வாய் திறந்து பதில் சொல்லவில்லை. அவளுடைய கண்கள், 'எதற்காகவா?' என்று அவரையே மோன மொழியில் வினவின.

அவருடைய பார்வை தரையை நோக்கியது.

''என்னை உங்களுக்குத் தெரிகிறதா?'' எனக் கேட்டு அமைதியைக் கலைத்தாள் குமுதம்.

''ஆமாம். ஞாபகம் இருக்கிறது; இன்றைய நடனத்தில்''

''நீங்கள் நன்ருகப் பேசினீர்கள்.''

''நீங்களும் நன்ருக நடித்தீர்கள்...சரி, காலையில் பேசிக் கொள்வோம்...நான் பகல் பத்து மணிக்குத்தான் புறப்படு கிறேன்!''

அவள் அவ்விடத்தை விட்டு அசையவில்லை. வெளியில் ஒரே கும்மிருட்டு. அறையில் தனிமை. வானத்தில் சிதறிக் கிடந்த ஒளிச்சுடர்கள்கூட மேகத்திற்குள் மறைந்து கொண் டன. அறை விளக்கு ஒரு தரம் நின்று மீண்டும் ஒளி வீசியது.

ஜம்புநாதன் ஒரே குழப்பத்துடன் அங்கே நின்றுகொண் டிருந்தார். அவளுடைய நடிப்பின் வெளி மயக்கு அவருக்குப் புலப்படவில்லை. அறையின் வெளிப்புறத்தைக் கவ்விக் கொண்டிருந்த இருள் அவர் இருதயத்தையும் சேர்த்துக் கவ்வியது.

ஜம்புநாதன் உயரிய லட்சியம் கொண்டவர்தாம். தம் ஒழுக்கத்தை ஒவ்வொரு கணமும் காத்து வருபவரே. அவரு டைய முகத்தின் ஒளி அவருள் கனிந்துகொண்டிருந்த நெஞ் சுறுதியை எடுத்துக்காட்டியது. ஆனுல், அவருடைய முயற்சி யில் அவர் பூரணமாக வெற்றி பெறவில்லை. அவர் ஐம்புலன் களை அடக்கிய மகானுகிவிடவில்லை. அவர் இளைஞர். அவ ருள்ளே விரித்தாடிய பருவ நாகத்தின் பல்லைப் பிடுங்கி எறியும் திறனை அவர் அப்போது முற்றும் இழந்தார். அவர் மனம் கொந்தளித்தது. மூச்சிலே புயல் சீறியது.

குமுதத்தை நோக்கி ஓர் அடி முன்னால் எடுத்து வைத்தார் ஐம்புநாதன். அவ்வளவுதான்! தன்னை எதிர்த்துப் போரிடத் துணிந்த மனிதப் புழுவைத் தாக்கத் தயாராக நிற்கும் பெண் புலிபோல் மாறிவிட்டாள். குமுதம். அவளுடைய கண்களில் ரத்தம் தெறித்தது

''நில்லுங்கள்!—கற்புத் தெய்வம் கண்ணகியைப் பற்றிக் கதறிய வீரர்தாமே நீங்கள்? லட்சிய புருஷன் ராமனைப் பற்றி கர்ஜித்த சிங்கந்தானே?...ஐயோ! என் எண்ணமெல்லாம் மண்ணாகிவிட்டதே!'' என்று குமுறினாள் குமுதம்.

திடீரென்று படுக்கையில் சாய்ந்தார் ஐம்புநாதன். மணி ஒன்று அடித்தது. கடைசி மணியோசை அவர் காதில் விழுந்ததோ என்னமோ!

சூறாவளிபோல் தன் அறைக்கு வந்து படுக்கையில் புரண்டாள் குமுதம். படுக்கை முள்ளாக இருந்தது. தீயாகச் சுட்டது. காலையில் அவள் கேட்ட முதற் செய்தி அவள் கணவனின் மரணச் செய்தி!

சோகத்தில் முடிந்த தன் சோதனை நாடகத்தை என்னிடம் கூறிய குமுதம், ''அவர் மலராத மல்லிகை! அதற்குள், நான் அவரிடம் மணத்தை எதிர்பார்த்தேன். பாவி! அந்த மொட்டையே கசக்கிவிட்டேன். அவரது மெல்லிய மனப்பான்மையை அறியாத நான், அவர் படுக்கையில் விழுந்தபோது அவர் உயிரோடு இருப்பதாகவே எண்ணினேன். அன்றிரவெல்லாம் அவரை பழி வாங்கக் கோட்டைகள் கட்டினேன். அவரே என்னைப் பழி வாங்கிக் கொண்டார். இதோ, போகிறேன் அவரிடம்!'' என்று முடித்தாள். இரண்டு நாட்கள் சென்றன; அமைதி நிலவியது.



# ஏழைப் பிள்ளையார்

ஏழைப் பிள்ளையார் என்ற திருநாமத்தை எந்தப் புண்ணியவான், எந்த நல்ல நாள் பார்த்து எங்கள் ஊர்க்குளத்தங் கரைப் பிள்ளையாருக்குச் சூட்டினானோ நமக்குத் தெரியாது. ஆனால் அவன் செய்ததென்னவோ முற்றிலும் நியாயமான காரியந்தான்.

பிள்ளையாருக்கு அநேகமாகத் தீபாவளிக்குத் தீபாவளி தான் 'எண்ணெய் ஸ்நானப் பிராப்தி, கிடைக்கும். அதுவும் பெரும்பாலும் அரைகுறையான முறையில்தான். வெயில், காற்று, குளிர், மழை இவைகளிலிருந்து ஒண்டிக்கொள்ள அவருக்கு ஓர் அரசமரத்தைத் தவிர, வேறொரு புகலிடமும் கிடையாது. அவரே இப்படித் திண்டாடும்போது, அவரைச் சூழ்ந்துள்ள மூஞ்சூறு, நாகர் முதலிய குட்டிப் பரிவாரங் களைப்பற்றிச் சொல்லுவானேன்?

ஏழைப் பிள்ளையாரை ஏழைகளைத் தவிர வேறு யார் கும்பிடப் போகிறார்கள்? பணக்காரர்கள் கும்பிடக்கூடிய பாக்கியத்தைப் பெற்றிருந்தால்தான் அவர் இத்தனை காலமும் பணக்காரப் பிள்ளையாராக மாறியிருப்பாரே? அப்படி எவனாவது ஒரு பணக்காரன் கும்பிட்டிருந்தாலும் அவன் பணச் செலவுக்கு அஞ்சிப் பசியா வரம் கேட்கும் பரம பக்தனாகத்தான் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் விநாயகருக்கு ஒரு கூரைக் கொட்டகையாவது கிடைத்திருக்குமே!

தீபாவளிக்கு முதல் நாள் மாலை. ஏழைக் குடியானவன் ஒருவன் பட்டணத்தில் வாசம் செய்யும் பெரிய உத்தியோகஸ்தர் ஒருவருக்குச் சொந்தமான நிலத்தில் உழைத்துவிட்டு சோர்ந்துபோய்க் குடிசைக்குத் திரும்பிக்கொண்டிருந்தான். நிலத்திற்கும் அவன் குடிசைக்கும் மூன்று மைல் தூரம்.

அவனுக்குத் தாங்கமுடியாத ஒரு பெரிய கவலை. தீபாவளிக்காக அவன் தன் பையனுக்கு அவசியம் புதுத் துண்

டொன்று வாங்கி வருவதாகச் சொல்லியிருந்தான். தீபாவளி நெருங்க நெருங்கப் பையனின் தொந்தரவு அதிகமாகிக் கொண்டிருந்தது. ''கணக்குப்பிள்ளை மகன் கட்டிருக்கே, அது மாதிரிப் பட்டுத் துண்டு வேணும்'' என்று பையன் தன் தகப்பனிடம் ஆசையை வெளியிட்டிருந்தான்.

பட்டுத் துண்டைத்தான் கனவிலும் நினைத்துப் பார்க்கத் தைரியமில்லையென்றால், சாதாரண நாட்டுத் துண்டாவது ஒன்று எடுக்க வேண்டாமா? அதற்குக்கூட அவனிடம் காசு இல்லை.

இந்த நிலைமையில்தான் அவன் ஏழைப் பிள்ளையார் கோவிலுக்கு வந்து ஒன்பது தோப்புக்கரணங்களைப் போட்டு விட்டு, ''சாமி, துண்டு இல்லாமல் நான் வீடு திரும்ப மாட்டேன். எனக்கு எப்படியாவது துண்டு கிடைக்க வேண்டும். கிடைத்துவிடும் என்றால் கிழக்குப் பக்கம் சகுனம் சொல்லு; கிடைக்காதென்றால் மேற்கே சொல்லு'' என்றான்.

உடனே கிழக்கே அரச மரத்தின் தாழ்ந்த கிளையி லிருந்து 'டக் டக், டக்' கென்று பல்லி சொல்லியது.

''நிச்சயம் கிடைக்கும் போலிருக்கிறதே! உன்னை நம்பலாமா?'' என்றான் ஆச்சரியத்தோடு. சொல்லிவைத்தாற் போல் அதே சமயத்தில் மேற்கிலிருந்து பல்லி சொல்லியது!

''இந்தக் காலத்தில் கடவுளைக்கூட நம்ப வழியில்லை! உலகத்தில்தான் பித்தலாட்டம் பெருத்துவிட்டதென்றால், கடவுளும் அந்த உலகத்துடன் சேர்ந்துவிட்டதே!'' என்று வருத்தத்தோடு முனகினான். முனகிவிட்டுப் பக்கத்திலிருந்த குளத்தில் இறங்கி இரண்டுவாய் நீர் குடித்துவிட்டுக் குளத்தின் படிக்கட்டிலேயே படுத்துக் கண்களை மூடினான். வெறுங் கையோடு வீட்டிற்குத் திரும்புவதில் என்ன பிரயோசனம் என்ற எண்ணம் போலும்.

அரைத் தூக்கத்தில் அவனுடைய கனவில் விநாயகர் தோன்றித் தம் துன்பத்தையெல்லாம் அவனிடம் சொல்லிக் கொண்டார்.

''பக்தா! அடுத்த நாள் பொழுது விடிவதற்குள் எனக்கு ஓர் அதிருஷ்டம் வரப்போகிறது; இந்த ஊர் மிராசுதார்

தமக்கு ஏதாவது 'பகதூர்' பட்டம் கிடைத்தால் எனக்குத் தீபாவளியின்போது பட்டுத் துண்டு பரிசளிப்பதாகத் தெரிவித்திருக்கிறார். சமீபத்தில் அவர் ராவ்பகதூர் ஆனார். ஆகையால் இன்றிரவுக்குள் ஒரு பட்டுத்துண்டு வந்துவிடும். அதை நீ தாராளமாய் எடுத்துக்கொண்டு போ! ஆனால் அதை நீ வீடு கொண்டு சேர்ப்பாயோ என்பதுதான் சந்தேகம்!'' என்றார் விநாயகர்.

'பிள்ளையார் இவ்வளவு ஏழையாக இருந்தும் எவ்வளவு சுய நலமற்றவராக இருக்கிறார்' என்று நினைத்து வியப்படைந்தான் குடியானவன்.

''அப்படி நினைக்காதே பக்தா! ஏழைக்கு ஏழைதான் உதவுவான்!'' என்றார் அவர்.

''உண்மை''என்று ஒப்புக்கொண்டு அவர் பேச்சை மேலே கேட்கத் தொடங்கினான்.

''கடவுளாக இருப்பதில் எவ்வளவு சிரமம் இருக்கிறது தெரியுமா?அதற்கு எவ்வளவோ காரணங்கள் காட்டலாம். உனக்குத்தான் தெரியுமே, கேவலம் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் எனக்குத் தேங்காய் உடைப்பதாகக் கூறி அடிக்கடி ஏமாற்றும் விஷயம்! அத்துடன் அவர்கள் விடுகிறார்களா? தேர்வில் தேறாவிட்டால் அவர்கள் பொழியும் வசைமாரி—ஏன் கல்மாரியுங்கூட—அப்பப்பா, என்னால் சகிக்க முடியவில்லை?

''அது கிடக்கட்டும், இந்த ஊரில் இளம் காதலர்கள் இருவர் இருந்தார்கள்.இப்போது அவர்கள் காதலர்களாயில்லை. இருவரும் கல்யாணம் செய்து கொண்டு குடும்பத்தைத் தொடங்கி விட்டார்கள். இப்போது தினந்தோறும் அவர்களுக்குள் ஆயிரம் சண்டை சச்சரவுகள்.

''அந்தக் காதலி இருக்கிறாளே, அவள் மிகவும் பொல்லாத பெண்.

''அவரையே கல்யாணம் செய்து வைக்கவேண்டும். இல்லாவிட்டால் பழியை உங்கள்மேல் போட்டுவிட்டு, இந்தக் குளத்தில் விழுந்து இறந்து விடுவேன்! என்று என்னைப் பயமுறுத்துவாள்.

''அவள் காதலனோ அவளைவிடப் பொல்லாதவன். அவளைப்போல தன்னையே மாய்த்துக்கொள்வதாக அவன் பயமுறுத்தாமல், தன் காதல் மட்டும் நிறைவேருவிட்டால் என்னையே தூக்கிக் குளத்தில் எறிந்துவிடுவதாகக் கூறியிருந் தான். பார்த்தாயா:- என் பக்தர்களின் வேண்டுகோளை? நல்ல வேளை, அவர்கள் இருவரும் சதிபதிகள் ஆகிவிட்டனர்.

''ஆனாலும் இன்னும் என்னை விட்டபாடில்லை. தங்களை ஒன்ருக்கியதற்காக இப்போது என்னைக் குறை கூறுகிருர்கள்.

''இன்னும் ஒரே ஒரு விஷயம்...

''என்னிடம் தீவிர அபிமானம் உள்ளவர்களில் அடிக்கடி இங்கு வந்து செல்லும் எழுத்தாளனும் ஒருவன். எழுத் தாளர்களைப் பற்றிச் சொன்னுல் உனக்குப் புரியுமோ என்னவோ; புரிந்தால் தெரிந்துகொள்.

''எனக்கும் இவனுக்கும் உள்ள தொடர்புகளைப்பற்றி அவன் எழுதியிருக்கும் 'பிள்ளையாரும் உடற் பயிற்சியும் அல்லது தோப்புக்கரண மகாத்மியம்' என்னும் புத்தகத் தைப் படித்தால் தெரியும். உனக்குத்தான் படிக்கத் தெரி யாது. படிக்கத் தெரிந்தாலும் நீஅதைப் பார்க்க முடியாது. அதுதான் இன்னும் அச்சாகி வெளிவரவில்லையே?

''அச்சுக்கூடத்தில் கையெழுத்துப் பிரதியாய்ச் சிறை வைக்கப்பட்டிருக்கும் அந்தப் புத்தகத்தை அவன் எனக்குக் காணிக்கையாக்கப் போகிருனும்.

''மூச்சு விட்டால்கூட ஒரு காரணத்தை வைத்துக் கொண்டுதான் அவன் மூச்சுவிடுவான்! என்னிடம் காலையும் மாலையும் தவருது வந்து, தோப்புக்கரணம்போடுவது, சிரம் தோய வணங்குவது, அரசமரத்தைச் சுற்றுவது இவை ஒவ் வொன்றிலும் பன்னிரண்டுக்குக் குறையாமல் செய்து வி வான். இதையெல்லாம் என்மீது இருக்கக்கூடிய அளவு கடந்த பக்தியால் செய்கிருன் என்று நான் நினைத்துக் கொள்ள வேண்டுமாம். ஆனுல் அவனுடைய புத்தகத்தைப் பார்த்தால்தான் உண்மை விளங்கும். அந்தக் கையெழுத்துப் பிரதியின் பதினேழாவது பக்கம், ஒன்பதாவது வரியில் பார்த் தால், இந்த மாதிரித் தோப்புக்கரணம் போடுவதால்,

விநாயகர் நம்மைச் சிறந்த பக்தன் என்றும் நினைத்துக் கொள்வார்; அதே சமயத்தில் நமக்கு நல்ல உடல் வலிவும் ஏற்படும். விநாயகரைப்போல் வயிறு படைத்தவர்கள் கூட இந்தப் பயிற்சியில் ஈடுபட்டால், ஆலிலையைப் போன்ற வயிற்றைப் பெறலாம் என்று எழுதியிருக்கிறுன்.

''இன்னும் இதைப் போல உனக்கு எத்தனையோ கதைகளைச் சொல்லலாம். ஆனால் நாழிகை ஆகிவிட்டது, நான் எதிர்பார்த்த ராவ்பகதூரும் எனக்குத் துண்டைக் கட்டி விட்டுப் போய்விட்டார். சீக்கிரம் எழுந்து குளத்தில் குளித்துவிட்டு என் பட்டுத் துண்டை எடுத்து உன் பையனுக்குக் கொண்டு போ. ஆனால் ஜாக்கிரதை; ராவ்பகதூர் ஆட்கள் கண்ணில் பட்டுவிடாதே!''

குடியானவன் வியப்பும் திகைப்புமாக எழுந்தான். பிள்ளையார் கூறியதெல்லாம் உண்மைதானு என்று அவசரம் அவசரமாக வந்து பார்த்தான். உண்மையிலேயே அவர் ஒரு பட்டுத்துண்டை உடுத்துக்கொண்டிருந்தார்.

குளத்தில் இறங்கிக் குளித்துவிட்டு, ''சாமி, உன் சொல்லை நம்பித்தான் இந்தக் காரியம் செய்கிறேன். என்னை மன்னிக்க வேணும்'' என்று சொல்லிக்கொண்டே நடுங்கிய கரத்தால் விநாயகரின் துண்டை எடுத்துச் சுருட்டிக்கொண்டு வேகமாக நடந்தான்.

வெகு தூரம் போகவில்லை. அதற்குள் மிராசுதாரின் ஆட்கள் அவன் செய்கையை எப்படியோ கண்டுபிடித்து விட்டார்கள். அதற்கு அப்புறம் என்ன.—தண்டனைதான்.

ஒரு மரத்தில் கட்டிவைக்கப்பெற்று சவுக்கினுல் அடிக்கப்பட்டான். அடி தாங்கமாட்டாமல் வாய் விட்டு அலறினுன் அவன். அதே சமயத்தில் அவன் வீட்டில், தகப்பனுர் தனக்குப் புதுத் துண்டு கொண்டுவரவில்லையே என்று அவனுடைய பையன் வாய்விட்டு அலறினுன். இருவருடைய அழுகுரலையும் கேட்டுக் கொண்டுதான் இருந்தார் பிள்ளையார். ஆனால் அவரால் அதற்குமேல் ஒன்றும் செய்ய முடியவில்லை.

அவர் ஏழைப்பிள்ளையார் மாத்திரமல்ல; கல்லுப் பிள்ளையாருங்கூட!

# தாலிக் கயிறு

''எனக்கு ஏதாச்சம் வந்திருக்கா?''

''உனக்கா?''

தபால்காரக் கந்தையா மூக்குக் கண்ணுடியை நெற்றி மேட்டின் மேல் தூக்கிவைத்துக்கொண்டு, அவளை வெறுப் போடு பார்த்தான். ஏற்கனவே சுருங்கிப்போய் அவலட் சணமாக இருந்த அவன் கிழட்டு முகத்தில் இன்னும் எத் தனையோ கோரமான கோடுகள் தோன்றின. ''இனிமேல் உனக்கு வரவேண்டியது வாந்திபேதிதான்!'' என்று தன் வாக்கியத்தை முடித்தான்.

கந்தையாவின்மேல் குற்றமில்லை. அவனுக்குச் சலிப்புத் தட்டிவிட்டது. அதன்மேல் வெறுப்பும் ஏற்பட்டுவிட்டது. எத்தனை நாட்களுக்குத்தான் அவன்பாக்கியத்தின், ''எனக்கு ஏதாச்சும் வந்திருக்கா?'' என்ற ஒரே கேள்விக்கு, ''உனக்கு ஒண்ணும் வரல்லே'' என்ற ஒரே பதிலையே திரும்பத் திரும் பச் சொல்லிக் கொண்டிருப்பான்.

பாக்கியத்தின் மேலும் குற்றமில்லை. அவள் ஆத்திரம் அவளுக்கு. பட்டாளத்தில் போய்ச் சேர்ந்த அவள் கணவன் மூன்று மாதமாகியும் ஒரு கடிதமாவது போடவேண்டாமா?

தபால்காரக் கிழவனின் பேச்சு அவள் நெஞ்சில் ஊசி யைப்போல் தைத்தது. தன்னுடைய சகிக்க முடியாத நிலை மையை அவனிடம் வாய்விட்டுச் சொன்னுள். சொல்லி விட்டு, ''என்னமோ, என்னோட மனசு கிடந்து அடிச்சிக்கு துங்க. அதுக்காக வீணு உங்களுக்குத் தொந்தரவு கொடுக் கிறேன். இன்னிமே சாமி ஆணை உங்களை நாணுக் கேக்க லீங்க'' என்ருள். அப்போது அவள் கண் இமைகளில் தேங்கி நின்ற கண்ணீர் பொலபொலவென்று உதிர்ந்தது.

கந்தையாவும் மனிதன்தானே? அதுவும் வாழ்க்கையில் அளவுக்கு அதிகமாக அடிபட்டு முதுமையைத் தானே வலு

வில் வரவழைத்துக் கொண்ட கிழவன் அவன். அவனுக்கும் பாக்கியத்தின் நிலைமை ஒரு விதமாக விளங்கியது. தன் கோபத்தை வேறு பக்கம் திருப்பினான்

''தடிப் பசங்கள்! பட்டாளத்துச் சட்டையை மாட்டிக் கிட்டாலே இவன்களுக்கு இந்த உலகத்து ஞாபகமே வாரதில்லே!...வீட்டிலே பெண்டாட்டி, பிள்ளை, குழந்தை, குஞ்சு இருக்கிறதுகளே என்ற கவலை கொஞ்சமாவது இருந்தால் தானே!...அம்மா! பாக்கியம் நீ ஒண்ணுக்கும் கவலைப் படாதே, உனக்கு ஏதாச்சும் வந்தால் நான் முதல்லே கொண்டு வந்து கொடுக்கிறேன்'' என்று சொல்லி விட்டுக் கிளம்பினான்.

மறு நாளிலிருந்து பாக்கியம் தபால்காரனிடம் ஒன்றும் கேட்பதில்லை. ஆனால் அவள் கண்கள் அவளையும் மீறிக் கந்தையா வரும் நேரங்களில் அந்தத் தெருப்பக்கம் அலையும். அதை அவன் உணர்ந்துகொள்வான். தானாகவே முன்வந்து "உனக்கு ஒண்ணும் வரல்லேம்மா!" என்று சொல்லிவிட்டுப் போவான்.

அவனுக்குப் பிறந்த பெண்களில் பாக்கியத்தையும் ஒருத்தியாக அவன் பாவித்துவிட்டான்.

## 2

பாக்கியத்தின் கணவன் குப்புசாமி அந்த ஊருக்குக் 'கோட்டைக்காரப் பெண்பிள்ளை' வருவதற்கு முன்பு மிகவும் யோக்கியமாகத்தான் இருந்தான். ஆனால் அவள் 'குண்டுக்கு'ப் பயந்து கொண்டு இந்த ஊருக்கு வந்ததிலிருந்து அவனுடைய நடத்தை பிசக ஆரம்பித்தது. வேலைக்கு வீட்டிற்கு வருவதில்லை. நிலபுலங்களைக் கவனிப்பதில்லை. பாக்கியத்திடங்கூடச் சரியாக முகம் கொடுத்துப் பேசுவதில்லை.

பாக்கியம் குப்புசாமியின் போக்கைத் தெரிந்துகொண்டாளே தவிர, அதற்காக அவளால் ஒன்றும் செய்ய முடியவில்லை. தனக்குள் எண்ணி எண்ணி ஏங்கினாள். உருகி உருகிக் கண்ணீர் உதிர்த்தாள்.

விவரம் தெரியாத குழந்தை சுந்தரத்தை எடுத்து அணைத்துக்கொண்டு, ''உன்னோட அப்பன் இப்படிக் கோட்டைக்காரி வீடே கதியின்னு கிடக்கிறாரே. நம்மோட கதி என்னடா ஆகிறது? கடவுளுக்குக் கூடக் கண் இல்லையே!'' என்று அவனிடம் சொல்லிப் புலம்புவாள். குழந்தையும் அவளுடன் சேர்ந்து கதறுவான். இதுதான் குப்புசாமியின் மனமாற்றத்திலிருந்து அவர்கள் வீட்டில் தினசரி நடக்கும் சோக நாடகம்.

குப்புசாமி ஆடு மாடுகளை விற்றான்; தோப்புத் துரவுகளை விற்றான். எல்லாம் வேறு யாருக்கு? அந்தக் கோட்டைக் காரிக்காகத்தான்.

வருடங்கள் சென்றன. இந்த மாதிரித் தலைகீழாக அவனைப்போல் ஒரு குடியானவனால் எத்தனை காலந்தான் ஆட்டம் போட முடியும்?

ஒருநாள் அழுகையும் ஆத்திரமுமாய் வீட்டிற்கு வந்து, தான் செய்த குற்றத்தை எல்லாம் தன் மனைவியிடம் தானாக ஒப்புக்கொண்டான். ஒப்புக்கொண்டு, ''இன்னிமே நான் இந்த ஊரிலே நாலுகாசு இல்லாமல் தலை நீட்டக் கூடாது, பாக்கியம்! பட்டாளத்தில் சேர்ந்து உனக்கு எப்படியாச்சும் பணம் அனுப்புகிறேன். நாமும் முன்னைப்போல் குடியும் குடித்தனமுமாய் இருந்தால்தான் இந்த ஊரிலே இருக்க முடியும்'' என்றான்.

தன் வீட்டுக்காரன் இவ்வளவு தூரம் மாறிப்போன தைப் பாக்கியத்தால் நம்பவே முடியவில்லை. ஆனால் அவனு டைய பட்டாளத்துத் தீர்மானம் அவள் தலையைச் சுற்ற வைத்தது. ''நீங்கள் பட்டாளத்துக்குப் போய் எனக்குப் பணம் அனுப்ப வேண்டாம். பட்டினி கிடந்தாலும் இங்கேயே கிடப்போம். இந்தப் பிள்ளை முகத்தைப் பார்த் தாவது நம்மோட பசியை மறப்போமே!'' என்றாள்.

ஆனால் குப்புசாமி ஒரே பிடிவாதத்தோடு புறப்பட் டான். பாக்கியம் தன்னை இத்தனை காலம் போட்டு வாட்டிய அதே விதியை இன்னும் நொந்துகொண்டு பேசாதிருந்தாள்.

# 3

பாக்கியத்திற்குப் பாக்கியம் வந்துவிட்டது. ''இந்தா பாக்கியம், உனக்கு அதிருஷ்டம்!'' என்று கந்தையா அவளிடம் ஒரு கவரை எடுத்து நீட்டினுன். பாக்கியத்திற்கு மனம் ஆனந்தப் பரபரப்பால் பொங்கித் தவித்தது. ''எனக்குப் படிக்கத் தெரியாதுங்களே! நீங்களே கொஞ்சம் பார்த்துச் சொல்லீடுங்க'' என்ருள்.

வெள்ளெழுத்துக் கண்ணுடியைத் துடைத்து மாட்டிக் கொண்டு கண்களுக்குப் பக்கத்தில் கடிதத்தை வைத்துத் தட்டுத் தடுமாறி வாசித்தான் கந்தையா.

''அருமை பாக்கியம்! நான் இங்கே சுகமாகயிருக்கிறேன். நீ என்னை மறந்து விடாதே. கட்டாயம் உனக்கு அடுத்த வாரம் பணம் அனுப்புகிறேன். பணம் உனக்கு அங்கே பத்தாந்தேதி கிடைக்கும்.''

இப்படிக்கு,
**குப்புசாமி**

''பையனைப் பத்தி ஒண்ணும் எழுதல்லீங்களா?'' என்ருள் வருத்தத்தோடு பாக்கியம்.

''இல்லையே!'' என்ருன் கந்தையா.

''அவனுக்குத்தாங்க முதுகிலே என்னமோ புறப்பட்டிருக்கு; எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியல்லே'' என்று சொல்லிக் கைகளைப் பிசைந்தாள்.

''எனக்கு இத்தனை நாளாய் நீ ஒண்ணும் சொல்லல்லியே எங்கே அவனைப் பார்க்கலாம்'' என்று உள்ளே சென்று பையனைப் பார்த்தான். பார்த்துவிட்டு, ''இது பொல்லாததம்மா. கோட்டைக்குக் கொண்டு போய் ஆஸ்பத்திரியிலே பார்க்கணும்'' என்ருன்.

''எல்லோரும் இப்படித்தான் சொல்ருங்க. கையிலே சல்லிக் காசுகூட இல்லீங்களே; நான் என்ன செய்வேன்?'' என்று ஏங்கினுள் பாக்கியம்.

''பயப்படாதே அம்மா! இன்னும் ஒரு வாரத்திலே பணம் வந்திடும், வந்தவுடன் கோட்டைக்குக் கிளம்பலாம். அதுக்குள்ளே ஒண்ணும் ஆபத்து வந்திடாது'' என்று ஆறுதல் சொல்லிவிட்டுப் போனுன் கந்தையா.

# 4

அந்தப் பத்தாம் தேதியை எதிர்பார்த்துத்தானே என்னவோ பாக்கியத்தின் குழந்தை முதுகிலிருந்த புறப்பாடு கனிந்து சிவந்துபோய் 'உடைந்துவிடப் போகிறேன்!' என்று பயமுறுத்திக்கொண்டு தன்னுடைய ரணவாயைத் திறப்ப தற்குத் தயாராக இருந்தது. அதற்குள் பாக்கியம் கோட்டை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோவதற்கு வேண்டிய ஆயத்தங் களையெல்லாம் செய்துவிட்டாள். பணம் வர வேண்டியது தான் பாக்கி.

பொழுது விடிந்து சூரியன் மேலே கிளம்பு முன்னரே தபாலாபீஸில் போய்க் காத்துக்கொண்டிருந்தாள் பாக்கியம் நிமிடம் போவது எத்தனையோ யுகங்களாக இருந்தது.

'மெயில்' வந்தவுடன் பிராஞ்சு போஸ்ட்மாஸ்டர் 'கட்டை' அவிழ்த்துத்தபால்காரக் கந்தையாவிடம் வீசினுர். கிழவன் அவசர அவசரமாகப் பிரித்துப் பார்த்தான், பார்த்துவிட்டு வெளியே வந்து, ''அம்மா, பாக்கியம்! உனக்குப் பணம் வந்திருக்குதம்மா, இருபத்தஞ்சு ரூபாய்!'' என்று பொக்கைப் பல்லைக் காட்டிக் கொண்டே கூறினுன்.

நெஞ்சுச் சுமை தீர ஒரு பெருமூச்சு விட்டாள் பாக்கியம். அவள் வாய் தன்னையறியாமல் ''அம்மா மாரித்தாயே! நீ தான் துணை'' என்று முணுமுணுத்தது.

பாக்கியத்தின் துடிதுடிப்பில் பாதிக்குமேல் கிழவனுக் கும் இருந்தது. பணத்தை போஸ்ட்மாஸ்டரிடம் வாங்கி முதல் காரியமாகப் பாக்கியத்திடம் கொடுத்தான். கொடுத்த பின்புதான் அவனுக்கு அவளிடம் கைரேகை வாங்கத் தோன்றியது. கையெழுத்துப் பேடாத் தெரியாத வர்களுக்குப் பணம் வந்தால் அவர்களுக்குச் சாட்சிக் கையெ

ழுத்து யாராவது போடவேண்டும். அப்படிச் சாட்சிக் கையெழுத்துப் போடுவதற்கும் பாக்கியத்தின் அடுத்த வீட்டுக்காரன் அவனுடன் வந்திருந்தான். அவனைப் பார்த்துப் போஸ்ட்மாஸ்டர், ''இவதானே கோட்டைக்காரப் பாக்கியம்? இவளை உனக்குத் தெரியுமா?'' என்றார்.

"கோட்டைக்காரப் பாக்கியமா?—கோட்டைக்காரிக்கா பணம் வந்திருக்கு?''—பிசாசு பிடித்தவள்போல் தலையைப் பிய்த்துக்கொண்டு கூவினாள் பாக்கியம். அவள் கையில் இருந்த பணம் நாலு திக்கிலும் உருண்டு ஓடியது.

போஸ்ட்மாஸ்டருக்குக் கந்தையாவின் மேல் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. ''உமக்கு வர வரக் கண்ணும் கெட்டுப்போச்சு; புத்தியும் கெட்டுபோச்சு! யாருக்கு வந்த பணத்தை யாருக்கையா தானம் கொடுக்கிறீர்?'' என்று சீறினார். ''நான் உன்கிட்டே குடுத்த அந்தக் கடுதாசிகூட அவளுக்குத்தான் வந்திருக்கும் போலே இருக்கே!'' என்று தணிந்த குரலில் பாக்கியத்திடம் தடுமாறினான் கிழவன்.

பாக்கியத்திற்கு வெறி பிடித்துவிட்டது. ''பாவிப்பயல்! அவன் என் புருஷனில்லே; அவன் கட்டின தாலி என் கழுத்திலே இன்னிமே சுருக்குக் கயிறாகத் தொங்கவேண்டாம்!'' என வெடுக்கெனப் பற்றி இழுத்தாள்.

அந்தத் தாலியை விற்ற பணத்தை எடுத்துக்கொண்டு அவளுடைய குழந்தையைக் கடுமையான ரண ஜன்னியிலிருந்து தப்புவிக்க அவள் கோட்டை ஆஸ்பத்திரிக்குப் புறப்பட்டாள்.



# சிசுவின் குரல்

''அம்மா!''

அவள் திடுக்கிட்டாள்; லேசாகக் கண்களைத் திறந்து நாலுபுறமும் சுழன்று நோக்கினுள்; அவள் கண்களுக்கு அருகில் யாரும் தட்டுப்படவில்லை.

''அம்மா!'' மறுபடியும் அதே குரல்.

இம்முறையும் அவள் வியப்போடு பார்த்தாள். வலது பக்கத்தில் வரிசை வரிசையாக இரும்புக் கட்டில்கள்; அவைகளில் முனகிக்கொண்டும், புலம்பிக்கொண்டும் படுத்திருக்கும் நிறைமாதக் கர்ப்பிணிகள்; இளம் தாய்மார்கள். தூரத்து அறையொன்றிலிருந்து யாரோ ஒரு பெண் பிரசவ வேதனை தாங்காமல் ஓலமிட்டுக் கொண்டிருந்தாள். மருத்துவ மனைக்கென்றே அலாதியாக ஏற்பட்ட ஒருவகை நெடி எங்கும் பரவியிருந்தது.

மீண்டும் அந்தக் குரல் ஒலித்தது;—''அம்மா!''

''யாரது?'' என்ருள் சற்று கலவரத்துடன்.

''நான்தானம்மா ஜோதி!...உனக்குப் பிறக்கப்போகும் பெண்குழந்தை.''

''ஜோதி!''

''ஆமம்மா? அப்பாவும் நீயும் சேர்ந்து எனக்கு ஏழு மாதங்களுக்கு முன்பு—நான் மூன்று மாதக் கருவாயிருக்கையில்—பெயர் வைத்தீர்களல்லவா? அந்த ஜோதிதான்!''

தாய் ஆகப் போகிறவளின் வலி, வேதனை, ஆயாசம், அலுப்பு அத்தனையும் அந்தக் கணத்தில் எங்கோ பறந்து விட்டன. 'பிறக்கப்போகும் குழந்தையா இப்படிப் பேசுகிறது? அதுவும் நம் கண்மணி!'

''ஞாபகம் இருக்கிறதா? அன்ருெரு நாள் நீயும் அப்பாவும் பேசிக்கொண்டீர்களே, அறையின் சன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து! அப்பாகூட வெளியே தோன்றியுள்ள

பிறைச்சந்திரனைப் பார்த்துக்கொண்டே சொன்னார். இந்தப் பிறை இப்படியே வளர்ந்து வந்து ஒருநாள் பூரண சந்திரனாக மாறும். அது போலவே நீயும் நம் செல்வத்தை அந்த ரங்கத்திலேயே வளர்த்து, ஒருநாள் தாய்மையின் முழுமை வளர்ச்சியில் குலுங்கப் போகிறாய் என்று.''

பெற்றமனம் இதைக் கேட்டுப் பொங்கிப் பூரித்தது. குழந்தை தொடர்ந்து பேசினாள்.

''நீகூடச் சொன்னாய், ஆண்பிள்ளைதான் பிறக்கும் என்று; அப்பா கூறினார், உன்னைப்போல ஒருஅழகான பெண் என்று. கடைசியில் இருவருக்கும் பெயர் வைப்பதில் வாக்கு வாதம் வந்தது. ஆணாயிருந்தாலும் சரி, பெண்ணாயிருந் தாலும் சரி, ஜோதி என்றே பெயர் வைப்போம். நம் வாழ் வின் இருளகற்றும் ஜோதியாக அது இருக்கட்டும்' என்று அப்பா சொல்லவில்லையா?''

''ஜோதி!'' என்று தனக்குள் ஒருமுறை அந்தப்பெயரை மகிழ்ச்சியோடு உச்சரித்துக் கொண்டாள் தாய். ஜோதி பெண்ணாய்ப் பிறக்கப் போவதில் அவளுக்கு அளவற்ற ஆனந்தம். தன் கணவரின் ஆவல் நிறைவேறிவிடுமல்லவா? பெண்மையின் வெற்றி, அது தன் துணைவனுக்காக ஏற்றுக் கொள்ளும் தோல்வியில்தானே இருக்கிறது?

''அம்மா!'' என்றது குழந்தை,

''ஏண்டா, கண்ணா!'' என்றாள் தாய்.

''உலகம் எப்படிப்பட்டதம்மா?''

இந்தக் கேள்வி அவளைத் தூக்கிவாரிப் போட்டது. இந்தச் சிசுவிற்கு உலகத்தில் பிறக்கும் முன்பே உலகத்தைப் பற்றி என்ன கவலை? பிறகு தன்னைத்தானே அவள் சமாதானம் செய்து கொண்டாள். நாம்தான் இருக்கிறோம். எங்காவது ஒரு புது இடத்திற்கும் போவதென்றால் அதைப் பற்றித் தெரிந்துகொள்ள விரும்புவதில்லையா?

''உலகமா? உலகம் ஒரு பயங்கர நரகம்!'' என்று வெடுக்கெனச் சொல்லத் தோன்றியது அவளுக்கு. ஆனால், அவள் அப்படிச் சொல்லவில்லை. ஆவலோடு கேட்கும் அருமைப்

புதல்விக்கு முதலில் உலகத்தை இம்மாதிரியா அறிமுகப் படுத்துவது?

''உலகம் மிக மிக அழகியதம்மா. இன்பம் நிறைந்த தம்மா; இயற்கை எழிலுக்கும் வளத்திற்கும் இங்கே குறைவே இல்லை. சூரியனால் மலர் மலரும், மலர்ந்த மலரின் மணத்தை வாரிச் செல்லத் தென்றல் எப்போதும் காத் திருக்கும். மாலையிலோ வெனில் மஞ்சட்பொன்னொளி. அதன் பிறகு இரவில், நிலவு பூத்த பால் வெள்ளத்திலோ அல்லது நட்சத்திரக் கூட்டங்களின் கண் சிமிட்டலிலோ உலகம் மயங்கும். இங்கே காடும் மலையும் வனம் வனாந்தரங்களும் நதிகளும் எத்தனையோ இருக்கின்றன, அம்மா!''

குழந்தை குறுக்கிட்டது; ''மனிதர்களைப்பற்றிச்சொல்ல வேண்டாமா?''

அவள் தயங்கினாள், அவளுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. மனிதவர்க்கத்தின்மேல் அவளுக்கு இருந்த வெறுப்பு அவளையறியாமல் எரிமலைபோல் வெடித்துக் கொண்டு கிளம்பிவிடும் போலிருந்தது. அடக்கி அடக்கிப் பார்த்தாள். ஆனால் ஆத்திரந்தான் பொங்கியது.

அவள் நிதானமிழந்தாள்.

''மனிதர் கொடுமை நிறைந்தவர் அம்மா, அவர் உலக மும் கொடுமை நிறைந்தது. துன்பமும் துயரமும் அடிமைத் தனமுந்தான் உலகத்தை ஆட்சி செய்கின்றன. இல்லாவிட் டால் உன் அப்பா ஏன் இரும்புக்கம்பிகளுக்குப் பின்னால், இருட்சிறையில் வாடுகிறார்? நான் ஏன் இங்கு அநாதையாய் ஆஸ்பத்திரிக் கட்டிலில் வெந்து மடிகிறேன்?''

''அப்பா சிறையில் இருக்கிறாரா? எதனாலம்மா?''

''காரணமா? அவர் இந்த நாட்டை விடுவிக்க வெள்ளைக் காரனை எதிர்த்து உண்மையைச் சொன்னதற்காகச் சிறைக் குப் போனார்! உலகத்தை உருக்குலைக்கும் அடிமைத் தனத் தைக் கண்டிப்பதற்காக அவர் சிறைக்குப் போனார்.''

''உண்மை சொன்னதற்குச் சிறையா?''

''அதற்கு மரண தண்டனைகூட உண்டு! பொய்யும் புளு கும், கொலையும் கொள்ளையும் மலிந்த இவ்வுலகத்தில் உண்

மைக்கு இடமேது அம்மா? நியாயத்துக்கும் உரிமைக்கும் இடமேது?''

குழந்தை கூறியது: ''உலகம் பொல்லாததாம்மா!''

''மிகமிகப் பொல்லாதது; சுயநலங் கொண்டது; நன்றி கெட்டது. இதில் இரண்டு வகை. ஒன்று அவரைச் சிறைப் படுத்தியது; மற்றொன்று அவருக்கு மாலைபோட்டு' பூமாரி பொழிந்து அவரைச் சிறைக்கனுப்பியது. பிந்திய உலகத் திற்குச் சிறைக்கனுப்பத்தான் தெரியும்; சிறைக்குள்ளே அவர் படும் கஷ்டம்,சிறைக்குவெளியே அவர் குடும்பம் படும் வேதனை இவைகளைப்பற்றி அதற்கு அக்கறை ஏது?''

''சிறை எப்படிப்பட்டதம்மா?''

''சிறையில் வேறு பிரிவுகள் உண்டு. ஏழை உபாத்தி யாயரான உன் அப்பாவுக்குக் கிடைத்த மூன்றும் வகுப்புக் கொட்டடி இருக்கிறதே, அது மனிதனை மிருகமாக மாற்றும் விசித்திர இயந்திரசாலை; திடமற்ற நெஞ்சு உள்ளவன் உள்ளே தள்ளப்பட்டால், அவனுடைய உயர்ந்த குணங்கள் யாவும் உப்பரித்துப் போய் அவன் உளுத்துப்போன கீழ்த்தர ஆசைகளுடன் வெளியே வரவேண்டியதுதான். மனிதனை இவ்விதம் சித்திரவதை செய்து, அவன் லட்சியத்தைப் பாழாக்குவதற்காகத்தானே இவை ஏற்படுத்தப்பட்டிருக் கின்றன?''

''சிறையில்கூட உயர்வு தாழ்வு வேறு!''

''எதில்தான் உயர்வு தாழ்வில்லை? பிறப்பிலிருந்து சாவு வரையில் அது உண்டு. இந்த வேற்றுமைதானம்மா தற் கால உலகத்தின் சூது நிறைந்த ரகசிய ஆயுதம்.''

குழந்தை நீண்ட பெருமூச்சு விட்டது. அதற்குப் பின்பு சில வினடிகள் மௌனம். திரும்பவும பேசியது.

''அப்பா சிறைக்குச் சென்றதனல்தான் நீ உபாத்தியா யினியாக இந்த ஆறு மாதகாலமும் வேலை பார்த்தாயோ? இனிமேல் நானும் பிறந்துவிட்டால், நீ என்னைக் கவனிப் பாயா? பிழைப்பைப் பார்ப்பாயா?''

தாயின் உள்ளம் கொந்தளித்தது; கண்களிலிருந்து அவள் கரகரவென்று நீரைக் கொட்டினள். ''உலகத்தில்

பிறப்பதே பாவம்; அதிலும் பெண்ணாய்ப் பிறப்பது மாபெரும் பாவம்'' என்று வாய் தவறி அவள் சொல்லி விட்டாள்.

''கவலைப் படாதே அம்மா! நான் உயிருடன் பிறந்தால் தானே உனக்குச் சிரமம்?''

இவ்வார்த்தைகளை மிகவும் நிதானமாகத்தான் கூறியது அந்தச் சிசு. ஆனால் இவை தாயாரின் உச்சியில் மலைகளாய் விழுந்தன. தழுதழுத்த குரலில், ''அம்மா, ஜோதி! என் வயிற்றில் பாலை வாரம்மா! உன் அப்பா, உன்னைக் கொண்டு தான் உலகத்தில் எதையோ சாதிக்கவேண்டுமென்று அன்று கனவு கண்டார். அவர் கனவை வீணாக்கி விடாதே! அவ ரிடம் உன்னை ஒப்புவிக்கும் வரையில் தெருத் தெருவாய்ப் பிச்சையெடுக்கக்கூட நான் தயாராயிருக்கிறேன்!'' என்றாள். ஆனால், அந்த வார்த்தையினால் அவள் அடிவயிற்றில் மூண்ட தீ இன்னும் அடங்கவில்லை.

இந்த வேளையில்தான் பிள்ளைப்பேருக்காக மருத்துவ மனைக்கு வந்திருக்கும், அவளது அரைத் தூக்கம் திடீரெனக் கலைந்தது. ''கனவு உண்மையாகிவிடக் கூடாதே. கடவுளே!'' என வேண்டிக் கொண்டாள். அதிக நேரமாகவில்லை; அவ ளுக்கு உண்மையிலேயே இடுப்பு வலி கண்டது. நிலைமை சகிக்க முடியாமல் துடித்தாள்.

லேடி டாக்டர் அவளைத் தனி அறைக்குக் கொண்டுபோன வுடன் ஜோதி பிறந்தாள். ஆமாம்; அணைந்துபோய்த்தான்!

இந்த உலகத்தின் இருளைக் கண்டு அந்த ஜோதி பயந்து விட்டாளோ? அல்லது உலகத்தின் இருளகற்ற அவளுக்கு மனம் இல்லையோ தெரியாது. ஆனால், அவளுடைய குவிந்த கண் இமைகள் மாத்திரம், 'இந்தப் பொல்லாத உலகத்தை ஒரு முறை பார்ப்பது கூடப் பாவம்!' எனச் சொல்பவை போல் ஒன்றையொன்று அவ்வளவு இறுகக் கவ்விக்கொண் டிருந்தன.

---

# கடவுளின் பிரதிநிதி

**என்னிடம் அகப்பட்ட ஒரு இலட்சியப் பைத்தியத்தின் நாட் குறிப்பில் உள்ள சில ஏடுகள் இவை:**

**நாள் 1**

*கதா காலட்சேபம் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது.*

*''ஈ, எறும்பு முதல், மாடு மனிதன்வரை, எத்தனையோ கோடி ஜீவராசிகளை உலகத்தில் கடவுள் படைக்கிறார்; காக்கிறார்; அழிக்கிறார். அவராலேதான் உலகம் நடக்கிறது. கல்லினுள் தேரைக்கும், புல்லினுள் புழுவுக்கும் படி அளப்பவர் அவர்தான்...'' இந்த மாதிரி என்னவெல்லாமோ பிதற்றிக்கொண்டு போனார் அந்தப் பக்தசிரோமணி.*

*''கல்லினுள் தேரைக்குப் படி அளக்கும் அந்தக் கடவுள் மனிதனைத்தான் மறந்துவிட்டார்போல் இருக்கிறது!''என்று நினைத்துக்கொண்டு, பேசாமல் நின்றேன் நான்.*

*ஆனால், மேலும் மேலும் அவர் கடவுளின் புகழை அடுக்கிக்கொண்டு போனபோது என்னால் அதைக் கேட்கச் சகிக்கவில்லை.*

*''அந்தக் கடவுள் இப்போது உயிருடன் இருக்கிறாரா? அல்லது பட்டினியில் அடிபட்டு உயிரைவிட்டு விட்டாரா?'' என்று பக்தரைப் பார்த்து, ஆத்திரத்தோடு கேட்டேன். அப்போது அவர் முகத்தில் அசடு தட்டியதைப் பார்க்க வேண்டுமே! நான் மாத்திரம் அவரால் புகழப்பட்ட அந்தக் கடவுளாக இருக்கும் பட்சத்தில், அவரது நிலைமையைக் கண்டு நிச்சயம் இரக்கப்பட்டிருப்பேன்.*

*கூட்டத்தில் இருந்த பலர், எங்கள் இருவரையும் பார்த்துக் கொல்லென்று சிரித்தார்கள், இந்த மனிதர்களே இப்படித்தான்; நல்லதற்கும் சிரிப்பார்கள்; கெட்டதற்கும்*

சிரிப்பார்கள். நல்லது கெட்டதே இவர்களுக்குத் தெரியாது. நான் கூட்டத்தை விட்டு வெளியே வந்துவிட்டேன்.

**நாள் 2**

இன்றைய பத்திரிகையில் வெளியான செய்தி: எவனோ ஒரு மனிதன், வேலையில்லாத் திண்டாட்டத்தில் தன் மனைவி மக்களுக்கு நஞ்சைக் கொடுத்து, தானும் அதைத் தின்று உயிரை விட்டானாம். பாவி மனிதன்! அவனுக்குப் பிழைக்கத்தான் வழி தெரியவேண்டாமா?

தன்னைப் பட்டினி போட்ட சமூகத்துக்குப் பாடம் கற்பித்து, அதன் பலனாக அல்லவா தன் உயிரை அவன் துறந்திருக்க வேண்டும்? அவன் கிடக்கிறான் முட்டாள்; இதோ நான் இருக்கிறேன் அவனுக்குப் பதிலாக.

நான் சாகத் துணிந்துவிட்டேன்!

ஆனால் சாவை நான் விரும்பவில்லை; பிழைக்கவும் எனக்கு வழி தெரியும். என்னைச் சுற்றியுள்ள சமூகப் பெருச்சாளிகளை நான் உடனுக்குடன் பழி வாங்கவேண்டும். கடுமையாக, என் எண்ணப்படி பழி வாங்கவேண்டும்.

இந்த மாதிரி உலகப் போக்கை என்னால் இனியும் கைகட்டிப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. முடிந்ததைச் செய்கிறேன். நிதானமாகத் தூங்கிக்கொண்டு, மலை போன்ற காரியத்தைச் செய்ய நான் விரும்பவில்லை. அது என்னால் முடியாது. இதோ கிளம்புகிறேன், சூறுவளியைப் போல!—அதன் பயன்? மரணம்! அதற்குத்தான் நான் துணிந்து விட்டேனே!

சரி, நமக்குத் தெரிந்த மனிதர்களில், எவனெவன் மற்ற மனிதர்களின் ரத்தத்தை இரக்கமின்றி உறிஞ்சுகிறான்? எவனெவன் ஆடம்பரத்துக்கு ஆசைப்பட்டு, அடிமைத் தனத்தை மாலையிடுகிறான்? எவனெவன் வெளி வேஷம் போட்டுப் பகல் கொள்ளை அடிக்கிறான்? நினைவுபடுத்திப் பார்க்கிறேன்.—ஓ! இன்னாரெல்லாம்தான்.

நல்லவர்களை வாழவைப்பதும், கெட்டவர்களை அழிப்பதும் கடவுளின் தொழிலாம். ஆனால் ஏனோ அவருக்குத்

தம் தொழில் மறந்துவிட்டது. எல்லாம் தலைகீழாய்ச் செய்து கொண்டுபோகிறார்.

நாம் அவருடைய வேலையை எடுத்துக்கொள்ள வேண்டும்.

இந்த அயோக்கியர்களையெல்லாம் கொல்லக்கூடாது. மரண தண்டனை என்பது மனிதனின் சட்டத்திலேயே இருக்கக்கூடாதென்பது என் தீர்மானம். தங்கள் தங்கள் குற்றத்தை உணர்ந்து சீர்திருந்த விரும்பினால், செத்துப்போனதற்கப்புறமா சீர்திருந்துவது?

**நாள் 3**

சாவதற்கும் நான் பயப்படவில்லை. ஒரே ஒரு விஷயம்...

என் அறையில் உட்கார்ந்துகொண்டு திறந்த சன்னல் வழியாகப் பார்த்தால் காலையும் மாலையும் இந்தக் காட்சியைக் காணலாம்.

கையில் ஒரு புத்தகக் கட்டுடன், காலையில் அவள் பள்ளிக்கூடத்தை நாடிப் போவாள். மாலையில் திரும்பி வருவாள். அவள் யாரோ, எனக்குத் தெரியாது. அவள் பெயர் ஊர், சாதி... ஊஹூம் இவைகளைப்பற்றியெல்லாம் நான் நினைத்துப் பார்த்ததுகூட இல்லை.

அவளது நிலைமையைக் கவனித்தால், மிகவும் ஏழை போல் காண்கிறது. ஏழை என்பதற்காக அழகு குறையவில்லை! கடவுளுக்குத்தான் யோசனை கிடையாதே. ஏழைக்கு அழகு எதற்கு? அது தொலையட்டும். எனக்கு அழகு பிடிக்கிறது;...அந்தப் பெண்! அவள் போகும் போதும் வரும்போதும், என்னைப் பார்க்கிறாள்; நான் அவளைப் பார்க்கிறேன். இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கிறோம்?—இப்போது நான் இறந்துவிட்டால், அப்புறம் அவளைப் பார்க்க முடியாதே என்ற ஒரு கவலை மாத்திரம் வந்திருக்கிறது.

விசித்திரமான கவலைதான்.

ஆனால், அவளுக்காக என் தீர்மானத்தை நான் கைவிடப் போவதில்லை

வேலை செய்து, கூலி பெருத ஒருவன், "கடவுள்தான் என் முதலாளிக்குக் கூலி கொடுக்கவேண்டும்!" என்கிருன். பட்டணத்தில் காரும் பங்காளவுமாய் வாழும் மிராசு தாரைக் கொழுக்க வைத்த ஏழைப் பண்ணைக்காரன், "கடவுளைத்தான் என் கஞ்சிக்கு நம்பியிருக்கிறேன்" என் கிருன்! இதைப் போலவே இன்னும் எத்தனையோ பேர், தங்களால் முடியாத காரியத்துக்குக் கடவுளையே துணை கூப்பிடுகிருர்கள்.

அந்தக் கடவுளால் ஒன்றுமே செய்ய முடியாதென்று தோன்றுகிறது. ஆதலால், அவருக்குப் பிரதிநிதியாக மாறும் நான் கேவலம் ஒரு பெண்ணுக்காக என் இலட்சியத் தைக் கைவிட முடியுமா?

நாள் 4

இந்தப் பத்திரிகைக்காரர்கள் இருக்கிருர்களே, இவர்கள் ஓரளவுக்கு நகைச்சுவை உள்ளவர்கள். 'சாகத் துணிந்த வனின் துணிகரமான செயல்' என்று ஒரு தலைப்பைப் போட்டுக்கொண்டு, "'பிரபல ஹாலிவுட் இந்திய நடிகருக் குக் காது காணுமல் போய்விட்டது!— இந்தியாவைப் பற்றிக் கீழ்த்தரமாக எடுக்கப்பட்ட படங்களில் அவர் நடித்ததற் காக, அந்தத் தண்டனையாம்!" என்று எழுதுகிருர்கள்.

அது மாத்திரமா?

"திலோத்தமாக் கடைத் திமிங்கலம் அரிசியைப் பதுக் கியதற்காகக் கையைப் பறிகொடுத்தது!"

"ராவ் சாகிப் ராஜாசாமி வீட்டில் நாற்பதினுயிரம் ரூபாய் மாயமாய் மறைந்தது!"

"மக்களுக்குக் கீழ்த்தரமான செய்திகளையே கொடுத்து அவர்கள் அறிவைச் சுரண்டும் கள்ளமார்க்கட் பத்திரிகை முதலாளி மூக்குடைபட்டார்!"

"லஞ்சம் வாங்குகிறவர்களும், கள்ளத்தனம் செய்கிறவர் களும் கதி கலங்குகிருர்கள்!" இப்படியெல்லாம் எழுதித் தள்ளுகிருர்கள். இவையாவும், சாகத் துணிந்தவனின்— அதாவது என்னுடைய—சாகசம்தான்.

அந்தச் 'சாகத் துணிந்தவன்' ஏழைகளின் வீட்டில் புகுந்து திடீர் திடீரென்று காசு பணங்களைப் போட்டு விட்டுப் போவதாக, வதந்தி உலவுகிறதாம், அந்தக் காசை எடுத்துக்கொள்ளக்கூடச் சில மனிதர்கள் அஞ்சுகிறார்களாம்! நல்ல மனிதர்கள் இவர்கள்!

இதெல்லாம் கிடக்கட்டும்; நான் நல்லவனா? கெட்டவனா!—எனக்கே தெரியவில்லை.

வேண்டாம்.

போலீசார் புலன் விசாரிக்கிறார்களாம். விசாரிக்கட் கட்டும்; விசாரிக்கட்டும். விசாரித்து என்னைப் பிடித்துத் தண்டனை கொடுப்பதற்குள் நான் இன்னும் எத்தனையோ பேருக்குத் தண்டனை கொடுத்துவிடுவேன்!

நாள் 5

இன்றைக்கு ஒரு கூரை வீட்டுக்குள், கையில் பண முடிப்புடன், நான் நுழைந்தேன். கட்டிலில் ஒரு கிழவன் போர்வையுடன் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான்.

''யாரப்பா, அது! எழுந்திரு. 'சாகத் துணிந்தவன்' வந்திருக்கிறேன்; இந்தா பண மூட்டை!'' என்றேன். அவன் எழுந்திருக்கவில்லை—பணத்தை வாங்கிக்கொள்ள அவனுக்குப் பயம்போல் இருக்கிறது.

''அவர் சும்மா படுத்திருக்கவில்லை'' என்று பக்கத்திலிருந்த அறைக் கதவின் வழியாக, ஒரு பெண்ணின் குரல் கேட்டது.

''பின்னே எப்படிப் படுத்திருக்கிறார்?''

''செத்துப்போய்ப் படுத்திருக்கிறார்!''

''செத்துப்போய் விட்டாரா? அப்படியானால், நீ ஏன் அழவில்லை?''

''அழுதாலும் பிழைத்துக் கொள்ளமாட்டார் என்று எனக்குத் தெரியும்!''

ஏதேது! நான்தான் இந்த உலகில் அபூர்வப் பிறவியாக மாறியிருக்கிறேன் என்றால்,என்னை முதுகுக்கு மண் காட்டக்கூடிய இன்னொரு பிறவி இங்கே இருக்கிறாளே?

"சரி; எனக்கு நேரமாகிறது. இந்தா, பணம்; எடுத்துக் கொள்" என்றேன்.

"பணம் இங்கே யாருக்குத் தேவை?"

"பின்னே என்ன வேண்டும்?"

"என் தகப்பனார் செத்துப் போய்விட்டார்; எனக்குத் துணை வேண்டும்!"

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"துணையா! யார் துணை?"

"உங்கள் துணைதான்."

"என்னால் முடியாது. வேண்டுமானால் உன்னை யாரிடமாவது ஒப்படைத்து, வேண்டிய பணமும் கொடுத்து விட்டுப் போகிறேன்.

"அது எனக்குத் தேவையில்லை."

"என் கழுத்தைக் கட்டியிறுக்க எந்த நேரமும் தூக்குக் கயிறு துடித்துக் கொண்டிருக்கிறது. நான் எப்படி உனக்குத் துணையாக இருக்க முடியும்?"

"அது வரையில் துணையிருந்தால் போதும்; அப்புறம் எனக்கு வழி தெரியும்!"

"என்ன வழி?"

"அப்போது கடவுள் வழி காட்டுவார்."

"கடவுளா! அவர்தாம் ஒன்றும் செய்ய முடியாதவராயிற்றே?"

பேச்சில்லை.

"இழவு வீட்டிலே திருமணமா?"

"வெயிலுக்குத் தப்ப நிழல் கூடாதா?"

"அட, எங்கே? வெளியில் வா. உன் முகத்தைப் பார்க்கலாம்."

கதவிடுக்கிலிருந்த அவள் வெளியே வந்தாள். அவள் வேறு யாருமில்லை. நான் தினந்தோறும் காலையும் மாலையும் சந்தித்த அதே புத்தகச் சுமைதாங்கிதான்.

அப்புறம்?

அப்புறமென்ன! இனி நான் சாகத் துணியவில்லை. கடவுளின் வேலையை அவரிடமே ஒப்படைத்துவிட்டேன்.

புலன் விசாரித்து வரும் போலீஸ் பூச்சிகளிடமிருந்து கடவுள் தான் இனி என்னைக் காப்பாற்ற வேண்டும். அவர் என்னைக் காப்பாற்றினால் போதும். என் பத்தினித் தங்கத்தை நான் காப்பாற்றிக் கொள்வேன்.

(குறிப்பு இங்கே முடிந்துவிட்டது)



# கதையின் முடிவு

என்னுடைய கதை 'கோஷா'வைப் படித்த என் நண்பர் ஒருவர் என்னைச் சிந்தித்தபோது, ''அந்தக் கதைக்கு முடிவு என்ன?'' என்ற ஒரு கேள்வியைக் கேட்டு என்னைத் திணற வைத்தார்.

''கதையை நீங்கள் முழுதும் படித்துப் பார்க்க-வில்லையா?'' என்றேன்.

''ஒருமுறைக்கு இரண்டுமுறை படித்து முடித்த பிறகு-தான் கேட்கிறேன்!''

அவருக்கு நான் என்ன சமாதானத்தைச் சொல்வது? ''தற்காலத்தில் அப்படி முடிப்பதுதான் வழக்கம்'' என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளப் பார்த்தேன்.

''வழக்கமாம் வழக்கம்! ரஹீமையும் கதீஜாவையும் அப்படியே நடுத்தெருவில் விட்டுவிட்டு, அதுதான் வழக்கம் என்கிறீர்களே!—அதெல்லாம் எனக்குத்தெரியாது. சீக்கிரம் நீங்கள் அதற்கு ஒரு முடிவு எழுதித்தான் ஆகவேண்டும்!'' என்று ஒரேயடியாய்ப் போட்டுவிட்டு அவ்விடத்தை விட்டுக் கிளம்பினார்.

அந்தக் கதையின் முடிவை அவருக்குத் தெரிவிக்கும் காலமும் வந்துவிட்டது. இதோ எழுதி அவரிடம் ஒப்பித்திருக்கிறேன். அவர் படிக்கத் தொடங்கிவிட்டார். இது தான் கதையின் முடிவு.

* * *

நான் திருச்சியிலிருந்து சென்னைக்கு ரெயிலேறும்போது முற்றிலும் புதியவனாக மாறிப்போயிருந்தேன். கடைசி நிமிடத்தில் சந்தித்த அந்தக் கதீஜாவின் முகமலர் என் நெஞ்சத்தில் அப்படியே ஆழமாகப் பதிந்திருந்தது. இன்பக் கற்பனைகள் கொஞ்சும் அந்த நீண்ட விழிகளை நினைத்துக்

கொண்டே ரெயிலில் மெதுவாகச் சாய்ந்த வண்ணம் இருந்தேன்.

ரெயில் எழும்பூரை அடைந்துவிட்டது. இவ்வளவு வேகத்தில் என்னைச் சென்னைக்கு இழுத்துவரும் ஒரு ரெயில் வண்டியில் நான் இதுவரை பிரயாணம் செய்ததே இல்லை! நான் திருச்சிக்குப் புறப்பட்டபோது ஆமையின் வேகத்தில் நகர்ந்த அதே வண்டிக்கு இப்போது எங்கிருந்துதான் இத்தனை வேகம் வந்ததோ?

சென்னையில் நான் கண்ட ஒவ்வொரு காட்சியிலும் ஒரு புதுமை பொலிவுற்று விளங்கியது. இதே நகரத்தின் சுறு சுறுப்பும் அவசரமும் ஒரு சமயம் இயந்திரத் தன்மையா யிருந்த எனக்கு, இப்போது எல்லாமே இன்பச் சுழலில் அகப்பட்ட மனித நாகரிகத்தின் வேகமாகத் தோன்றியது. ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை அன்பினால் வெற்றிகொண்ட மன்னனைப்போல் என் அறையை அடைந்தேன்.

நாட்கள் பறந்தன. திருச்சியில் கதீஜாவின் தந்தை யிடமிருந்து எப்போதாவது கடிதம் வரும். கதீஜா மாத் திரம் தன் பாவாவுக்குத் தெரியாமல் அடிக்கடி கடிதங்கள் எழுதித் தன் தம்பி ரசூலின் உதவியால் எனக்கு அனுப்பி வந்தாள். அந்தக் கடிதங்களில்தான் எத்தனை ஆர்வம், அன்பு, ஆனந்தம்! இந்தக் கடிதங்களுக்கென்றே அவள் எங்கேதான் வார்த்தைகளைத் தேடிப் பிடித்து எடுத்தாளோ, அதுவே ஒரு பெரிய ரகசியந்தான்!

ஆனால் அவளுடைய கடிதங்கள் ஒன்றிற்கேனும் நான் பதில் எழுதும் நிலையில் இல்லை. அவளும் அதை நன்றாகத் தெரிந்து கொண்டுதான், ''நான் என் நேரத்தையெல்லாம் செலவழித்து உங்களுக்கு நினைத்து நினைத்துக் கடிதம் எழுது கிறேன். இந்தக் கடிதங்களுக்கு உங்களிடமிருந்து பதில் பெறவேண்டும் என்று எவ்வளவோ ஆவல். ஆனால் நீங்கள் கனவில்கூட மறந்துவிட்டுக் கடிதமெழுதி அனுப்பிவிடாதீர் கள்! பாவா கையில்தான் அவைகள் கிடக்கும்! ஆகையால் எல்லாக் கடிதங்களுக்கும் பதில் எழுதி அடுத்த ரம்ஸானுக்கு

இங்கே வரும்போது, ஒரு மூட்டைக் கடிதங்கள் கொண்டு வாருங்கள்!'' என்று எழுதியிருந்தாள்.

'விசித்திரமான கடிதங்கள்!' என்று எண்ணிக்கொண்டு, 'என்மீது இவளுக்கு எப்படி இவ்வளவு நம்பிக்கை பிறந்தது!' என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆனால் அவள்மீது எனக்கு ஏன் அத்தனை நம்பிக்கை பிறக்க வேண்டும்?

ஒரு நாள் இரவு திடீரென்று கதீஜா என் அறையில் தோகை மயில்போல் தோன்றினாள். கூவும் குயில் மொழியில் பேசினாள்.

''வாருங்கள் உலாவி வரலாம்'' என்றாள்.

''எங்கே?''

''எங்கேயாவது போவோமே, மனத்துக்குப் பிடித்த இடத்திற்கு!''

இருவரும் சேர்ந்து காடு, மலை, வனம் வனாந்தர மெல்லாம் உல்லாசமாகச் சுற்றித் திரிந்தோம். வயல் வெளி களிலும், பசும்புற்றரையிலும், ஆற்றங்கரை மணற் பரப்பு களிலும் உட்கார்ந்து அளவளாவினோம். வான மண்ட லத்தில், மேகக் கூட்டங்களுக்கிடையே கூட, வானவில்லின் வனப்பில் மயங்கியவாறே அலைந்து அலைந்து பொழுதை ஓட்டினோம். எல்லாம் பொழுது விடியும் வரையில்தான்!— யாவும் கண நேரத்தில் தோன்றி மறைந்த ஓர் இன்பக் கனவு. வாழ்க்கை முழுவதுமே இந்த இன்பக் கனவில் கழிந்து போயிருக்கக் கூடாதா?

அது வெறும் கனவுதான்.

அன்றைக்குத் தபாலில் இரண்டு கடிதங்கள் வந்தன. ஒன்று கதீஜாவிடமிருந்து; மற்றொன்று அவள் தந்தையிட மிருந்து. அவள் எழுதியிருந்தாள்-

''இதுதான் என் கடைசிக் கடிதமாயிருக்குமென்று பயப்படுகிறேன். என்னை லண்டனில் படித்த காசிம் என்ற யாரோ ஒருவருக்கு இன்னும் ஆறு மாதத்தில் நிக்காஹ் செய்து கொடுக்கப் போகிறார்களாம். அதுவரையில் என்னை என் தாயாரின் கிராமத்திற்கு அழைத்துச் செல்லப் போகி

ரூர்களாம். நான் அம்மாவிடம் என் விருப்பத்தைத் தெரிவித்தபோது, அவள் என்னைப் பைத்தியக்காரி என்கிருள். இது விஷயம் பாவாவுக்குத் தெரிந்தால் வீட்டில் பெரிய ரகளை ஏற்பட்டுவிடுமென்று அவள் நடுங்குகிருள். எனக்கு ஒன்றுமே புரியவில்லை; அல்லாவைத்தான் நம்பியிருக்கிறேன்.''

அவளுடைய தகப்பனுர் கதீஜாவின் விவாகப் பேச்சைக் குறிப்பிட்டு, ''இந்த மாதிரி நல்ல இடத்துச் சம்பந்தம் நமக்குக் கிடைத்ததைப் பற்றி நீ மிகவும் மகிழ்ச்சியடைவாய் என நம்புகிறேன்'' என்று எழுதியிருந்தார்.

அவர், ஏழையும் அநாதையுமாக இருந்த என்னை வளர்த்து இந்த நிலைக்குக் கொண்டு வந்தவர். அவருக்கு நான் என்ன சொல்வது?

மாலை ஐந்து மணி வரையில் மேசையைவிட்டு நகராமல் அந்தக் கடிதங்களையே திருப்பித் திருப்பிப் படித்துக்கொண்டிருந்தேன். பிறகு, எழுந்து கட்டையை மாட்டிக் கொண்டு அறையைவிட்டு வெளியே கிளம்பினேன். கால்கள் இழுத்த இடமெல்லாம் நடந்து, கடற்கரை வந்து சேர்ந்தேன்.

கடற்கரைத் தனிமையிலே அலைமேல் அலையாக எண்ணங்கள் எழுந்து, விரக்தியடைந்திருந்த எனது மனப் பாறையில்வேகமாக மோதி, ஒரு பயனுமில்லாமல் அணுத் துளிகளாய்ச் சிதறி விழுந்தன. இன்னும் ஒரு விநாடி அதே இடத்தில் அதே நினைவுடன் இருந்தால் பைத்தியம் பிடித்துவிடும்போலிருந்தது. நிதானமில்லாமல் எனது அறைக்குத் திரும்பி வந்து படுக்கையில் சாய்ந்தேன்.

கடிகாரத் துடிதுடிப்பின் வேகம் மாத்திரம் அறையின் நிசப்தத்தைக்கலைத்துக்கொண்டிருந்தது. பெருமூச்சுக்களால் சுற்றுப்புறமெங்கும் வெப்பமாகமாற்றிக்கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் படீரென்று அறைக்கதவு திறந்தது.

படுக்கையிலிருந்து நான் சரியாக எழுந்திருப்பதற்குள் என் பால்ய நண்பன் கமால் ஓடோடியும் வந்து, ''அப்பா ரஹீம்!'' என்று ஆவலோடு என்னைக் கட்டி கொண்டான்.

''வா, கமால்! இத்தனை வருஷங்களுக்கப்புறம் இன்றைக்காவது நாம் சந்திக்கிறோமே! இந்த நேரத்தில் நீ எப்படி இங்கே வந்தாய்?'' என்றேன்.

''இனிமேல் இதே ஊரில்தான் எனக்கு வேலை. பாவாவும் 'பென்ஷன்' வாங்கிக்கொண்டு என்னுடன் வந்துவிட்டார். இப்போது வந்தால்தான் உன்னைச் சந்தித்துத் தாராளமாய்ப் பேசலாமென்று வந்தேன்'' என்று இத்தனை வருடங்களாகப்பேசாதவற்றையெல்லாம்சேர்த்து வைத்துப் பேசினான்.

அன்றைய நிலைமைக்கு அவனுடைய வரவு எனக்குக் கடவுளின் தரிசனமாக இருந்தது.

அடுத்த நாள் காலை நானும் கமாலும் அவனுடைய வீட்டிற்குச் சென்றபோது எனக்கு முதல் முதலில் வரவேற்புக் கூறியவள் கமாலின் தங்கை ஸுலேகாதான்.

''வாங்கோ, ரஹீம் சாஹேப்! அடையாளமே தெரியவில்லையே!—பாவா! அம்மா! ரஹீம் சாஹேப் வந்திருக்கிறார், வந்து பாருங்கள்!''

''எனக்குத்தான், ஸுலேகா, உன்னை அடையாளமே தெரியவில்லை; நீயும் முன்போல இப்போது சிறு பிள்ளையாக இல்லையே!'' என்றேன்.

அதற்குள் கமால் குறுக்கிட்டு, ''ஸுலேகா இப்போது வயதில் மட்டும் வளர்ச்சி யடைந்திருக்கிறாளென்று நினைக்காதே! அவளுடைய குறும்புத்தனமும் அவளைப் போலவே நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறது!'' என்றான்.

''போ, அண்ணா! நீ எப்போதுமே இப்படித்தான்'' என்று செல்லமாக கோபித்துக்கொண்டாள் ஸுலேகா.

முன்பெல்லாம் தென்னூர் பள்ளிவாசலுக்குப் பக்கத்தில் கமாலின் தந்தை குடியிருக்கையில், நான் அடிக்கடி அங்கே போவதுண்டு. அப்போது ஸுலேகா மிகவும் குறும்புக்காரப் பெண்ணாக இருந்தாள்; அவளால் எந்நேரமும் கமாலுக்குத் தான் கஷ்டம். அவளுடைய தாயார் நான் அவர்கள் வீட்டிற்குள் நுழைந்தவுடன்; முதலில் ஸுலேகாவின் சுட்டித்-

தனத்தைப் பற்றிச் சிறிது நேரம் பேசிய பிறகுதான் மற்ற விஷயங்கள் ஏதாவது இருந்தால் பேசுவாள்.

தென்னூரிலிருந்த கமாலின் தந்தையை ராணுவ வேலையாக வடக்கே மாற்றிவிட்டார்கள். அங்கே சில வருடங்கள் வேலை பார்த்து விட்டு, உபகாரச் சம்பளம் பெற்ற பின்பு, சில தினங்கள் முன்பாகக் குடும்பத்துடன் சென்னை வந்திருக்கிறார். அவருடைய சிபாரிசின்பேரில் கமாலுக்கு இங்கே உத்தியோகம் கிடைத்து விட்டது.

எல்லோரும் மேசையைச் சுற்றி நாற்காலிகளில் அமர்ந்தவுடன் ஸுலேகா கோப்பைகளில் சுடச் சுடத் தேநீர் கொண்டுவந்து வைத்தாள். அதைப் பருகிக் கொண்டே, ''ஸுலேகாவுக்கு வயதாகி விட்டதே! இன்னும் அவள் கோஷா இல்லையா?'' என்றேன்.

''இது ஔரங்கசீப் காலமல்ல; இருபதாவது நூற்றாண்டு!'' என்றாள் ஸுலேகா.

கமால், ''அழகைத் திரையிட்டு மறைப்பது எங்களுக்கு பிடிக்கவில்லை. இப்படி இருந்தால் என்ன கெட்டுப் போகிறது? காலத்திற்குத் தக்கபடி மாறவேண்டாமா?'' என்றான்.

''அழகென்றால் அழகு, சாதாரண அழகா?'' என்று நான் சொல்வதற்குள், ஸுலேகா அவ்விடத்தை விட்டு மறைந்து விட்டாள்.

* * *

கமால் இதோடு என்னைப் பலமுறைகள் விடாமல்கேட்டு விட்டான், ''நீஏன் எப்போது பார்த்தாலும் ஒருவிதமாகவே இருக்கிறாய்? உன் முகத்தில் பழைய உற்சாகத்தையே காணவில்லையே; காரணமென்ன?'' என்று.

இவை போன்ற கேள்விகளின்போது எனக்கு கதீஜாவின் நினைவுகள் குமுறிக்கொண்டு வெளியே கிளம்ப முயலும். அவற்றை ஒருவாறு அடக்கிக்கொண்டு, ''ஒன்றுமில்லை'' என்று அவனுக்குப் பதில் சொல்லுவேன். ஆனால் அவனுக்கு என்னுடைய பதில் ஒருவகையிலும் திருப்தியளிக்காது என்று

எனக்குத் தெரியும். அவளால் ஏற்பட்ட நினைவின் வேதனை யைத்தான் என்னால் யார் முன்னிலையிலும் மறைக்க முடிய வில்லையே!

ஒரு நாள் கமாலின் தொந்தரவுக்காக அவனிடம் நடந் ததையெல்லாம் கூறி, ''உன்னைத் தவிர இது ஒருவருக்கும் தெரியக்கூடாது'' என்று சொல்லி வைத்தேன்.

மறுமுறை கமாலின் வீட்டிற்குச் சென்றபோது அவன் எங்கோ வெளியில் போயிருந்தான். ஸுலேகா தன் கையில் ஒரு பத்திரிகையை வைத்துக்கொண்டு, ''வாருங்கள் கதை படிக்கலாம்'' என்று தோட்டத்துப்பக்கம்என்னை அழைத்துச் சென்றாள். அங்கே போனவுடன், அவள் பத்திரிகையைப் பிரிக்கவுமில்லை, அதை படிக்கவுமில்லை. அதை மடித்து மூலையில் எறிந்துவிட்டு, ''நான் ஒன்று கேட்கப் போகிறேன்; நீங்கள் ஒளிக்காமல் பதில் சொல்ல வேண்டும்'' என்றாள்.

''என்ன?'' என்றேன்.

''நீங்கள் ஏன் எப்போதுமே வருத்தமாக இருக்கிறீர் கள்?''—அவள் அண்ணன் என்னிடம் கேட்ட அதே கேள்வி!

இதற்கு இவளிடம் பதில் சொல்லிக்கொண்டிருப்பதை விட நேரே அறைப்பக்கம் புறப்படுவது நல்லதென்று மெது வாக எழுந்தேன். அவள் இலேசில் விட்டுவிடுவதாக இல்லை. ''இதற்காக நீங்கள் வந்தவுடன் திரும்பலாமா?எல்லா விவர முந்தான் நான் அண்ணனிடமிருந்து தெரிந்து கொண் டேனே!...அது சரி, இதற்கெல்லாம் உங்களைப் போன்றவர் கள் கவலைப்பட்டுக் கொண்டிருக்கலாமா? நாம் நினைக்கிற படியே எல்லாம் நடக்கிறதா? துன்பத்தையெல்லாம் உட னுக்குடன் மறந்துவிடுங்கள் அப்படியிருப்பதுதான் வாழ்க் கைக்கு நல்லது!—இதோ பாருங்கள் ஒரு கவிஞன் சொல்லு வதை'' என்று தன்னுடைய குறிப்புப் புத்தகத்தில் எழுதி வைத்திருந்த 'லாங்பெலோ'வின்'வாழ்க்கைக்கீதம்' என்னும் பாட்டை எடுத்துப் படித்து அதற்கு பொருள் கூறினாள்.

நான் மௌனம் கலையாமல் உட்கார்ந்திருந்தேன். ஸுலேகா கூடத் தத்துவ விசாரணையில்இறங்கிவிட்டாளே!

இவளை நாகரிகத்தின் சிகரம் என்றல்லவோ கருதியிருந்தோம்' என்று நினைத்தபோது எனக்கு ஒரே வியப்பாயிருந்தது.

'லாங் பெலோ'வின் கவிதையை முடித்துவிட்டு, அவள் 'உமர் கய்யாமை' உல்லாசமாகப் படித்துக் காட்டத் தொடங்கி விட்டாள்.

* * *

ஸுலேகாவைப் பற்றி இந்தக் கணம் வரையில் என் மனத்தில் ஒரு நண்பனின் தங்கை—நட்பிற்குரியவள் என்ற எண்ணந்தான் பூரணமாக இருந்தது. வேறு விதமான நினைவிற்கே அங்கு அணுவளவும் இடமில்லை. அவளுடைய உள்ளமும் எப்படி இருக்கிறதென்று எனக்குத் தெரியாது. அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றும் நான் என் கனவிலேனும் விரும்பவில்லை. ஆனால், நாம் விரும்பவில்லையே என்பதற்காக இயற்கையாக நிகழும் சம்பவங்கள் யாவும் நிகழாமலே இருந்து விடுகின்றனவா?

கமாலின் அறையில் ஸுலேகா மாத்திரம் தனியாகச் சோபாவில் உட்கார்ந்துகொண்டு ஏதோ ஓர் உருதுப்பாட்டை மெல்லப் பாடிக் கொண்டிருந்தாள். அவள் கையில் பெரிய புத்தகமொன்று விரித்தபடியே இருந்தது. நான் பின்புறம் வெகுநேரம் நின்றும் அவள் என்னைக் கவனிக்கவில்லையாதலால், மெதுவாக அருகில் நெருங்கி என்ன புத்தகமென்று பார்த்தேன். அது என்ன புத்தகமோ சரியாகத் தெரியவில்லை. அதை அவள் அக்கறையோடு தலைகீழாக வைத்துக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

''தலைகீழாகப் புத்தகம் படிக்கும் நவீன மாணவியை நான் இப்போதுதான் புதிதாய்ச் சந்திக்கிறேன்'' என்று நான் சொல்லி முடிப்பதற்குள் அவள் படீரென்று புத்தகத்தை மூடியபடியே திடுக்கிட்டெழுந்தாள். புத்தகத்திற்குள்ளிருந்து ஒரு சிறிய புகைப்படம் வெளியே நழுவிக் கீழே விழுந்தது.

வேகமாக அவள் அதைக் குனிந்து எடுப்பதற்குள் படம் என் கையில் அகப்பட்டுவிட்டது. அதைக் கரத்தில் வைத்துக்

கொண்டே, ''நான் இதைப் பார்க்கலாமா?'' என்றேன். அவள் வேண்டாமென்று சொல்லவில்லை! மௌனம் சாதித்தாள். அவள் கண்கள் என்னைக் கெஞ்சுவனபோல் விழித்தன.

படத்தை உற்றுப் பார்த்தேன். இதயம் கட்டுக்கு மீறிப் படபடவென்று அடித்துக் கொண்டது. ஸுலேகாவின் முகத்தை ஏறிட்டு நோக்கினேன். அவள் என்னைப் பாராமல் தலையைக் கீழ்நோக்கிக் கவிழ்த்துக்கொண்டிருந்தாள். அவளுடைய முகமெங்கும் வெட்கத்தால் ரத்தம் பாய்ந்திருந்தது. படம் வேறு யாருடையதும் அல்ல; என்னுடையதேதான்!

''ஸுலேகா...'' என்றேன் கம்மிய குரலில்.

பதில் இல்லை.

கடல் அலையிலே மோதுண்ட சிறு படகுகள் போல் விழிகள் மருட்சியோடு மேல் நோக்கி விட்டுத் திரும்பவும் தங்களை இமைத்திரைக்குள் மறைத்துக்கொண்டன. முகம் அதிகமாகச் சிவந்துவிட்டது, எதற்கோ அவள் உதடுகள் துடித்தன.

உயிரோவியம்போல் நின்ற அவளுடைய தளிர்க்கரத்தைப் பற்றியபோது அவள் அதைச் சிறிதேனும் விடுவித்துக் கொள்ள முயலவில்லை. அன்று மலர்ந்த பூங்கொடி போல் அவ்விடத்திலேயே ஒரு நிமிடம் நின்றாள்.

பிறகு சுயநினைவைப் பெற்றவுடன், ''அந்தப் படத்தை இங்கே கொடுத்துவிடுங்கள்; அது எனக்கு வேண்டும்'' என்று தடுமாறினாள்.

''எதற்காக ஸுலேகா?''

அப்போது அவள் பார்த்த பார்வையைப் பார்க்க வேண்டுமே!

* * *

ஸுலேகா தன் மெல்லிய குரலால் அன்று எனக்கு எடுத்துச் சொன்னாளே அந்த ஆங்கிலக் கவியின் முழுப் பொருளும் எனக்கு இப்போதுதான் தெரிந்தது. அறைக்குச் சென்று என்னுடைய புத்தகக் கட்டுக்களைப் புரட்டி அந்தக் கவிதை

வெளிவந்திருந்த புத்தகத்தை எடுத்துப் பிரித்தேன். கவிஞனுடைய அனுபவ மொழிகள் முன்னே நின்றன.

**"எதிர்காலத்தை எதிர்பாராதே,**
**இறந்த காலத்தை எண்ணிப்பாராதே,**
**நிகழ் காலத்தை விட்டுவிடாதே!"**

ஸுலேகா, அன்று இவ்வாக்கியங்களில் எத்தனை பொருள்களைப் புதைத்து வைத்துக் கூறியிருப்பாள்!

கதீஜாவின் பிரிவால் இருண்டுபோன என் மனக்குகை மெல்ல மெல்ல ஒளி பெற்றது.

அந்த ஒளியின் உள்ளொளியாய் ஸுலேகா கனிந்து கொண்டிருந்தாள். ஒருவர் மற்றொருவரது கனவிலேயே காலத்தை மறந்தோம். வசந்த காலமும் மாலைப்பொழுதும் நிலாவொளியும் எங்களுக்கு விநோதச் சிறுகதைகள் கூறின.

எங்களை நன்றாக அறிந்த ஸுலேகாவின் பெற்றோர்கள் எங்களது நிக்காஹ் தினத்தைக் குறிப்பிட்டு விட்டார்கள்.

இந்த இடத்தில் கதையைப் படித்துக் கொண்டிருந்த நண்பர் கதையின் கடைசிப் பக்கத்தைப் பார்க்காமல், "ரஹீமுக்கும் ஸுலேகாவுக்கும் கல்யாணம் நடந்துவிடுகிறது! இதுதானே கதை?" என்றார். "மேலே படித்துவிட்டுச்சொல்லுங்கள்" என்றேன். அவர் படித்தார்.

திருச்சிராப்பள்ளியிலிருந்து கதீஜாவின் தகப்பனார் எனக்கு ஒரு கடிதத்தை ரிஜிஸ்டர் செய்து அனுப்பியிருந்தார். அதில் கதிஜாவுக்குக் குறிப்பிட்டிருந்த அந்த காசிம் என்பவரை கதீஜா பிடிவாதமாக மணம் செய்து கொள்ள மறுப்பதாகவும், அந்த மாப்பிள்ளையின் போக்கு யாருக்குமே பிடிக்கவில்லையென்றும் எழுதியிருந்தார் எனக்கும் கதீஜாவுக்கும் நிக்காஹ் செய்ய விரைவில் ஏற்பாடு நடந்துகொண்டிருக்கிறதாம்; உடனே நான் அங்கே புறப்பட வேண்டுமாம்!

நண்பர் பெருமூச்சு விட்டுவிட்டு, "அப்புறம்?" என்றார்.

இப்போது என் கண்ணெதிரே இரண்டு இளம் முகங்கள் தோன்றுகின்றன. ஒன்று எனது திருச்சிப்பிரயாணத்தின் போது முதல் முறையாகவும், கடைசி முறையாகவும், திரை மறைவிலிருந்து நோக்கியதே, அந்த கதீஜாவின் கண்ணீர்

தேங்கிய முகம். மற்ருென்று என் கையில் புகைப்படம் கிடைத்தபோது முகமெல்லாம் குப்பென்று சிவக்க, வெட்கத்தால் விழிகளை இமைகளுக்குள் ஒளித்துக் கொண்டதே அந்த ஸுலேகாவின் மருண்ட பார்வை. இவற்றில் எந்த விழிகளின் மோகன எழிலுக்கு நான் என் இருதயத்தை அடிமையாக்குவது?

''இவ்வளவுதாஞு கதையின் முடிவு?'' என்ருர் நண்பர்.

''ஆமாம்.''

''சரியான ஏமாற்றமாயிருக்கிறதே!''

''வாழ்க்கையின் ஏமாற்றம், கலைக்கு வெற்றி'' என்றேன்.

''இந்தக் கதையின் முடிவு அந்தக் கதையின் முடிவை விட மோசமானது!'' என்ருர்.

''முடித்து விட்ட கதையைவிட முடிக்காத கதையில் தான் எழுத்தாளன் வாழத் துடிக்கிருன்'' என்றேன்.



# வழிப்போக்கன்

## 1

கொல்லிமலைச் சாரலில் விளைந்த சின்னஞ் சிறு மூங்கிலை, கோயம்புத்தூர் வாசியான சோமுவுக்கு யார் புல்லாங்குழலாகச் செய்து கொடுத்தார்களோ தெரியாது. ஆனால், அது அந்தப் பையனுக்குக் கிடைத்ததிலிருந்து அவனையும் அவன் குழலையும் தனித்தனியே பிரித்துப் பார்ப்பது சிரம சாத்தியமான காரியமாகிவிட்டது.

ஒருநாள் சோமு கடைவீதியில் பாம்பாட்டி ஒருவன் மகுடி வாசித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து விட்டான். அன்றிலிருந்து மகுடிக்குப் பிடித்தது சனியன்! இதே பைத்திமாய் இருந்து சில நாட்களில் மகுடியைத் தன் குழலில் சாதகம் செய்து கொண்டான்.

அதன் பிறகு எப்போதெல்லாம் அவனுக்குத் தலைகால் புரியாத ஆனந்தம் வந்துவிடுகிறதோ அப்போதெல்லாம் அவனிடம் நிச்சயம் மகுடியை எதிர்பார்க்கலாம்.

சோமுவுக்கு இப்போது பத்தொன்பது வயது. அவனுக்குத் தாய் தகப்பனார் இல்லை. நாலுபேர் தமையன்கள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோருக்கும் சோமுவின்மீது அளவு கடந்த பிரியம்-கடைசித் தம்பியல்லவா?

என்ன தான் அவர்கள் சோமுவின்மீது பற்றுதலாயிருந்தாலும் அவனுக்கு என்னவோ அது ஒன்றும் முக்கியமாகத் தோன்றவில்லை. இருந்தாற் போலிருந்து யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டுக்கிளம்பிவிடுவான். மறுபடியும் அவனை வீடு கொண்டு வந்து சேர்ப்பதற்குள் அவன் தமையன்மார்களுக்குப் போதும் போதுமென்றாகி விடும்.

நாலைந்து முறை இப்படி அவனால் சிரமப்பட்ட அவன் சகோதரர்கள், கடைசியில் மனமுடைந்து அவன் போக்கி லேயே போகட்டும் என்று வீட்டுவிட்டார்கள்.

## 2

சோமு வீட்டைவிட்டுக் கிளம்புவது இத்துடன் ஆறுவது முறை. அவன் அப்படிக் கிளம்பி ஆறு மாதமாகிறது.

கரூரிலிருந்து திருச்சிக்கு வரும் நெடுஞ்சாலையில் நெருப் பாகத் தகிக்கும் சித்திரை மாதத்து வெயிலைச் சிறிதேனும் சட்டை செய்யாமல் அவன் ராஜநடை நடந்து வந்தான். அவனுடைய நினைவெல்லாம் தன் இதழ்களிலிருந்து பெருகிக் கொண்டிருந்த மகுடியில்தான் லயித்துப் போயிருந்தது.

சாலை வடக்கே திரும்பி வளைந்து செல்லும் மூலைக்கு வந்தவுடன் சோமுவின் வாசிப்புத் திடீரென்று தடைப் பட்டது. சற்றுத் தூரத்தில் எழுந்த கூக்குரலை உற்றுக் கேட்டான். அத்துடன் பாதையை ஒட்டினாற்போல் மரக் கூட்டத்திற்கு மேலே குபீரென்று புகை எழும்புவதையும் பார்த்தான்.

''யார் வீட்டிலோ நெருப்புப் பிடித்துக் கொண்டது போலிருக்கிறது...இதற்குத்தானா இவ்வளவு கூச்சல்! அருமை யாக வந்து கொண்டிருந்த என் வாசிப்பைக் கெடுத்து விட்டார்களே!'' என்று முணுமுணுத்துக் கொண்டு புல்லாங் குழலை இடுப்பில் செருகினான், மேலே நடந்தான்.

எரிகிற வீட்டிற்குப் பக்கத்தில் வந்ததும் ஒரு பெண் பிள்ளை வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு கத்தினாள்.

அவளுக்கு வயது நாற்பது இருக்கும். அவள் பெயர் அலமேலு என்று சோமு பின்னால் தெரிந்து கொண்டான்.

''ஐயோ! மங்களம் காய்ச்சலோடே மாடியில் கிடக் கிறாளே! இங்கே யாரும் ஆண்பிள்ளை இல்லையா?... அட தெய்வமே! இதோ நான் போகிறேன், அவளைத் தூக்கு வதற்கு'' என்று ஆவேசத்தோடு எரியும் வீட்டில் நுழையப் போனாள் அவள்.

சுற்றிலும் நினற ஆண் பிள்ளைகள் பெண் பிள்ளைகளா ஞர்கள்.

''ஆண்பிள்ளை இல்லையா என்கிருளே, என்னை இவ ளுக்கு ஆண்பிள்ளையாகத் தெரியவில்லையா' எனசோமு வுக்கு ரோஷம் குமுறிக் கொண்டு வந்தது.

''இதோ நான் போகிறேன்'' என்று அவளையும் மற்ற வர்களையும் பிடித்து வெளியே தள்ளிவிட்டு, அந்த வீட்டிற் குள் பாய்ந்தான்.

மாடிப்படியைத் தேடிப்பிடித்து, மேலே காய்ச்சலுடன் படுத்திருந்த அந்தப் பெண்பிள்ளையைத் தூக்கிக்கொண்டு வெளியே வருவதற்குள் சோமுவுக்குப் பாதி உயிர் போய் விட்டது. அவளைக் கொண்டு வந்து தரையில் போட்டு விட்டுத் தானும் மூர்ச்சையாய் விழுந்தான்.

அவனுக்குச் சுயநினைவு வந்தபோது அந்த மாடியில் பற்றிக் கொண்ட தீ முழுவதும் அணைக்கப்பட்டு விட்டது. அவனை வேறொரு கூரை வீட்டின் திண்ணையில் படுக்க வைத் திருந்தார்கள். அவனுக்குப் பக்கத்திலேயே திண்ணையின் மற்றொரு கோடியில் அந்தச் சிறுமியும் படுத்திருந்தாள். சோமு மெதுவாகத் திரும்பி அந்தப் பக்கம் நோக்கியபோது அவளும் இவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

சோமுவின் மயக்கம் முழுவதும் தெளிந்துவிட்டது; துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு அவன் புறப் படச் சித்தமானுன்.

"இரு, தம்பி! சாப்பிட்டுவிட்டுப் போகலாம்'' என்று அவனை இருக்கச் செய்தாள். அவனுக்குச் சாப்பாடு போடும் போது அவனைப்பற்றி முழு விவரமும் கேட்டுத் தெரிந்து கொண்டாள் அலமேலு.

''எப்போதும் இங்கேயே இருந்துவிடு தம்பி'' என்ருள்.

''ஊஹூம்'' என்று தலையை ஆட்டினுன் சோமு.

"ஏன்?''

''நான்தான் ஒரே இடத்தில் தங்கியிருப்பதில்லையே!''

''எவ்வளவு நாள் உனக்கு இங்கே இருக்கப் பிரியமோ அவ்வளவு நாள் இரு.''

சோமு யோசித்துவிட்டு, ''சரி, இருக்கிறேன்'' என்று சொல்லி வைத்தான்.

## 3

வைகாசி மாதம் பிறந்தது. அலமேலுவின் புன்செய்க் காட்டில் அப்போது குடியானவர்கள் சோளக்கதிர் கொய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அருகே வரப்பின்மேல் அலமேலு மங்களத்துடன் நின்றுகொண்டிருந்தாள். பக்கத்திலிருந்த ஏரிக்கரைச் சோலையிலிருந்து சோமுவின் மதுரமான குழலோசை கிளம்பிக்கொண்டிருந்தது.

சோமு அந்தச் சோலையில் மஞ்சளும் சிவப்புமாய்ப் பூத்துக் குலுங்கி நிற்கும் பூவரசமரம் ஒன்றின் உச்சிக் கிளையில் உல்லாசமாக உட்கார்ந்துகொண்டிருந்தான். அவனுடைய குழலும் அப்போது மகுடியைத்தான் கொட்டிக் கொண்டிருந்தது.

''நானுந்தான் இந்தப் பிள்ளைக்கு எத்தனையோ தடவை சொல்லிவிட்டேன்—மகுடி வாசிக்காதே, பாம்பு வரும் என்று. ஆனால் கேட்டால்தானே? சாப்பாடுகூட வேண்டாம் போலிருக்கிறது, இந்தக் குழாய் கையிலிருந்துவிட்டால்!'' என்று அங்கிருப்பவர்களிடம் சொல்லிச் சங்கடப்பட்டுக் கொண்டாள் அலமேலு.

தன் தாய் இப்படிச் சொன்னவுடன் மங்களத்திற்கு அங்கே இருப்புக்கொள்ளவில்லை. ஓடோடியும் வரப்புக்களின் வழியாய் ஏரிக் கரைக்கு வந்து, சோமு உட்கார்ந்திருந்த மரக் கிளையைத் தேடலானாள்.

மேலே, மரத்திலிருந்து அவளுடைய தலைக்கு நேராகச் சோமுவால் பிய்த்தெறியப்பட்ட பூங்கொத்து அவனுடைய இருப்பிடத்தை அறிவித்தது.

''சோமு மாமா, இதோ பாரேன்! மகுடி வாசிக்காதே! பாம்பு வருமாம்! நான் சொல்வதைக் கேள், மாமா! நான் சொல்வதைக் கேள், மாமா!'' என்று உரக்கக் கத்தினாள் மங்களம்.

''இல்லை, மங்களம்! நானும் இத்தனை நாளாய் வாசிக்கிறேன்; ஒரு பாம்புகூட வந்ததில்லை. அப்படி வந்தால் தான் நல்லதாச்சே!'' என்று பதில் கொடுத்துவிட்டு, மறுபடியும் வாசிப்பதற்காக இதழருகில் கொண்டு போனான்.

மரத்தடியில் உட்கார்ந்து, ''ஓ'' வென்று அழத் தொடங்கினாள் மங்களம். கண்ணீர் குபு குபுவெனப் பாய்ந்தோடியது.

'இதேதடா வம்பு!' என்று நினைத்துக் கொண்டு மரத்தை விட்டுத் துரிதமாகக் கீழே இறங்கி அவளிடம் வந்தான் சோமு.

''அழாதே மங்களம். இதோ நிறுத்திவிட்டேன்'' என்றான் தாழ்ந்த குரலில்.

''இனிமேல் மகுடியே வாசிக்கக் கூடாது தெரியுமா?'' என்றாள் மங்களம் கண்டிப்பாக.

சோமுவின் சுபாவம் திரும்பிவிட்டது. ''அதுதான் என்னால் முடியாது!'' என்றான் அழுத்தமாக.

''இல்லாவிட்டால் அழுவேன்!''

சோமுவுக்கு இதற்கு என்ன பதில் சொல்லுவதென்று புரியவில்லை.

'அழுவேன் என்கிறாளே, என்ன செய்வது? அழுகைக்குப் பயந்துகொண்டு மகுடியை விட்டுவிடுவதா? மகுடிக்கு ஆசைப்பட்டு மங்களத்தின் மனத்தைப் புண்படுத்துவதா?... இந்த இரண்டில் முக்கியமானது மகுடியா? மங்களமா? ... இரண்டுந்தான் வேண்டியிருக்கிறது.'

சோமுவுக்கு அந்த ஊரைவிட்டுக் கிளம்பவேண்டுமென்கிற எண்ணம் ஒரே ஒரு முறை மட்டிலும் எழுந்தது. அப்போது அந்த வீட்டில் என்னவோ விசேஷம். அதற்காக வெளியூரிலிருந்து உற்றார், உறவினர்களெல்லாம் வந்திருந்தார்கள். அவர்களைக் கவனிப்பதற்கே பொழுது அலமேலுவுக்குச் சரியாக இருந்தது. ஆனால், சோமுவுக்கோ இந்தச் சில தினங்களாக அலமேலு தன்னை அசட்டை செய்வதாகத் தோன்றியது. அத்துடன், வந்த விருந்தினர்கள் அவனைப் பார்த்த பார்வையும் அவனுக்குப் பிடிக்கவில்லை.

பேசாமல் பத்திரமாகக் குழலை எடுத்துக்கொண்டு வெளியே நழுவினான்.

'எங்கே மாமா போகிறாய்? வீட்டில் அம்மா பலகாரம் பண்ணுகிறாள்; சீக்கிரம் வந்துவிடு'' என்ற மங்களத்தின் குரல் உள்ளே இருந்து கேட்டது.

சோமு நின்று நினைத்துப் பார்த்தான். 'முன்போ குழல் மாத்திரந்தான் இருந்தது; எந்தச் சமயத்தில் எங்கே வேண்டுமானாலும் எடுத்துப் போகலாம். ஆனால் இப்போதோ...'?

மங்களத்தின் குரல் அவன் தீர்மானத்தைச் சிதற அடித்தது.

## 4

வருடங்கள் சென்றன. மங்களம் அழகே உருவாய்த் திகழ்ந்தாள்.

ஒரு நாள் இரவு காளியம்மன் கோவிலுக்கு எதிரே, நடந்துகொண்டிருந்த அரிச்சந்திர நாடகத்திற்கு அலமேலுவும் சோமுவும் போயிருந்தார்கள். மங்களம் மாத்திரம் தன்னந்தனியாக வீட்டில் இருந்தாள்.

சோமுவுக்கு நாடகம் சுவையாக இல்லை. பாதியில் எழுந்து வீட்டிற்கு வந்துவிட்டான். வந்தவன் நேரே மாடிக்குச் சென்று படுக்கையில் படுக்காமல். சற்று நேரம் வான வெளியைப் பார்த்த வண்ணம் மாடியின் கைப்பிடிச் சுவரருகில் நின்று கொண்டிருந்தான்.

நிலவு பாலை பொழிந்து கொண்டிருந்தது. அந்நிலவொளியில் அவனுள்ளத்தில் என்ன என்னவோ இன்பக் கற்பனைகள் ஊற்றெடுத்தன. இடுப்பில் இருந்த குழலை எடுத்துத் துடைத்துக் கொண்டே வாசிப்பதற்காகக் கட்டைச் சுவரில் சாய்ந்தான்.

''மாமா...!''

மங்களத்தின் மெல்லிய குரல் வீணையின் நாதம்போல் காற்றில் மிதந்து வந்தது.

ஆச்சரியத்தோடு குரல் வரும் திக்கைக் கவனித்தான். அப்போதுதான் மங்களம் மாடிப்படிகளிலிருந்து மேல்தளத்திற்கு வந்து கொண்டிருந்தாள்.

''நாடகத்திலிருந்து ஏன் மாமா பாதியில் வந்துவிட்டாய்?''

''பிடிக்கவில்லை; வந்துவிட்டேன்.''

''மாமாவுக்குப்பிடிக்காவிட்டால் அம்மாவுக்கு நிச்சயம் பிடிக்கும். நாடகம் முடிந்தபின்தான் வருவாள்'' என்ருள் மங்களம்.

இப்படிச் சொல்லிக்கொண்டே அவளும் சுவரின் அருகில் வந்து வானத்தை நோக்கினுள்.

''நாடகத்தைவிட எனக்கு இந்த நிலாதான் அதிகம் பிடிக்கிறது'' என்ருன் சோமு.

மங்களம் பெருமூச்சுவிட்டாள். சற்று நேரம் கழித்து ''எனக்கும் அப்படித்தான்!'' என்ருள்.

வெண்ணிலவின் அழகிய அமைதியில் இரண்டு இருதயங்களும் கட்டற்றுத் துடித்தன. அந்தத் துடிப்பின் சுமையை மங்களத்தால் அவ்வளவாகத் தாங்க முடியவில்லை.

''எங்கே மாமா, குழலை எடுத்துக் கொஞ்சம் மகுடி வாசி!''என்ருள். அவள் குரல் அவனைக் கெஞ்சுவது போல் இருந்தது.

சோமுவுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. மகுடி வாசிக்கவேண்டாமென்று மன்ருடிய அதே மங்களந்தாஞ இப்போது இப்படிச் சொல்லுகிருள்!

சோமுவின் இதழ்கள் வேய்ங்குழலை முத்தம் இட்டுக் கொஞ்சின. மங்களத்து வீட்டின் கூரை வேய்ந்த மாடியிலிருந்து மகுடிநாதம் வெள்ளமாய்ப் பெருக்கெடுத்தது.

கற்பனை உலகத்திற்குத் தாவிக் கொண்டிருந்த சோமுவை மங்களம் திடீரென்று ஏறிட்டுப் பார்த்தாள். நிர்மலமான வானவெளியை. அவன் கண்கள் ஊடுருவிக் கொண்டிருந்தன. கண்களிலிருந்து கண்ணீரும் இதழ்களிலிருந்து மகுடியும் ஒன்ருய்ப் பெருகிக்கொண்டிருந்தன.

''மாமா...'' எனத் தடுமாறினாள் மங்களம்.

''மங்களம்...''

குழலோசை தடைப்பட்டது. வானத்தில் நிலவைச் சிறுமேகம் விழுங்கியது. வசந்தகாலத் தென்றல் இலேசாக உள்ளே பாய்ந்தது. சோமுவின் மார்பு பொங்கி வடிந்தது

விம்மிக்கொண்டே எழுந்து, முகத்தை மூடிய வண்ணம் திடுதிடென்று மாடிப்படி வழியாகக் கீழே ஓடினாள். மங்களம். பெருமூச்சுடன் குழலுக்கு அதன் இருப்பிடத்தைத் தேடிக் கொடுத்தான் சோமு.

# 5

அன்றைக்கு இரவே சோமு ஒரு கனவு கண்டான். பயங்கரக் கனவு. மங்களம் மாடியிலிருந்தவாறே சோமுவின் கரத்திலிருந்த குழலைப் பறித்துக்கொண்டு ஓடினாள். சோமு அவளைப் பிடிப்பதற்காகத் தொடர்ந்து பின்பற்றினான். கலீர் என்று சிரித்துவிட்டு மங்களம் மாடியிலிருந்து கீழே விழுந்து உயிரைவிட்டாள். அவளுடனேயே அவள் கரத்திலிருந்த மூங்கிற்குழலும் உடைந்துவிட்டது! — சோமு நாடோடியாகப் புறப்பட்டுவிட்டான்.

கனவு கலைந்து எழுந்தான் சோமு. படுக்கையில் தலையணை கண்ணீராலே நனைந்திருப்பதைக் கண்டுவிட்டு, தான் உண்மையிலேயே அழுதிருப்பதை உணர்ந்தான்.

'விடிவதற்கு முன்பு கனவு கண்டால், பலிக்குமென்று சொல்லுகிறார்களே! ஒரு வேளை அது உண்மையாகி விடுமோ?' என்னும் கவலை அவனைப் பற்றிக் கொண்டது. எவ்வளவோ தன்னைச் சமாதானம் செய்துகொள்ள முயன்றும் அது பயனற்றுவிட்டது.

ஆடி அமாவாசை. விளக்கு வைத்த சமயம். வயல் வரப்புகளில் சுற்றித் திரிந்துவிட்டு, வீட்டிற்குத் திரும்பினான் சோமு. வாசற் கதவு வழியாக உள்ளே நுழையப்போகும் சமயத்தில் வீட்டிற்குள் மங்களமும் அவள் தாயாரும் ஆத்தி

ரத்துடன் பேசிக்கொண்டிருந்த சொற்கள் அவன் காதில் விழுந்தன.

''பைத்தியம்! சோமு மாமாவைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வாளாம்! என்ன அழுத்தம் உனக்கு? இன்னொருதரம் இப்படிச் சொல்லாதே; கேட்பவர்கள் சிரிக்கப் போகிறார்கள்! உன் அம்மாவுடன் பிறந்த மாமனா கெட்டுப் போகிறான்? எவனோ ஒரு வழிப்போக்கன்...''

இதற்குமேல் சோமுவுக்குக் காது கொடுத்துக் கேட்கப் பொறுக்கவில்லை. அவன் பாதத்திற்குக் கீழிருந்த பூமி பம்பரம்போல் சுழன்றது.

மங்களம் தன் தாயாருடன் தழுதழுத்த குரலில் எவ்வளவோ வாதமிட்டுப் பார்த்தாள். இதெல்லாம் அவன் காதில் விழுந்து கொண்டுதான் இருந்தது; ஆனால் அவன் நினைவு இதை ஒன்றும் கவனியாமல் எங்கெங்கோ அலைந்தது. 'வழிப் போக்கன்!'

வெளியே இருளை வெறித்துப் பார்த்தான். வான முகட்டிலே ஒரு மின்னல் தோன்றி, 'காரிருளில் வழிப்போக்கன்' என்று எழுதி, அழித்து, மறைந்தது. ஆடி மாதத்தின் ஆவேசக் காற்றும் அவனை அதே பெயரினால் அறைகூவி அழைத்தது.

புயலிலும் மழையிலும் அடிபட்ட பூங்கொடிபோல் கண்ணீரும் கம்பலையுமாய் நின்று கொண்டிருந்த மங்களத்தைத் திறந்த கதவின் வழியாக நோக்கி விட்டுச் சந்தடி செய்யாமல் திரும்பினான்.

''என் உயிர் போனாலும் உன்னை அவனுக்குக் கொடுக்க மாட்டேன்'' என்று கத்தினாள் தாய்.

வந்த சுவடு தெரியாமல் மெதுவாய்த் திரும்பினான் சோமு. திருச்சிராப்பள்ளி நெடுஞ்சாலையில் அவன் கால்கள் தளர்வோடு நடந்தன.

தூரத்தின் இருளில் அவன் மறைந்தவுடன் அவனது குழலொலி தயங்கித் தயங்கி மெவாக எழுந்தது. சிறிது நாழிகை சென்றவுடன் அது 'குபீர்'என்று பொங்கிப் பேரழுகையாய் மாறியது.

அவனும் அழுதான்; அந்தக் குழலும் அழுதது.

# தாமரைப்பூ

## 1

ஞுறுக்கே நின்ற இந்த ஐம்பது ஆண்டு வாழ்க்கையையும் இன்றைக்கு என் சொந்தக் கிராமத்தின் பொன்னேரியின் கரையில் நின்றுகொண்டு நினைத்துப் பார்த்தால் அது ஒரு புகை சூழ்ந்த கனவுப் படலம் போல் மனத்திரையில் காட்சியளிக்கிறது.

இந்த ஐம்பது வருடங்களுக்கு முன்னுல் எனக்கு வயது பதினைந்து. அப்போது நான் இதே கிராமத்தில்தான் இருந்தேன். இப்போதும் நான் இங்கேதான் இருக்கிறேன். ஆனுல் இடைவெளியே அகப்பட்ட அந்த அரை நூறு வருடத்தில்தான் என்னுடைய சொந்த வாழ்க்கையின் சாரமற்ற பெரும் பகுதி அடங்கிக் கிடக்கிறது.

என்னுடைய பதினுருவது வயது ஆரம்பத்தில் நான் இந்த ஊரை விட்டுத் தனியாக ஒருவருக்கும் தெரியாமல் வடநாட்டுப் பக்கம் கிளம்பிவிட்டேன். என்ன காரணத்திஞல் நான் அப்படிச் செய்தேனென்று எனக்குத் தெரியவில்லை; அதே போலத்தான் காரணம் தெரியாத ஒரு சக்தியால் உந்தப் பெற்றுத் திரும்பவும் இங்கேயே வந்து சேர்ந்தேன்.

என்னைப் பெற்று வளர்த்தவர்களில் ஒருவரேனும் இப்போது இங்கில்லை; நானும் அவர்கள் இத்தனை காலம் உயிரோடிருப்பார்கள் என்று எதிர்பார்க்கவில்லை. ஊருக்கு வந்தவுடன் ஒரு சிறிய கூரை வீட்டையும், அதைச் சுற்றிலும் தோட்டத்திற்குக் கை அகல இடமும் விலைக்கு வாங்கிக் கொண்டேன். கையில் இருந்த மீதிப் பணத்தைக்கொண்டு சிறிதளவு நன்செய் நிலமும் வாங்கப்பட்டது. என்னுடைய இறந்துபோன தந்தையிடமிருந்த பழைய பண்ணைக்காரச்

சந்ததியைச் சேர்ந்தவர்கள் இன்று என் நிலபுலங்களைக் கவனித்து வருகிறார்கள். சமையலுக்கு மாத்திரம் ஒரு பையனை அமர்த்திக்கொண்டிருக்கிறேன்.

பட்டாளத்தில் சேர்ந்து இயந்திரத்தோடு இயந்திரமாய் வாழ்ந்த என்னுடைய உடலுக்கும் உள்ளத்திற்கும் இந்தக் கிராம வாசம் ஒரு நிம்மதியைக் கொடுக்கிறது. மற்றவர்கள் என்னை வியப்போடு உற்றுப் பார்த்துத் தங்களுக்குள் என்னைப்பற்றி நூதனமான கருத்துக்கள் தெரிவித்துக்கொள்வதற்காக நான் ஒன்றும் கவலைப்படவில்லை. என் சொந்தக் கிராம வாசிகளில் சிலரே என்னை 'வடநாட்டுக்காரக் கிழவன்' என்றும் 'தாடிக்காரத் தாத்தா' என்றும் தலைமறைவாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஏதோ அவர்களுடைய அரைகுறைப் பேச்சிலும் ஒரு சிறு பகுதியாவது உண்மை இருக்கத்தான் செய்கிறது.

ஒரு நாள் மாலை மூக்குக்கண்ணாடியைத் துடைத்து மாட்டிக்கொண்டு கைப்பிரம்புடன், திருக்குறளுடன் பள்ளன் குளத்தை நாடி நடந்தேன். குளத்தங் கரையில் இருந்த பரந்து வளர்ந்த அரசமரமும் அதனடியிலிருந்த பிள்ளையாரும் என்னைத் தங்களது மோன மொழிகளால் வரவேற்றன. கால் செருப்புக்களைத் தூரத்தில் கழற்றி வைத்துவிட்டு, விநாயகரை வணங்கிய பின் அருகில் தாறுமாறாகக் கிடந்த குளத்தின் படிக்கட்டில் உட்கார்ந்தேன். கவனம் திருக்குறளில் சென்றது.

சற்று நேரத்தில் பின்புறம் யாரோ நிற்பதுபோல் தோன்றியதால் மெதுவாகத் திரும்பிப் பார்த்தேன்.

சுமார் பத்தடி தூரத்தில் ஓர் அழகிய பெண் குழந்தை நின்றுகொண்டு இடுப்பில் வைத்த மண்குடத்தோடு என்னை நோக்கிக் கொண்டிருந்தாள். அவளுடைய மருண்ட விழிகளில் அச்சம் கலந்தொளித்தது.

அவளுக்குப் பதினைந்து பதினாறு வயதுக்கு மேல் இராது. மாநிறத்தோடு நடுத்தர உயரத்துடன் சாதாரணப் பச்சை நிறப் புடைவை ஒன்றை உடுத்துக்கொண்டு சின்னஞ்சிறு

பசுங்கொடிபோல் நின்ருள். அவளது முகத்தில் தோன்றிய பயம் இன்னும் அப்படியேதான் இருந்தது.

மூக்குக் கண்ணுடியை நெற்றியில் தூக்கி வைத்துவிட்டு, "நீ யாரம்மா?" என்றேன்.

அவள் உடனே பேசவில்லை. துடிக்கும் உதடுகளோடு என்னை ஏறிட்டுப் பார்த்துவிட்டுத் திரும்பவும் கீழே குனிந்து கொண்டாள். அவளுடைய உடல் முன்னைவிடக் குறுகி யிருந்தது.

"ஏனம்மா பேசாமல் நிற்கிருய்? நீ யாரென்று சொல் லேன்."

"நான்..."

இதைக் கூறியவுடன் ஏதோ தவறு செய்துவிட்டவள் போல் இன்னும் இரண்டடி பின்னே நகர்ந்தாள்.

அந்தப் பெண்ணின் முகத்தை ஆச்சரியத்தோடு உற்று நோக்கினேன். அது குத்து விளக்கைப்போல் சுடர்விட்டது. ஆனுல்...!

"அதனுல் பரவாயில்லை. தண்ணீர் மொள்ளத்தானே வந்திருக்கிருய்? தாராளமாய் வந்து மொண்டுகொண்டு போ" என்றேன்.

என் வார்த்தைகளைக் கேட்டுத் திகைப்படைந்த அவள் கணநேரம் தாமதித்த பிறகு, 'விர்' ரென்று வேகமாய்க் குளத்திற்குள் இறங்கினுள். அங்கே அவள் ஒரு நிமிடங் கூட நிம்மதியாக நிற்கவில்லை, அவசரம் பொறுக்க முடியாமல் சரி யாகக்கூடக் குடத்தைக் கழுவாதபடி நீர் மொண்டுகொண்டு கரை ஏறினுள். அவள் கால்களின் மெட்டிகளின் ஓசையும், குடத்தின் வாய்ப்பாட்டில் அலை மோதும் நீரொலியும் ஒன்று கூடி இன்னிசையைக் கிளப்பின.

படிக்கட்டுகளில் ஏறி அவள் கரைக்கு வந்தவுடன், "உன் னுடைய பெயர் என்னம்மா?" என்றேன்.

"சீதா" என்று பதில் வந்தது.

"உன்னுடைய வீடு எங்கே இருக்கிறது?"

"அதோ பாருங்கள் அங்கே, அந்தச் சேரியில்தான் நாங் கள் குடியிருக்கிரேம்" என்று நெற்கழனிகளுக்கப்பால் மரக்

கூட்டங்களுக்குப் பின்புறம் தெரிந்த பத்துப் பன்னிரண்டு கூரைக் குடிசைகளைக் காண்பித்தாள்.

''சரி, போய்வா'' என்றேன்.

அடிமேல் அடிவைத்துத் திரும்பிப் பார்த்துக் கொண்டே என் பார்வையிலிருந்து விலகினாள் சீதா.

அன்றைக்கு இரவு என் வீட்டின் எதிரே நட்சத்திரங்கள் பூத்த வானத்தின் அடியில் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்த வாறே மௌனத்தில் ஆழ்ந்திருந்தேன். அந்தச் சமயத்தில் என் மனத்தில் அன்று மாலை நான் சந்தித்த பெண்ணின் ஞாபகம் வந்தது.

''சீதா!''

என்னவோ எனக்கு அந்த முதல் சந்திப்பிலேயே அவ ளிடம் தனிப் பற்றுதல் ஏற்பட்டுவிட்டது.

மனித வர்க்கத்திலே நம்முள் தீண்டப்படாத சாதி யார் என்று ஒரு பகுதியினரை ஒதுக்கி வைத்திருப்பதை இத்தனை நாளும் நான் அறிந்து கொள்ளாமலில்லை. ஆனால் என் வாழ்நாட்களில் முக்கியமான பகுதியை மரக்கட்டை போல் கழித்த மனிதனான எனக்கு இதைப்பற்றியெல்லாம் நினைத்துப் பார்க்க அப்போது அவகாசம் ஏது?

அன்பு, இரக்கம், அழகு, காதல் இவைகள் யாவற்றை யும் நடைமுறையில் அனுபவித்துப் பார்க்க இடமில்லாத என் வரண்டுபோன இருதயத்தில், இப்போதுதான் அவற் றைப்பற்றியெல்லாம் யோசிக்க இடம் கிடைத்தது.

பாலைவன யாத்திரிகன் தனது களைப்பு மிகுந்த பிரயா ணத்தின் இறுதியில் ஒரு பேரீச்சம் பழச் சோலையைக் காணு வதுபோல் நான் இப்போது என்னுடைய கிராமத்தை மீண்டும் கண்டிருக்கிறேன். அந்தச் சோலையின் குளிர்ந்த காற்றை அள்ளி வீசும் தெளிந்த நீரோடைதான் இன்று எனக்கு சீதா.

சீதா! மற்றவர்களுக்கு நீ எப்படித் தோன்றினாலும் சரி, உன்னைக் கடவுளது படைப்பின் உன்னத அம்சம் என்றே நான் கருதுகிறேன்.

இவ்வாறு எண்ணமிட்டுக்கொண்டே வானத்து மீனி னங்களை நோக்கி இமைகளை உயர்த்தினேன்; அவற்றின் மத்தியில் நின்று தன் செவ்வதழ்களில் குறுநகை தவழ, ''நான்...தாத்தா!'' என்று என்னிடம் சீதா கூறுவதுபோல் இருந்தது.

அடுத்த நாள் மாலையிலிருந்து நானும் சீதாவும் நெருங் கிய தோழர்களாகி விட்டோம். சுவை காணாத ஓர் இளம் கொடிக்கு புதிதாக அருகில் ஒரு பட்டுப்போன கிளை அகப் பட்டதுபோல் நான் அவளுக்குக் கிடைத்தேன். அவளது மாசற்ற குழந்தையன்பைப் பெற்ற இன்பத்தால் என்னு டைய தளர்ந்துபோன உடலில் மீண்டும் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது.

தினந்தோறும் என்னிடம் கேட்பதற்கென்றே சீதா விதம்விதமான கேள்விகளைத் தயார் செய்துகொண்டு வரு வாள். நானும் எனக்கு எட்டிய உலக அறிவுக்குத் தகுந் தாற்போல் அவளுக்குப் பதில் சொல்லி அவளுடைய சந்தே கங்களைத் தீர்த்து வைப்பேன்.

சீதாவிடமும் நான் தெரிந்துகொள்ள வேண்டிய விவரங்கள் எவ்வளவோ இருந்தன. அவற்றை அப்போதைக் கப்போது சிறிது சிறிதாகக் கேட்டுத் தெரிந்துகொண்டு வந் தேன். இல்லாவிட்டால், மேல் துண்டை எடுக்காமல் பெரிய தனக்கார ஐயா வீட்டுக் கொல்லைப்புறம் சென்றதற்கு அவ ளுடைய தகப்பன் கசையடிபட்ட கதையும் இன்னும் அதைப்போலப் பல கொடுமைகளும் எனக்கு எங்கே தெரியப் போகின்றன?

''சரி தாத்தா! சாயங்கால வேளையில் நாங்கள் வயல் காட்டில் வேலை செய்து கொண்டிருக்கும்போது, அதோ அந்தக் கோவிலிலிருந்து மணியோசை கேட்கிறதே, அப் போது எங்களுடைய உடம்பெல்லாம் என்ன மாதிரி புல் லரிக்கிறது தெரியுமா? அவ்வளவு தூரத்திலிருந்து அதைக் கேட்கும் எங்களுக்கே அப்படி இருந்தால், அங்கே போய் நேரே சாமியைப் பார்த்துக் கும்பிடுகிறவர்களுக்கு எவ்வளவு ஆனந்தமாக இருக்காது!''

இவ்விதமான கேள்விகளின் போது என்னையறியாது துக்கம் நெஞ்சை அடைத்துக்கொண்டு வரும்—தீண்டப் படாத சாதிப் பெண்ணுக்குக் கோவிலுக்குள் இருக்கும் கடவுளிடம் எவ்வளவு பக்தி!

''இல்லையம்மா; அங்கே போய்த் தரிசிக்கும் சனங்களில் அநேகம் பேருக்கு உனக்கு இருக்கும் பக்திகூடக் கிடையாது. கடவுள் அதற்காகத்தான் அவர்களையெல்லாம் விட்டுவிட்டு உன் போன்றவர்களுக்காகத் தம் அன்பை அந்த மணியோ சையின் வாயிலாக இந்தப் பக்கமெல்லாம் அனுப்புகிறுர்'' என்று அவளைச் சாந்தப்படுத்த முயல்வேன். ஆனுல் என் மனச் சாட்சியின் எதிரே அவளுடைய கேள்வி அப்படியே பதிலளிக்காமல் நின்றுவிடும்.

## 2

இன்றைக்கு சீதா குளத்தங்கரைக்கு வரும்போது தன் மண்குடம் நிறைய மல்லிகைப் பூ கொண்டு வந்திருந்தாள்.

''ஏது இந்தப் பூ?''

''வீட்டுக் கொல்லையில் பதியம் போட்டு இப்போது தான் மலர ஆரம்பித்திருக்கிறது. இனிமேல் பூவுக்குக் குறைவில்லை.''

குடத்தில் இருந்த உதிரி மலர்களைக் கீழே கொட்டி அத்துடன் தான் நனைத்துக்கொண்டு வந்திருந்த ஒரு வாழை நார்ச் சுருளையும் எடுத்துப் போட்டாள்.

''ஏன் தாத்தா உங்களுக்கு பூக்கட்டத் தெரியுமா?''

''ஓ! நன்ருகத் தெரியுமே!''

''அப்படியானுல் எனக்கும் தெரியும்.''

இருவரும் சிரித்துக்கொண்டே பூத்தொடுத்து இரண்டு சிறிய பூமாலையைக் கட்டிவிட்டோம்.

''இந்தாருங்கள் தாத்தா; இந்தப் பூவையெல்லாம் அந்தக் கணபதிக்கே போடுங்கள்—இது மட்டும் எனக்குப் போதும்'' என்று தனக்குச் சிறிது பூவை எடுத்துக் கொண்டு மீதியை என்னிடம் கொடுத்தாள்.

''ஏன், நீயே வந்து உன் கையாலே விநாயகருக்கு மாலே போடுகிறதுதானே?''

''ஐயையோ! சாமி கண்ணைக் கெடுத்துவிடாதா?'' என்று கண் விழிகளே உருட்டி விழித்து ஆச்சரியத்தோடு வாயைப் பொத்திக்கொண்டாள்.

''நீதான் போடவேண்டும். உன் கையால் மாலே போட்டால்தான் அந்த விநாயகருக்குப் பிடிக்கும்'' என்று சிறிது நேரம் பிடிவாதம் பிடித்த பிறகுதான் அவளுக்குத் தைரியம் பிறந்தது.

''சாமி! நான் செய்கிறது பாவமாக இருந்தால் அதற்காக என்னேயும் தாத்தாவையும் மன்னித்துவிடு'' என்று சொல்லிக்கொண்டே மாலேகளே அதன் கழுத்தில் சுற்றி விட்டு, விழுந்து விழுந்து கும்பிட்டாள்.

அதற்கு அடுத்த நாள் அரசமரத்தடிக்கு வந்து பார்த்தபோது அங்கே சீதா காணப்படவில்லே. அவளுடைய மண் குடம் மாத்திரம் அங்கே கவிழ்த்து வைக்கப்பட்டிருந்தது. சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு விநாயகரை நோக்கினேன். சுமக்கமுடியாத பூக்குவியலுக்கு மத்தியில் அகப்பட்டு அவர் திணறிக்கொண்டிருந்தார்! மல்லிகை ஆரத்தோடு அல்லாமல், ஆவாரை, கொன்றை, தங்க அரளி முதலிய மலர்கள் அவரைச் சூழ்ந்திருந்தன.

திரும்பிப் பார்த்தேன்; என் பின்னுல், மலர்ந்த அழகிய மலர்க் கொத்துக்களே இரண்டு கரங்களாலும் பற்றிக் கொண்டு வனதேவதைபோல் வந்து நின்ருள் சீதா.

'அடி பைத்தியக்காரப் பெண்ணே!' என்று எனக்குள் நினைத்துக்கொண்டு, ''இது என்ன சீதா வேஷம்?'' என்றேன் புன்சிரிப்புடன்.

''இதுவா?—இதுதான் நேற்று நீங்கள் சொல்லிக் கொடுத்த வேஷம்!'' என்று குறும்புத்தனமாகப் பதில் அளித்துவிட்டு, விக்கிரகத்தின் எதிரே அமர்ந்து அதை அழகு படுத்தும் வேலேயில் தீவிரமாக ஈடுபட்டாள்.

# 3

முதல் முதலாக சீதாவைச் சந்தித்து இப்போது எவ்வளவோ மாதங்கள் ஆகிவிட்டன. இந்த மாதங்களின் நாட்களெல்லாம் எனக்கு முன்போல் அவ்வளவு உயிரற்றன வாகவோ உணர்ச்சியற்றனவாகவோ இருக்கவில்லை; மிகவும் வேகமாகச் சுழன்று செல்லும் வெள்ளப் பெருக்காகத் தான் இருந்தன.

இந்தக் கடைசிக் காலச் சுறுசுறுப்பும் புத்துணர்வும் அணைந்து போகுமுன் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் தீபத்தின் ஒளிபோல, வருங்காலத்தில் விரைவோடு காத்து நிற்கும் மரணத்தின் அறிகுறி என்று நான் ஏற்கனவே எதிர்பார்த் திருந்தேன், ஆனால் அதைப்பற்றிக் கவலை கொள்வதற்கோ விசனப்படுவதற்கோ எனக்கு சீதாவின் நட்பு போதிய அவகாசம் அளிக்கவில்லை.

என்றைக்குமில்லாதபடி அன்று என் உடம்பை என் னவோ செய்தது; மனமும் அத்துடன் ஒன்று சேர்ந்து இன்ன தென்று தெரியாத ஒரு விஷயத்திற்காகக் குழம்பிக்கொண் டிருந்தது.

காரணம் என்னவாக இருந்தாலும் எனக்காக அந்த அரசமரத்தடியில் காத்து நிற்கும் சீதாவின் முகத்தைப் போய்ப் பார்த்து வருவோம் என்ற எண்ணத்தோடு செருப் புக்களை மாட்டிக்கொண்டு பள்ளன் குளத்துப் பக்கம்கிளம்பி னேன். வெயில் இன்னும் தணிந்தபாடில்லை; என் அவசரத் தால் வழக்கத்திற்கு விரோதமாகச் சற்று முன்னதாகவே வந்துவிட்டேன். உட்காருகிற இடத்தில் இன்னும் நிழல் வராததால் நின்றுகொண்டே அங்குமிங்கும் கவனமில் லாமல் பார்வையைச் செலுத்திக்கொண்டிருந்தேன்.

எதிரே தெரிந்த குளத்து நீர்ப்பரப்பின் மத்தியில் தாமரை இலைகளினூடே இன்று ஒரு புதிய அதிசயம் முளைத் திருந்தது. ஆச்சரியத்துடன் கவனித்தேன். ஈட்டி போலக் கூர்மையாகவும்,வண்ணக் குமிழ்போல் வனப்பாகவும் ஒரு சிறு தாமரை மொட்டு அங்கே தலைதூக்கி நின்றது. சுற்றி

லும் தாமரை இலைகளில் நீர்த்திவலைகள் வைரமணிகள் போல் உருண்டுகொண்டிருந்த அழகும் அவ்வழகுக்குச் சிகரம் வைத்தாற்போல் அரும்பி நின்ற மலர்மொட்டும் என்னுள்ளே எண்ணற்ற எண்ணங்களை நிரப்பின.

'இருக்கட்டும்! இந்த மொட்டு நன்றாக விரிந்து மலர்ந்தவுடன் இதை சீதாவிடம் காண்பித்து, 'இதோ பார்—உன்னுடைய முகத்தின் பிரதிபிம்பம் இந்தப் பள்ளன் குளத்து நீரில் தாமரையாக மலர்ந்திருக்கிறது' என்று சொல்லுவோம்' என்ற கற்பனையோடு கீழே உட்கார்ந்தேன்.

சிறிதும் சந்தடி செய்யாமல் என் எதிரே வந்துஉட்கார்ந்தாள் சீதா. அவளுடைய தலை என்னை நோக்கிப் பாராமல் குனிந்தவண்ணம் இருந்தது. ஒரு கரத்தைக் கீழே ஊன்றிக் கொண்டு மற்றொரு கரத்தால் மண்ணில் கோடு கிழித்துக் கொண்டிருந்தாள்.

ஐந்து நிமிடமாகியும் தலை நிமிரவே இல்லை.

''என்ன சீதா, ஏன் ஒரு விதமாக இருக்கிறாய்?''

ஒன்றும் பதில் வரவில்லை.

''சீதா?—இதோ பார்!''

''ஒன்றுமில்லை தாத்தா......'' அவளுடைய குரல் தழுதழுத்தது.

''இதோ, என்னைப் பார்; ஏன் அழுகிறாய்?'' அவளது முகத்தை மெதுவாக மேலே உயர்த்தினேன்.

கண்களினின்று பொங்கிய கண்ணீர் என்னுடைய கரத்தை நனைத்தது; அத்துடன் அவள் சிரித்துக்கொண்டே என்னைப் பார்க்க வெட்கப்படுபவள்போல் வேறு பக்கம் திரும்பி நோக்கினாள்.

''என்ன சீதா! என்ன இது?...அழுகிறாயா, எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!''

''இல்லை வந்து...''

''சொல்லேன்! என்னிடம் சொல்வதற்கா உனக்கு வெட்கம்?''

''வருகிற வெள்ளிக்கிழமை......எனக்கு......க......லி... யாணம்.''

''அசட்டுப் பெண்ணே! யாரேனும் இதற்காக வருத்தப் படுவார்களா?''

''இல்லே, தாத்தா நாளேயிலிருந்து......உங்களேப்...... பார்க்க முடியாது...''

பிரிவின் சோகத்தைத் தாங்க முடியாமல் விம்ம ஆரம் பித்தாள்.

என் கண்முன் உலகமே இருண்டு வருவதுபோல் தோன் றியது. மௌனத்தோடு அவளே இமை கொட்டாமல் பார்த்த வண்ணமாகவே உட்கார்ந்தேன்; நாழிகை சென் றதே தெரியவில்லே. சூரியன் தன் பொன்னொளியைச் சுருக் கிக்கொண்டு மேற்கே வான முகட்டில் தெரிந்த மலேவாயில் விழுந்துகொண்டிருந்தான்.

கடைசியாக சீதா குளத்திற்குள் இறங்கி நீரெடுத்துக் கொண்டுவந்து கரையில் வைத்துவிட்டு என் கால்களில் விழுந்து வணங்கியவாறே அவற்றைத் தன்னுடைய கண்ணீர் அருவியால் கழுவினுள்.

''போய் வருகிறேன் தாத்தா...''

தடுமாற்றத்துடன் அவள் குரல் எங்கேயோ மைல் களுக்கு அப்பாலிருந்து பேசுவதுபோல் ஒலித்தது.

''போய்வா சீதா! சகல பாக்கியமும் பெற்று உன் கணவனுடன் சுகமாயிரு!'' என்று பதறும் நெஞ்சத்தோடு அவளுக்கு விடை கொடுத்தேன்.

கணத்திற்கொரு முறை திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே தன் முன்முனேயால் கண்களேத் துடைத்தவாறு மெதுவாக ஊர்ந்து சென்று செடி கொடிகளின் மத்தியில் மறைந்தாள்.

இன்றைக்கு வெள்ளிக்கிழமை. என்னுடைய தேக பலத்தையெல்லாம் ஒன்று சேர்த்துக்கொண்டு தள்ளாடித் தள்ளாடிப் பள்ளன்குளத்துக்கரைக்கு வந்து சேர்ந்தேன்.

எதிரே முதல் நாள் அவள் எனக்குத் தன்னுடைய சிறு கரத்தால் காண்பித்த சேரியிலிருந்து கொம்பு வாத்தியத்

தின் சுழலொலியும், ஜால்ராவின் நாதமும் ஒன்று சேர்ந்து மங்களகரமான ஓசையோடு வான வழியில் அந்தப் பக்க மெல்லாம் பரவியது.

நான் சீதாவுக்காக என் சொத்து முழுவதையும் எழுதி வைத்திருந்த அந்த உயிலை அங்கிருந்த விநாயகரின் முன் ஒருமுறை மெதுவாகப் படித்தேன். அந்த விநாயகரும் அவரருகில் நின்ற அரச மரமும், ஏன்—அந்தப் பள்ளன் குளத்துத் தெளிந்த தண்ணீர்கூட என்னுடன் சேர்ந்து பெரு மூச்சு விடுவதுபோல தோன்றியது.

கடைசி முறையாக—ஆம், அதன் பிறகு மீண்டும் இந்த உயிரோடு இந்த இடத்திற்கு வரமுடியும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை—குளத்தை உற்றுப் பார்த்தேன். அன்றைக்கு அரும்பியிருந்த தாமரைமொட்டு இன்று கட்டவிழ்ந்து இதழ் விரித்துப் பெரிய மலராக மலர்ந்திருந்தது. அந்த மலரை நாடி எங்கிருந்தோ ஒரு வண்டு வந்து ரீங்காரமிட்டுக் கொண்டே அதைச்சுற்றி வட்டமிட்டது. ஆம். மலர் மலர்ந் தது; வண்டும் வந்தது.

அருகே மிதந்த பழுத்த இலைக்கு இனி வேலையில்லை.



# தனியுமா?

## 1

திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸுக்கு பேசுவதற்கு வாயோ, சிந்துவதற்குக் கண்ணீரோ, இரக்கப்படுவதற்கு இருதயமோ இருந்தால், ஒருவேளை அது தன் சென்னைத் தோழர்களிடம் தன் திருவாங்கூர்ப் பிரயாண அனுபவத்தைச்சொல்லிவிட்டு ஒரு மூச்சு அழுது ஓய்ந்திருக்கும். ஆனால் அதற்கு அந்தமாதிரி வசதிகளெல்லாம் கிடையாது.

செங்கோட்டையில் எக்ஸ்பிரஸுக்கென்று காத்திருக்கும் 'சோடா லெமனேட்'காரர்கள், 'கரம் சாயா'க்காரர்களைத் தவிர, இன்னும் பல முக்கியமான தோழர்களும் அதற்கு உண்டு. அவர்களில் ஒருவன்தான் கோஷி.

கோஷிக்கு வயது பத்துக்குமேல் இருக்கும்; அவன் அந்தப் பக்கத்தைச் சேர்ந்தவன்தான். இரண்டு மூன்று ஆண்டுகளாக அவனுக்குச் செங்கோட்டை சந்திப்பே குடியிருப்பாக உபயோகப்பட்டு வருகிறது. சோறும் புகலிடமும் அவனுக்கு அதே இடத்தில்தான்.

மதியப்பொழுதில் அங்கு வரும் ரெயில், அதற்காகக் காத்திருக்கும் நாய்கள், காக்கைக் கூட்டம், இன்னும் அவனைப் போன்ற மற்ற பிச்சைக்காரர்கள்—இவர்களையெல்லாம் அவனுக்கு நன்றாய்த் தெரியும். இவர்கள் அவனுடைய நண்பர்களும் கூட,—ஆம், பிச்சை எடுக்கும் நேரத்தில் மட்டும் இந்த நட்புக்குச் சற்று, விதிவிலக்கு உண்டு! அடித்துக்கொண்டு பிரயாணிகளிடம் ஓடுவார்கள்.

## 2

இதோ பாருங்கள், இவன்தான் கோஷி. இடுப்பில் ஒரு சுத்தமான கிழிந்த வெள்ளைத் துண்டு; எண்ணெய் என்றாலே

என்னவென்று கேட்கும் பரட்டைத் தலை; கையில் குவளை ஒன்று.

''ஸாரே! ஸாரே! வெள்ளம் வேணுமோ ஸாரே?''— ரெயில் வண்டியில் மூட்டைப் பூச்சிகள்போல் அடைந்து கிடக்கும் பட்டாளத்துக்காரர்களைக் கேட்கிறான் கோஷி, அவர்களுக்கோ இவனைக் கண்டதும் கடவுளைக் காண்பது போல் இருக்கிறது.

''டே, பொடியா! எங்கே, ஓடிப்போய்க் கொஞ்சம் கொண்டுவா!''

சற்று நேரத்திற்குள் அருகில் இருக்கும் குழாயில் போய்த் தன் குவளையைத் தண்ணீரால் நிரப்பிக்கொண்டு திரும்புகிறான். அதற்குப் பதிலாக அவர்கள் அவிழ்த்துச் சாப்பிடத் தொடங்கும் சோற்று மூட்டையிலிருந்து ஒரு கவளம் சோறு கிடைக்கிறது. அதுவும் தீர்ந்தவுடன், அவர்கள் கீழே எறியும் எச்சில் இலைகளாகக் காத்திருந்து, அதற்காக (நண்பர்களுடன்) உரிமைப் போராடி, கடைசியில் அதை எடுத்துக்கொண்டு மரத்தடிக்கு ஓடுகிறான்.

ஏதேனும் அந்த இலையில் 'கொஞ்ச நஞ்சம்' மிகுந்திருந்தால் உண்டு; இல்லையேல், பட்டாளத்துப் பசிக்கே பாதி கூடக் கட்டிவராத உணவாக இருந்தால், அந்த இலையை வெறுப்போடு பார்த்துவிட்டுத் தன்னைப் பின் தொடரும் நாய்களிடம் அதை வீசுகிறான்.

இது அவன் நடத்தும் தினசரி நாடகம்.

## 3

மனிதன் புலியையும், சிங்கத்தையும் நாளடைவில் பழக்கித் தனக்கு மண்டியிடச் செய்கிறான். ஆனால் பசி? நாளுக்கு நாள் அவன் அதனிடம் மண்டியிட வேண்டியதுதான்.

கோஷி ஒருநாள் முழுப்பட்டினி; ஒரு பிடிச் சோறு கூடக் கிடைக்கவில்லை. அதற்கு அடுத்த நாளும் அநேகமாக அப்படித்தான்; எச்சில் இலைகளையும் குழாய்த் தண்ணீரையும் கொண்டு தன்னைத் திருப்திப்படுத்திக் கொள்ள முயன்றான்.

மூன்றுவது நாள்; அந்தப் பாழாய்ப்போன நாளும், அதற்கு முந்திய நாட்களைப்போலவேயா விடியவேண்டும்?

செங்கோட்டை அவனுக்கு வெறுத்துவிட்டது, அந்தச் சந்திப்பையும் அங்கே குடியிருந்த மனிதர்களையும் ஒரு முறை வெறுப்போடு பார்த்தான். மேலே 'கா கா' என்று கூச்சலிட்டுக்கொண்டு காக்கைக் கூட்டமொன்று தன் கூட்டாளிகளுடன் எங்கோ கிடைக்கப்போகும் விருந்தை எதிர்பார்த்துப் பறந்தது. அவனும் ஒரு காக்கையாயித்தான் பிறந்தானு, கூட்டத்தோடு கூட்டமாய்ப் பறந்து சென்று கிடைத்ததைப் பகிர்ந்துகொள்ள? அல்லது இந்த நன்றி கெட்ட உலகத்திற்குத்தான் காக்கைக்கு இருக்கும் கருணை யில் கால்வாசிப் பங்கேனும் இருக்கிறதா?

ஒரு வழியும் இன்றி, தயாராய்த் திருவனந்தபுரம் கிளம்பிக்கொண்டிருந்த ரெயிலில் போய்த் தொத்திக் கொண்டான். ரெயிலும் ஊதிக்கொண்டு நகர்ந்தது.

## 4

''ஐயாவுக்கு ரெயில் பிரயாணம் இல்லாமல் சரிப் படவில்லையா!—ஏண்டா, செங்கோட்டையிலேயே உன்னை எத்தனை தரம் ரெயிலடிக்கு வராதேன்னு விரட்டியிருக் கிறேன்; காலிப்பயல்!''

'டிக்கட்' பரிசோதகனின் கையில் அகப்பட்டு, கோஷி யின் காது படாத பாடுபட்டது. நல்லவேளை, அது பிய்த்துக்கொண்டு ரத்தம் பெருகுவதற்குள் கோஷியின் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினுன் அவன். அப்போது வண்டி, மணிக்கு மூன்றேமுக்கால் மைல் வேகத்தில், மூச்சுத் திணறியபடி மலையைச் சுற்றி ஏறிக் கொண்டிருந்தது.

கீழே விழுந்த வலி தீர்ந்தவுடன், கோஷி எழுந்து பார்த்தான். வண்டி தூரத்தில் போய்விட்டது. மெதுவாய் நடக்க ஆரம்பித்தான். பாதையின் ஒரு பக்கத்தில் கிடு கிடு பாதாளம். அந்தப் பள்ளத்தாக்கில் எத்தனையோ

விதமான செடி கொடிகள் அடர்ந்து ஒன்றுடன் ஒன்று பின்னிக்கொண்டிருந்தன. அவைகளில் ஒன்றும் செழிப்பைக் காணவில்லை; எல்லாம் வாடிப்போய்க் கருகும் நிலையில் இருந்தன. மற்ருெரு பக்கத்தில் உயர்ந்த மலை; அதன் உச்சியிலும் அதைப் போன்ற காடுகளே.

காலம் கோடைக் காலம்; பொழுது உச்சிப் பொழுது. சூரியன் தலைக்கு நேரே இருந்து அவனைத் தொடர்ந்து கொண்டே வந்தான்.

நோயின் தற்கால சாந்திக்காகச் சில வைத்தியர்கள் ஏதாவது மருந்தை எப்போதும் கைவசம் வைத்திருப் பார்கள். கோஷியும் அதைப் போலப் பசிக்கு மாற்ருகச் சமய சஞ்சீவியாய்க் குளிர்ந்த நீரை வைத்திருந்தான். பசித் தொந்தரவுக்குப் பத்து நிமிடமாவது பதில் சொல்லு மல்லவா?

இப்போது அவன் குவளையில் தண்ணீரும் கிடையாது. கோடைக் காலமாக இல்லாவிட்டால் அந்தப் பிரதேசத்தில் தண்ணீருக்குத் தட்டில்லை. மலைப் பிளவுகளிலிருந்து கசிந்து நீர் சிறு சிறுவாய்க்கால்களாய் ஓடிக் கொண்டிருக்கும்.

அவன் வயிற்றைப் போலவே வறண்டு கிடந்தது சுற்று வெளி. அவன் மூச்சைப் போலவே அனலைப் பரப்பியது காற்று. அவைகளினூடே அவன் நடந்தான்.

## 5

சோற்றைக் காணுமல் சுருங்கிய வயிறு; தண்ணீரைக் காணுமல் தவிப்படங்கா நாக்கு; இவற்றுடன் அவன் மெல்ல மெல்ல நடந்து பக்கத்து ஊரின் ரெயிலடியை அடைந்தான். ரெயிலடி மிகச் சிறியது. அதிலிருந்து ஊர் வெகு தூரம்.

பக்கத்தில் வீடுகள் ஒன்றும் கிடையாது. ரெயில்வேச் சிப்பந்திகளின் வீடுகள்கூட அங்கே காணப்படவில்லை. இந்த நிலைமையில் அவன் அந்த ரெயிலடியின் ஓரத்தில் தண்ணீர்க்

குழாயைக் கண்டதும், வெகு ஆவலோடு, தன் பலமத்தனை யும் சேர்த்துக்கொண்டு அருகில் சென்ருன்.

குழாயில் தண்ணீர் இருந்தது, ஆனல் அது எளிதாகத் திருக வரவில்லை. பசிநோயால் படபடக்கும் கோஷியின் கைவிரலுக்கு அந்த வலுவேது?

குழாயருகில், மரத்தடியில் கவலையற்றுத் தூங்கும் கூலியை அதற்காக எழுப்பலாமா என்றுகூட அவனுக்கு ஆசை. ஆனல் கூலியின் கையில் அந்தத் தூக்கத்திலும் மறவாமல் பிடிபட்டிருக்கும் ஒரு மூங்கிற் குச்சியைக் கண்டதும், அவன் மனமும் முதுகும் அதற்குத் தயாராகவில்லை.

பிரயாணிகள் ஒருவர்கூட அன்றைக்குக் காணவில்லை. அவன் அதிருஷ்டம் அப்படி; அதே குழாயருகில் சோர்ந்து போய் உட்கார்ந்தான். அவன் நெஞ்சில் கடைசியாக ஒரு நம்பிக்கை.

சீக்கிரம் அந்த ரெயிலடிக்கு ஒரு ரெயில் வரும். வந்து சிறிது நேரம் நிற்கும்; அப்படி நிற்கும் ரெயிலிலிருந்து யாரேனும் தண்ணீர் குடிக்க வரமாட்டார்களா? அவர்களின் உதவி சற்று அவனுக்குக் கிடைக்காதா? இதுவும் அறைகுறை நம்பிக்கைதான். நிச்சயம் யாரும் வருவார்கள் என்று சொல்ல முடியாதே!

## 6

ரெயிலும் வந்தது. ஓர் ஆளும் இறங்கி வந்தார்; அவர் கையில் ஒரு வெள்ளிக் கூஜா. தம்முடைய பருமனை உடலைச் சுமந்து கொண்டு மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்கக் குழாயை நோக்கி ஓடிவந்தார்.

அவரது கைபட்டு நடுங்கியது இரும்புக் குழாய்; தண்ணீர் மடமடவென்று கொட்டியது. கூஜா நிரம்பும் சமயம்...

''ஸாரே! ரொம்பத் தாகம்; கொஞ்சம் வெள்ளட ஸாரே!''—இரு கைகளையும் தன் வாயருகில் வைத்துக் கொண்டு, குனிந்த வண்ணம் கெஞ்சும் கண்களால் அந்த மனிதரைப் பார்த்தான்.

அவ்வளவுதான், வந்தது கோபம் அவருக்கு. எப்படி இவன், அவசரம் தெரியாமல் அவரிடம் போய்க் கேட்கலாம்!

''இந்த ரெயில் உனக்குத் தவறிவிடப் போகிறதோ? கேலியா செய்கிருய்?—தடிப்பயல்!''

பாவம்! கோபம் தாங்காத மனிதர், குபீரென்று எடுத்த நீரை அவன் தலையில் சாய்த்துவிட்டு, மறுமுறை பிடித்துக்கொண்டு ரெயிலில் பாய்ந்தார். அவசரத்தை உணர்ந்தவர் அல்லவா?

புலம்பிக்கொண்டே ரெயில் புறப்பட்டது. கோஷி தன் அருகில் நின்று, தனக்காகச் சொட்டுச் சொட்டாய்க் கண்ணீர் வடிக்கும் குழாயைத் தீனமாய்ப் பார்த்தான். அவனே அறியாமல் அவன் கண்கள் நீரைக் கக்கின. அந்தக் கண்ணீராவது உருண்டு வந்து அவன் உதட்டை நனைத்ததா?

பலருக்கு அவன் தண்ணீர் கொடுத்திருக்கிருன். அவனுக்குக் கிடைக்கவில்லை.

அவன் பட்டினியால் செத்த செய்தி எந்தப் பத்திரிக்கையிலும் வெளிவரவில்லை. ஏனென்ருல், வங்காளத்தில் லட்சக் கணக்கில் செத்துக் கொண்டிருந்தவர்களைப் பற்றியே வெளியிட அவைகளில் இடமில்லாதிருந்தது.



# மேக சஞ்சாரம்

## 1

அழகான ஒரு மாலைப் பொழுதிலே, இரண்டு மேகங்கள் ஆணும் பெண்ணுமாய் அடிவானத்தை விட்டு மேலே எழுந்து வந்தன. அப்போதுதான் கல்யாணமான புது மணமக்கள் போலும்!

பெண்மேகம் தன்உடலில் கதிரவனின் ஏழு நிறங்களாலான வானவில் சிற்றுடை உடுத்திருந்தது. ஆண் மேகமோ பளபளக்கும் பொன்னொளியாலான ஜரிகைக் கரைப் பட்டாடையால் தன்னை அலங்கரித்திருந்தது. இரண்டும் ஒளி படர்ந்த ஆகாய வீதியில் ஒயிலோடு உலவி வந்தன.

பெண் மேகம் சொல்லியது:

''இதோ, கீழே பாருங்கள், இளவேனிற்காலத்தில் பூவுலகின் உள்ளம் எவ்வளவு தூரம் மலர்ந்திருக்கிறதென்று! ஓடும் நதியிடையே ஒய்யாரம், உயரும் மலையுருவில் உற்சாகம், ஆடும் மரங்களூடே ஆனந்தம். ஆஹா! மாயாவி வசந்தனின் அற்புத ஜாலங்களைப் பார்த்தீர்களா?''

''சரிதான்! அவனுடைய ஜாலத்தில் பூவுலகம் மட்டுமா மயங்கிவிட்டது? நீயும்கூட மயங்கிவிட்டாயே? இந்தக் கற்பனை பொங்கும் கவிதையெல்லாம் அந்தப் பொல்லாத இளவேனிலின் குறும்புத்தனத்தினால் அல்லவா உன்னிடமிருந்து பொங்குகின்றன? இவற்றை இத்தனை நாள் எங்கே ஒளித்து வைத்திருந்தாய்?''

பெண் மேகத்தின் மென்மலர் வதனம் நாணத்தால் சிவந்தது. இரு மேகங்களும் சிறிது நேரம் வாய் பேசாமல் ஊர்ந்தன. சுற்றுப் புறத்தின் மனமோகனப் புதுமை அவைகளுக்குள்ளேயும் புகுந்து, பேச்சுக்குப் புறம்பான மௌன இன்பத்தை நிலவச் செய்தது. தென்றலால் உந்தப்பட்ட

அவ்விரண்டும் இலேசாக அங்கும் இங்கும் ஆடியவாறே மிதந்தன.

மீண்டும் பெண்மேகமே மௌனத்தை கலைத்தது:

''இப்படியே மிதந்து மெதுவாய்த் திரிகூட மலைக்கு—குற்றாலம்—போய் வரலாம், வருகிறீர்களா?''

''திரிகூட மலை!''—ஆண் மேகத்தின் தேகத்தில் புத்துணர்ச்சி பரவியது. ''அந்தக் குற்றாலத்தைப் பற்றி நான் என் பாட்டியிடம் எத்தனை கதைகள் கேட்டிருக்கிறேன் தெரியுமா? ஆஹா! அந்த அழகான மலைக்கூட்டம், இவற்றை மூடிக்கிடக்கும் நானாவித மரங்கள் அடர்ந்த காடுகள், அந்தக் காடுகளையும் குன்றுகளையும் வளைத்துக்கொண்டு தாவிக் குதித்துச் சிரித்து ஓடும் அருவிகள்...''

வியப்போடு இதைக் கேட்டுக்கொண்டு வந்தது பெண் மேகம். தன் வர்ணனையை மேலே தொடர்ந்தது ஆண்.

''அங்கே வாழ்ந்து வந்த வனவேடர்கள், சித்தர்கள், கவிகள், ஞானிகள், பக்தர்கள்; இன்னும் கூட்டம் கூட்டமாய்ப் பறந்து செல்லும் எண்ணற்ற பறவையினங்கள் கண்விழித்து மேலே நோக்கும் நறுமண மலர்கள்...ஆஹா!''

மாலை நேரம் மங்கியது. ஒளியும் இருளும் ஒன்றையொன்று தழுவிக்கொண்டன. கடைசியாக இருள் தன் வைரமணி நீல வர்ணப் போர்வையால் ஒளியைப் போர்த்தி உறங்க வைத்தது.

மேகங்கள் இரண்டும் மெய்ம்மறந்த தேன் மொழிகளில் தங்களை மறந்து மேலே மேலே போய்க்கொண்டிருந்தன. பகல் இரவாகியதைப் பற்றியும், பூவுலகில் வசந்தனின் கோலக் காட்சிகள் கண்ணுக்கு மறைந்ததைப் பற்றியும் அவை கவலை கொள்ளவே இல்லை. அவற்றின் கவனமெல்லாம் இப்போது குற்றாலத்தின் வரவை நோக்கி இருந்தது.

## 2

மதியநேரம். உச்சிப்பொழுது சூரியன் தலைக்கு நேரே உமிழ்ந்தான். மேகத் தம்பதிகள் குற்றாலத்தின் அருகே

வந்து கொண்டிருந்தன. அவை அருகில் வரவர அவைகளைப் போலவே குற்றாலத்தை நோக்கி இன்னும் வேறு மேகங்களும் கூட்டம் கூட்டமாய் வந்து கொண்டிருந்தன. அந்தக் கூட்டங்களுள் இளைஞர், பருவமங்கையர், முதியோர்,சிறுவர் சிறுமி எத்தனையோவிதம்.

இந்தத் தம்பதிகளைப் பார்த்து இளைஞர் கூட்டம், ''என்ன அழகான சேர்க்கை!'' என்று வியந்து கொண்டது. மங்கையர் கூட்டமோ, ''இவர்களைப் பாருங்களேன்! இத்தனை பேர் மத்தியில் சிறிதுகூட நாணமில்லாமல் சிரித்து விளையாடிக் கொண்டு போகிறார்கள்!'' என்று உள்ளுக்குள் பொறாமைப் பட்டுக் கொண்டது. பொதுவாக எல்லா முகில்களுமே ஒரு கணம் தம் கண்ணோட்டத்தை இவற்றின் மேல் செலுத்தாமல் இல்லை.

வயது சென்ற பாட்டிமேகமொன்று அருகிலே வந்து, ''நீங்கள் எந்த ஊரிலிருந்து வருகிறீர்கள்? உங்களுக்கு எப்போது கல்யாணம் ஆயிற்று? குழந்தை குட்டிகள் இன்னும் பிறக்கவில்லையா?'' என்ற குடும்ப நலனை விசாரித்தது, மற்றொரு கிழட்டு மேகமோ, ''குழந்தை வரத்திற்காகத்தான் குற்றாலநாதனைத் தரிசிக்க வந்திருக்கிறார்கள்; இது தெரியவில்லையா உனக்கு?'' என்று பரிகாசத் தொனியோடு அதற்குப் பதிலளித்தது. இவைகளின் கேள்விகளுக்கு விடை சொல்வதற்குள் பெண்மேகத்தின் பாடு போதும் போதுமென்று ஆகிவிட்டது. 'ஏனடா இவர்கள் கண்ணில் பட்டோம்?' என்று தோன்றியது.

ஒரு வழியாய்க் குற்றாலம் நெருங்கிக்கொண்டே வந்தது. அவைகளும் கண் இமைக்காமல் அந்தத் திக்கைப் பார்த்துக் கொண்டே வந்தன. மலைகள் தெரிந்தன. காடுகள் தெரிந்தன. மலர்களின் மணம் மனத்தை நிரப்பியது. அருவிகளின் ஓசை செவியில் பாய்ந்தது. பறவைக் கூட்டங்கள் 'ஜிவ் ஜிவ்' என்று சிறகடித்துப் பறந்தன. குளிர்ந்து தவழ்ந்த தென்றல், தான் சுமந்து வந்த தேன் துளிகளை அந்த இளம் மேகங்களின் கீழுதடுகளில் படியவிட்டு வர

வேற்றது. இன்னும் என்னவோ அற்புதக் காட்சிகளெல்லாம் தோன்றின, ஆனல்?

ஆண்மேகம் ஊன்றிக் கவனித்தது. அதன் முகத்தில் சந்தேக ரேகைகள் படர்ந்தன. அந்த இடத்தைச் சுற்றி யுள்ள சமவெளியில் அதன் பார்வை கூர்மையுடன் ஊடுருவி யது. அங்கே புதிது புதிதாக முளைத்திருந்த பங்களாக்களும் அவற்றைச் சூழ்ந்திருந்த பூந்தோட்டங்களும் இப்போது அங்கே தெளிவாகத் தெரிந்தன.

பெருத்த ஏமாற்றத்தில் அது மூழ்கியது. அதன் நெற்றி யில் கேள்விக் குறிபோல் ஒரு சுருக்கம் தோன்றியது.

## 3

ஆனல்......?

அந்த மேகம் நினைத்தது. விடுதலைக் காற்றால் நெஞ்சு விம்மிக் கட்டற்ற காளையர்களாய்த் திரியும் வன வேடர்கள் எங்கே? ஐம்புலன்களையும் வென்று வெற்றியொளி முகத்தில் ஒளிர, நிகரற்ற மனவலியோடு நடமாடும் ஞானிகள் எங்கே? அற்புத அற்புதமான திருவிளையாடல்கள் செய்து உலகத்தின் போலி வேடதாரிக் கூட்டத்தை நகைத்துப் புடைக்கும் சித்தர் குழு எங்கே? மாசற்ற பக்தியுடன் பர மனைப் பாமாலையாலும் பூமாமாலையாலும் பூசித்து, அன்பு வெறியால் மெய்ம்மறந்து நடமாடும் பக்த சிரோமணிகள் எங்கே? முள்ளையும் கல்லையும் பாராது வனமெல்லாம் சுற்றி யலைந்து நல்மூலிகை கொண்டுவந்து மாந்தரின் உடற்பிணி போக்கும் யோகியர்கள் எங்கே? நம் மூதாதையர் காலத் துடன் இவர்கள் போய்விட்டனரா? இவர்களுக்குப் பதி லாகவா இங்கே இந்த மாளிகைவாசிகள்?

மாளிகைவாசிகளைப் பற்றி நினைத்தவுடன் ஆண் மேகத் தின் உடலெங்கும் தீப்பற்றி எரிவதுபோல இருந்தது. அவர் களுடைய ஆடம்பர வாழ்க்கையும் குடியும் கூத்துக் களும், சூதுவாதுகளும் அதற்கு ஏற்கனவே தெரிந்திருந்தன. அவர்களைப் போன்ற ஒருசிறு கும்பல் உலகில் இருப்பதால்

கோடிக் கணக்கான ஏழைகள் கோவணத்துணிகூட இல்லாமல் அநாதைகளாகத் தெருத்தெருவாய் அலைந்து திரிவதை அது பார்த்திருக்கிறது. அரை வயிற்றுக்குப் போதுமான கஞ்சி இல்லாதபோது அந்த ஏழைகள் போட்ட அழுகுரல் வானில் எழும்பி, அதன் காதுகளில் சுழன்றிருக்கிறது. ஆதலால் அதற்கு இப்போது என்ன செய்வதென்றுதோன்றவில்லை.

''பணக்காரர்களின் உல்லாசபுரியாகவா மாறிவிட்டது இன்றைக் குற்றாலம்?'' என்று ஒரு முறை உறுமிவிட்டு சற்று தன்னைச் சாந்தப்படுத்திக் கொண்ட பின்பு, ''அன்பே!' என்று தன் துணைவியை அழைத்தது.

''ஏன்?'' என்றது இன்குரலால் பெண்.

''உண்மை அறியாத நம் இனத்தவர் ஆண்டுதோறும் கோடைக்காலத்தில் இங்கே வந்து மழை பொழிகிறார்கள்; அருவியில் நீரை நிரப்புகிறார்கள். அதை யார் அனுபவிக்கிறார்கள் என்று அவர்கள் கவனிப்பதில்லை; அதனால் சுகமடைகிறவர்களைப் பற்றியும் அவர்களுக்கு அக்கறை இல்லை. அவர்கள் செய்யும் பிழையையே நாமும் செய்யவேண்டாம். நமக்கு வேறு இடத்தில் வேலை இருக்கிறது. வா, போகலாம்'' என்றது.

மகிழ்ச்சியுடன் கணவனைப் பின்பற்றியது மனைவி. இரு மேகங்களும் கொதிப்புடன் திரும்புவதை மற்ற எல்லா மேகங்களும் கவனித்தன. அதன் காரணத்தையும் தெரிந்து கொண்டன. இத்தனை காலமாய்த் தாங்கள் செய்துவந்த பிழைக்காக வருந்தி உடனே யாவும் ஒன்று சேர்ந்து அந்த இளம் தம்பதிகளைப் பின் தொடர்ந்து சென்றன.

திரண்டெழுந்த கார்முகிற் கூட்டத்திற்குத் தலைமை வகித்து அந்த இளமேகம் காடும் மலையும், வன வனந்தரங்களும் தாண்டி அந்த முகில்களை அழைத்துச் சென்றது. பெரிய பெரிய பட்டணங்களிலே, பாட்டாளி மக்கள் இயந்திரசாலைகளில் இயந்திரம் போல பாடுபட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களின் பெருமூச்சுகளைக் கரிய புகையுடன் கலந்து வெளியே தள்ளிக் கொண்டிருந்தன புகை போக்

கிகள். அதற்கப்புறம் கிராமாந்தரங்களும் அவற்றிலுள்ள குடிசைகளும் தென்பட்டன. பாளம் பாளமாய் நீர் இல்லாமல் வெடித்துக் கிடந்த வயல் வெளிகளில் நின்று பஞ்சைக் குடியானவன் பரிதவித்தான். அவன் கண்கள் நிராசையோடும் ஏக்கத்தோடும் மேகத் திரளைப் பார்த்து வெறித்தன.

அவனைப் பார்த்துவிட்ட ஆண்மேகம் மகிழ்ச்சியோடு முழங்கியது.

''இதோ, நாம் செய்ய வேண்டிய கடமையை நமக்கு நினைப்பூட்டி நமக்காகக் காத்து நிற்கிறான் ஏழை. இது வரையில் நாம் உல்லாசப் பொழுது போக்குக்காக மழை பொழிந்தோம்; இனிமேல் உண்ணவும் உடுக்கவும் மழை பொழிவோம்!''

அதனுடைய குரலில் இன்பம் ஒலித்தது; எழுச்சி குதித்தது ''என்ன உயர்ந்த நோக்கம்!'' என்ற நினைவுதான் மேகங்களின் உள்ளத்தே பளிச்சிட்டது. உடனே எல்லா மேகங்களும் மகிழ்ச்சி ஆரவாரம்செய்து மின்னல் மின்னின, இடி இடித்தன; அமுதப் பிரவாகம் பொழிந்தன. இதைக் கண்டு கோவணாண்டியான குடியானவன் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்க வானை நோக்கிக் கைகூப்பினான். ஆனால் அதே சமயத்தில் குற்றாலத்தில் கோடைக்காக வந்த கோடீசுவரன் ஒருவன், ''இதென்ன இது? இந்த சாரலுக்கு மழையே காணவில்லையே; மனிதன் வெந்து சாம்பலாய்ப் போய்விடுவான் போல இருக்கிறதே!'' என்று முணு முணுத்தான்.



# நான்

இருள்; எங்கும் இருள்; ஒரே இருள்!- நான் பிறந்தேன். அப்போதும் இருள். சிறு பிள்ளையாய் வளர்ந்தேன்; அப்போதும் இருள். இன்று இளைஞனாகிவிட்டேன்; இன்றும் இருள்!

இந்தப் பொல்லாத இருளைப்பற்றி எனக்கு ஒரு சந்தேகம்; நான் பிறந்து வளர்ந்து, வாலிபனாகிவிட்டேனே, என்னைச் சுற்றியுள்ள இந்த நாடு முழுவதுமே இருள் மயமா? அல்லது, என் கண்கள்தாம் ஒளியிழந்துவிட்டனவா?

என் ஐயம் தீர்ந்த பாடில்லை.

நாடு முழுவதுமே ஒருவேளை இருள் கடலில் மூழ்கியிருக்கலாம். அல்லது நானே குருடனாகவும் இருக்கலாம். இவை இரண்டுமே ஏன் உண்மையாக இருக்கக்கூடாது? ஒளியற்ற உலகம்; அதில் ஒளியற்ற மனிதன்.

நான் இருளிலே தட்டுத் தடுமாறித் திரிந்தேன். கையில் ஒரு கோல்இல்லை. வழி நெடுகக் கிடந்த பள்ளம் படுகுழிகளில் விழுந்து மீண்டும் வெளியேறிச் செல்ல வகையறியாது தவித்தேன்.

பாதையில் குறுக்கிட்ட கருங்கற் பாறைகள் என்னை மோதிக் கீழே தள்ளின. உயிரற்று, உணர்வற்று, உடலிலும் உள்ளத்திலும் ரத்தம் சொட்டத் தெருப் புழுதியில் சாய்ந்து கிடந்தேன். எழுந்து செல்லக் கரங்களை ஊன்றி முயன்ற போது அவை வலுவிழந்து ஒடிந்தன. அருகில் ஏதேனும் பிடிப்பு அகப்படுமா எனத் துழாவினேன்; கைக்குக் கிடைத்தது ஒரு பொருள். ஆனால் அது ஒரு பாம்பு!

* * *

என் உலகத்தில் ஒரு மாறுதலைக் கண்டேன். அல்லது என் கண்களின் மாறுதலா என்றும் தெரியாது. எங்கு நோக்கினும் சின்னஞ்சிறு ஒளிச்சுடர்கள் கூட்டங் கூட்ட

மாய்ப் பறந்து திரிந்தன ஏன் நானே அத்தகைய ஓர் ஒளிச் சுடராக மாறிவிட்டேன்! அப்போது எனக்கு எவ்வளவு ஆனந்தம் தெரியுமா?

ஒளித்திரள் கூட்டங் கூட்டமாய் வந்தன; கூட்டங்கூட்ட மாய்ப் பறந்து திரிந்தன; கூட்டங் கூட்டமாய் அணைந்து மடிந்தன! ஆனல், ஓர் ஒளிச் சுடராவது அணையாமல் போவதை நான் பார்க்கவில்லை. நானும் அப்படித்தானே? ஒரு நாள் யாருக்கும் ஓர் உதவியும் இன்றி அணைந்து விடு வேன்.

இது எனக்குப் பிடிக்கவில்லை.

ஒளிச்சுடர் என்று என்னைப் பெருமைப்படுத்திக் கொண் டேனே, அப்போது நான் யார் தெரியுமா? ஒரு மின்மினிப் பூச்சி! சாதாரண அற்பப் புழு!

அந்தப் புழுக்கள், அவைகளில் குறுகிய வாழ்நாளைக்குள் என்ன பெருமையடித்துக்கொண்டன தெரியுமா? ஒவ் வொன்றும் தான்தான் உயர்ந்தது, தனக்குத்தான் உலகம், தன் கூட்டந்தான் வாழலாம்—அப்பா, அவை பீற்றிக் கொண்ட பீற்றல்! அது மட்டுமா? அவைகளின் பொய்கள்—பித்தலாட்டங்கள், பொருமைகள், போட்டிகள், போர்கள்!

மின்மினிப் பூச்சிகளின் ஒரு பகுதி மற்றப் பகுதிகளின் கொடுமைக்குள்ளாக்கப்பட்டது. ஒடுக்கப்பட்ட அவைகள் நிலைமை தாளாமல் அழுதன, ஓலமிட்டன, கதறின, கண்ணீர் வடித்தன, சீறி எழுந்தன.

'இந்த உலகத்தில் நாங்களுந்தானே பிறந்தோம்? எங்களுக்குப் பறந்து திரிய உரிமை இல்லையா? உண்டு களிக்க உரிமை இல்லையா? கூடிப் பேச உரிமை இல்லையா?' என ஏங்கித் தவித்தன.

எனக்கு இந்தக் கூட்டம் பிடிக்கவில்லை. ஏதோ ஒரு திக்கை நோக்கிப் பறந்துகொண்டே இருந்தேன்; கடைசி யில் சிறகுகள் வலி எடுத்ததால் ஒரு மணல் திட்டில் உட் கார்ந்தேன். உட்கார்ந்து கொடுமை நிறைந்த இந்தப் புழுக்களின் கூட்டத்தை நினைத்து ஒரு முறை அழுதுவிட்டு யோசனை செய்தேன்.

என் யோசனை ஆரம்பமாகியது.

'கோடிக்கணக்கான புழுக்களின் கூட்டத்திலே நானும் ஒரு புழுவாக நெளிந்து அவைகளின் வெளி மினுக்கிலும் ஆடம்பரத்திலும் அடிமைத்தனத்திலும் கலந்து மடிய விரும்பவில்லை. உண்மைக்குக் கிஞ்சித்தேனும் இடமில்லாத இந்த மாய்மாலக் கும்பலைவிட்டு நான் தனித்து நிற்க வேண்டும். தனித்து நின்று என் சக்தியை எல்லாம் ஒன்று திரட்டித் துன்பத்திற்குள்ளாகிய உயிர்களின் கண்ணீரைத் துடைக்க வேண்டும்—ஆம், சக்திக்கு எங்கே போவது?'

நான் குழம்பிவிட்டேன்; எங்கிருந்தோ இந்தச் சமயத்தில் இருளைக் கிழித்துகொண்டு ஓர் ஒலி பிறந்தது. இடிமுழக்கம்போன்ற அவ்வொலியைக் கேட்டுத் திகைத்தேன்.

அவ்வொலியின் வாக்கியங்கள் இவைதாம்:

''உன் ஒளி உன்னிடம் உள்ளது; நீ எழுந்து சுடர்விடு!''

ஒலி பிறந்த வழியே ஒளியும் பிறந்தது. நான் வியப்போடு கண்களை மலர விழித்து நோக்கினேன். தூரத்து வானிலிருந்து ஒரு தாரகை என்னை இரக்கத்துடன் பார்த்துச் சிரித்தது.

''உன் குரல்தானா சற்று முன்பு ஒலித்தது? நீ யார்?'' என்றேன்.

''நானா?—நான் ஏசு கிறிஸ்து.''

என்ன ஆச்சரியம்! இப்போது ஒரு நட்சத்திரமாக இல்லை; தாடியும் மீசையும் வளர்ந்த ஒரு தெய்வீக மனிதனாக மாறிவிட்டது. அதன் கைகளும் கால்களும் சிலுவையில் அடிக்கப்பட்டு ரத்தம் பொங்கி வழிந்தது. அதன் இதழ்களில் அன்பின் அறிகுறியான புன்னகையா!

''ஏன் உனக்கு இந்தத் தண்டனை?'' என்றேன் பயத்துடன்.

'உலகத்தின் போக்கைக் கண்டு மனமிரங்கி, அதற்குத் தொண்டு செய்யக் கிளம்பியதற்குத்தான்! பணியின் பாதை எவ்வளவு கடினமானது. அதற்காகக் கிடைக்கும் பிரதி பலன் என்ன வகையானது என்று தெரிந்துகொள்.''

''இவ்வளவு துன்பத்திலும் உனக்கு ஏன் அந்தப் புன்னகை?'' என்றேன்.

''துன்பமா? எனக்கா துன்பம்? இல்லை; இந்தத் துன்பமெல்லாம் மற்றவரின் இன்பத்திற்காக என எண்ணும் போது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா?''

''அப்படியானால் இதோ நானும் தொண்டின் பாதையில் செல்கிறேன்'' என்று கிளம்பினேன். ஆனால் அது நடக்கிற காரியமாமில்லை. என்னைப்போன்ற சகோதர மின்மினிகளின் கூட்டம் என்னைத் திரும்பவும் வந்து சூழ்ந்து கொண்டது.

''ஏன் உனக்கு இந்தப் பைத்தியக்காரக் கனவெல்லாம்? எங்களுடன் பறந்து வா! இருப்பவற்றை முடிந்த மட்டும் அனுபவித்துவிட்டுக் குதூகலமாய்த் திரிவோம்; யார் எப்படி இருந்தால் நமக்கென்ன? உம்; எழுந்துவா?'' எனப் பின்னுக்கு இழுத்தன.

அவைகளுடன் நான் இதுவரையில் பழகிவிட்டேன். அவைகளின் ஆசாபாசங்கள் அத்தனைக்கும் நானும் பாத்திரமாக இருந்திருக்கிறேன்; அவைகளை முழுவதும் விட்டுப் போகவும் எனக்கு மனம் இல்லை--இதுதான் இந்த மாய மனத்தின் விசித்திரம்!

ஆனால், அந்த நட்சத்திரம் கூறியதே அந்தப் பாதை.

மீண்டும் ஒரு குழப்பம். நான் மின்மினிக் கூட்டத்துடன் கலந்து இருளில் சென்று மறையப் போகிறேனா? அல்லது ஒளியைப்பற்றி வானத்துத் தாரகைகளில் ஒன்றாய் மின்னி உலகத்திற்கு வழி காட்டப் போகிறேனா?

விடுதலை எதில் கிடைக்கும்?



# காசு மரம்

## 1

பணக்கார வீட்டு எலி, பூனைகளுக்கு மாத்திரமல்ல இன்னும் அவர்களுக்குச் சொந்தமான மேஜை நாற்காலி தட்டுமுட்டுச் சாமான்கள் முதலிய யாவற்றிற்குமே ஒரு செல்லப் பெயர் வைத்து அழைப்பது அவர்களுடைய பெருமைக்குரிய வழக்கங்களில் ஒன்ருக இருக்கிறது.

எங்கள் ஊர்க் குடியானவர் தெரு மூலையில் குடியிருக்கும் 'கோடி வீட்டு நாகம்மாள்' அந்தப் பணக்கார வர்க்கத்தைச் சேர்ந்தவளல்ல. பிரபுக்களது வாழ்க்கையில் மலிந்து கிடக்கும் குபேர போகங்களைப்பற்றி அவள் கனவு கூடக் கண்டதில்லை. ஆனுல், அவளுக்கும் மேற்கூறிய பிரபு வர்க்கத்தினருக்கும் ஒரே ஒரு வகையில் மாத்திரம் ஒற்றுமை இருக்கத்தான் செய்தது. தன்னுடைய வீட்டுக் கொல்லையில் வளர்ந்திருந்த ஒரு சிறு மாங்கன்றிற்கு அவள் 'காவேரி' என்று பெயர் வைத்திருந்தாள்.

நாகம்மாளுக்கு இப்போது ஏறக்குறைய நாற்பது வயதாகிறது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்புதான், கண்டிச் சீமைக்கு ஓடிப்போயிருந்த அவளுடைய கணவன் சுப்பையாவும் சொந்த ஊருக்குத் திரும்பி வந்திருந்தான். அவன் வீட்டிற்கு வந்ததிலிருந்து அவளுக்குச் சிறிது சாப்பாட்டுக் குறை நீங்கியது. கண்டியிலிருந்து கொண்டு வந்த பணத்தை நன்செய் நிலத்தில் போட்டுவிட்டு அதன்வரும்படியால் இரண்டு பேரும் சிரமமில்லாமல் காலந்தள்ளிஞர்கள்.

நாகம்மாளும் சுப்பையாவும் கருக்கிருட்டு வேளைகளில் எத்தனையோ முறை தங்கள் வீட்டுக் கொல்லையில் தனிமையாக உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்திருக்கிருர்கள். அப்போ

தெல்லாம் அவர்கள் தங்களுடைய மாங்கன்றாகிய காவேரியின் நிழலில்தான் உட்கார்ந்து பேசுவது வழக்கம்.

பேச்சு முடிந்து இருவரும் வீட்டிற்குத் திரும்பும்போது நாகம்மாள் ஒருவிதமான சோகம் கலந்த பார்வையுடன் தன்னுடைய காவேரியை உற்று நோக்குவாள். உடனே வெப்பம் கலந்த பெருமூச்சொன்று அவளுடைய மார்பை விம்மச் செய்துகொண்டு சீற்றத்தோடு வெளியே வரும். ''அம்மா காவேரி! விளக்குவைக்கிற நேரமாச்சு; வீட்டுக்குப் போய் வேலையைப் பார்க்கணும்; பத்திரமா இருஅம்மா'' என்று அதனிடம் விடைபெற்றுக்கொண்டு வீட்டிற்குள் நுழைவாள்.

## 2

பத்து ஆண்டுகளுக்கு முன்பு, அபபோது நாகம்மாளின் வயிற்றிலே காவேரி ஒன்பது மாதச் சிசுவாயிருந்தாள். கிராமத்தில் பஞ்சம் பொறுக்க முடியாததாக இருந்தது, வெகு நாளாகச்சேர்ந்தாற்போல் வானம் மழை பெய்யாததால் நிலபுலங்களெல்லாம் வறண்டு போய் புழுதி படிந்து கிடந்தன. குடும்பத்தைச் சமாளிக்க முடியாமல் இரவோடு இரவாய் ஊரைவிட்டுக் கிளம்பிச் சம்பாதிப்பதற்காக அக்கரைப் பிரதேசத்திற்குப் புறப்பட்டு விட்டான் சுப்பையா.

காவேரி பிறந்து இரண்டு வருடம் வரையில் நாகம்மாள் தன் பெயரில் இருந்த ஒரு காணி நிலத்தையும் விற்று, அதைக்கொண்டு காலம் தள்ளி வந்தாள். அந்தப் பணமும் அவளுக்கு அதற்குமேல் கட்டி வரவில்லை.

கணக்கப்பிள்ளை ராஜமையர் வீட்டில் அவளுக்கு மூன்று ரூபாய்ச் சம்பளத்தில் ஒரு வேலை கிடைத்தது. அதிகாலையில் எழுந்து சென்று அவருடைய வீட்டைக் கூட்டி மெழுகிக் கோலமிட்டுப் பாத்திரம் பண்டங்களை விளக்கிக் கொடுத்து மற்ற எடுபிடி வேலைகளையும் செய்து வந்தாள். சம்பளப் பணமும், அவர்கள் தினந்தினம் கொடுத்துவந்த பழைய கறி, சாதம், குழம்பு முதலிய பொருள்களும்

நாகம்மாளின் அரை வயிற்றைக் கழுவப் போதியனவாக இருந்தன.

அந்த வருமானத்திலும் ஏதோ ஒரு பகுதியை வெகு சிரமத்தோடு மீதம் பிடித்து, அதனல் தன்னுடைய குழந்தை காவேரிக்கு விதவிதமான உடுப்புக்கள் வாங்கிப் போட்டு மகிழ்ந்து வந்தாள் நாகம்மாள். தான் வேலை பார்த்து வரும் வீட்டிலுள்ள பிராம்மணக் குழந்தைகளைப் போலவே தன்னுடைய குழந்தையும் வளர்ந்து வரவேண்டு மென்பது அவளது மனதில் இருந்த அந்தரங்க ஆவல்.

காவேரிக்கு வயது வளர்ந்து கொண்டு வந்ததைப் போலவே தாயின்மேல் அளவுக்கு மீறிய பாசமும் வளர்ந்து கொண்டு வந்தது. தகப்பன் என்ற ஒருவன் உயிரோடு இருக்கிருனு இல்லையா என்பதைப்பற்றி அவள் சிறிதேனும் அக்கறை எடுத்துக்கொள்ளவில்லை. அந்த மாதிரி ஒரு விபரீத ஏக்கம் தன் மகளுக்கு ஏற்பட்டுவிடக் கூடாதென்பதற்காக நாகம்மாள் காவேரியைக் கவலையோடு கவனித்து வந்தாள்.

ஒரு நாள் மாலையில் பள்ளிக்கூடம் கலைந்த பிறகு காவேரி ஒரு கையில் புத்தகத்துடன் மற்ரெரு கரத்தில் பாவாடையைப் பிடித்துக்கொண்டு வீட்டை நோக்கிப் பரக்கப் பரக்க ஒடி வந்தாள். வீட்டின் வெளிப் பக்கத்துத் திண்ணையில் அழுதுகொண்டு உட்கார்ந்திருந்த அவளுடைய தாயைப் பார்த்தவுடன் காவேரியின் பரபரப்பெல்லாம்ஒரே திகிலாக மாறிவிட்டது. சற்று நேரம் கவலையோடு தாயையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, ''என்னத்துக்காகம்மா அழுகிறே?'' என்ருள் கொஞ்சலாக.

கண்களைச் சேலை முனையால் துடைத்துக்கொண்டே ''ஒண்ணுமில்லேடி கண்ணு'' என்ருள் தாய்.

''ஊஹூம்! எதுக்காகன்னு சொன்னுத்தான் உன்னை விடுவேன்'' என்று சொல்லிக்கொண்டே நாகம்மாளின் மார்பில் பாய்ந்து அவளை இறுகக் கட்டிக்கொண்டாள் காவேரி.

குழந்தையின் உடல் தாயின் மேல் பட்டவுடன் அவளுடைய மனம் சற்று நிம்மதியடைந்தாற்போல் தோன்றியது,

''எனக்கு இனிமே வேலே கிடையாதம்மா காவேரி; ஐயரை வேறே ஊருக்கு மாத்தியாச்சு; அவுங்க வீட்டிலே எல்லாரும் ஊருக்குக் கிளம்புறுங்க'' என்றுள்.

''அதுக்காக நீ ஏம்மா அழுகிறே? ஐயர் வீட்டிலே வேலே யில்லாட்டி, நீ இங்கேயே இருந்து என்னைப் பார்த்துக் கோயேன்! நான் பள்ளிக்கூடம் போய்ப் படிச்சுட்டுச் சுருக்க சுருக்க வீட்டுக்கு வந்திடறேன்; அப்புறம் நம்ப ரெண்டு பேரும் நம்ப வீட்டு வேலையைப் பார்ப்போம்...''

நாகம்மாளுக்கு அழுகையோடு அழுகையாய்ச் சிரிப்பு வேறு வந்துவிட்டது. ஆர்வம் தாங்காமல் குழந்தையை இரண்டு கைகளாலும் சேர்த்து அணைத்துக் கொண்டு உச்சி மோர்ந்தாள். ஆனந்த மிகுதியால் அவளுடைய தாயுள்ளம் பூரிப்படைந்தது.

''கவலேயெல்லாம் மறக்கறத்துக்காக எனக்குக் காவேரியை கொடுத்திருக்கானே கடவுள்; அது ஒண்ணே போதும், இந்தப் பாவம் செய்த கட்டைக்கு'' என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டாள்.

நாளுக்கு நாள் நிலேமை மோசமாகிக் கொண்டே வந்தது. தங்களுடைய வாழ்வுக்கு நாகம்மாளால்ஒருவிதமான வழியும் கண்டுபிடிக்க முடியவில்லே. காரணம் தெரியாத கவலேகளும் எதைக் கண்டாலும் வெறுப்பும் அவளுக்கு அதிகமாயின. வெகு நாள் சிரமப்பட்டு அலேந்து விரக்தி அடைந்த பிறகு, தோப்பு மேஸ்திரியின் மனேவி அவளேத்தன் வீட்டில் வேலேக்கு அமர்த்திக் கொண்டாள்.

மேஸ்திரியின் வீட்டிலிருந்து சம்பளந்தான் ஐந்துரூபாய் கிடைத்து வந்ததே தவிர வேறு விதமான மேல் வரும்படி ஒன்றையும் நாகம்மாளால் எதிர்பார்க்க முடியவில்லே. உள்ள வருமானத்தைக் கொண்டு அப்படியும் இப்படியுமாகக் காவேரியுடன் பொழுதை ஓட்டி வந்தாள்.

பள்ளிக்கூடத்திற்குப் புறப்படப் போகும் சமயத்தில் தினந்தோறும் காவேரியின் கையில் காலணுக் கொடுத்து அனுப்புவது நாகம்மாளின் வழக்கம். கணக்கப்பிள்ளே வீட்டு வேலே தொலேந்துபோன பிறகு நாள் ஒன்றுக்கு ஒரு

பைசாவாவது கொடுத்து வந்தாள். அந்தக் காசைச் குழந்தை எவ்விதம் செலவு செய்கிருள் என்பதைப்பற்றி அவள் கவலே கொள்வதில்லே.

'மற்ற பிள்ளேகளேப் போலத்தானே ஏதாவது மிட்டாய் வாங்கித் தின்னப் போகிருள்?' என்று நினேத்தாள்.

ஆனுல், காவேரி தினமும் மிட்டாய்க்காரனிடம்காசைக் கொடுப்பதில்லே; எப்போதாவது இரண்டொரு நாளேத் தவிர மற்ற நாட்களிலெல்லாம் அன்னேகொடுக்கும் காசுகளே அவளுக்குத் தெரியாமல் ஒரு மண் கலயத்தில் போட்டுவைத்திருந்தாள்.

ஒரு நாள் நாகம்மாளின் கையில் தம்படிக் காசுகூட இல்லே. 'நாளேக்குத் தருகிறேன்' என்று சொல்லி காவேரியைப் பள்ளிக்கு அனுப்பிவிட்டாள். அடுத்த நாளும் அவளால் கொடுக்க முடியவில்லே. காவேரிக்குக் கோபம் கோபமாய் வந்தது; மனத்திற்குள்ளேயே பொருமிக் கொண்டு பதில் பேசாமல் படிக்கச் சென்று விட்டாள். மூன்ருவது நாள் வந்தபோது, 'எப்படியாவது இன்றைக்கு அம்மாவிடமிருந்து காசு வாங்கிவிட வேண்டும்' என்று காவேரிக்குத் தோன்றியது தாயை நச்சுப்படுத்திஞள். இரண்டு நாளாகக் கிடைத்து வந்த அதே 'நாளேக்கு' என்னும் பதில்தான் அன்றைக்கும் கிடைத்தது. காவேரியால் இந்த ஏமாற்றத்தைப் பொறுக்க முடியவில்லே.

''போ, அம்மா நீ என்னிக்குக் கேட்டாலும் நாளேக்கின்னே பொய் சொல்றே'' என்ருள் முகத்தைச் சுளித்துக் கொண்டு.

நாகம்மாளின் நினேவு அப்போதும் எங்கேயோ இருந்ததால் குழந்தை குறுக்கே பேசுவதைச் சகிக்காமல், ''என்ன காவேரி, ஏன் தொந்தரவு செய்யறே? காசு காசுன்னு தினம் வம்பு பண்ணிஞ, நான் காசுக்கு எங்கே போகிறது? நம்ப வீட்டிலே காசு மரமா முளேக்குது?'' என்று பொறுமையில்லாமல் குழந்தையின்மேல் எரிந்து விழுந்தாள்.

தன் தாய் தன்னிடம் இவ்வளவு வெடுவெடுப்பாகப் பேசி காவேரி ஒருநாள் கூட கேட்டதில்லே.

தன்னால் எவ்வளவு எண்ணங்களை ஒரே சமயத்தில் எண்ணிப் பார்க்க முடியுமோ அவ்வளவு எண்ணங்களையும் எண்ணிக்கொண்டே, அவள், பள்ளிக்கூடத்தை நோக்கி ஊர்ந்துசென்றாள். அவளுடைய மனம் அன்றைப் பாடத்தில் ஊன்றவேயில்லை; பக்கத்துப் பிள்ளைகளின் பேச்சுக்குக்கூடப் பதில் சொல்லாமல் சுவரோடு சுவராய்உட்கார்ந்திருந்தாள்.

கோபம் சற்றுத் தணிந்தவுடன் தாயின் மேல் இருந்த வெறுப்பு முழுவதும் காவேரிக்கு அனுதாபமாக மாறி வந்தது.

'அம்மாளிடம் காசில்லை பாவம்! காசுக்கு அவள் எங்கே போவாள்? காசு முளைக்கிற மரம் அவளிடம் இருந்தால் தானே......? அந்த மரம்மட்டும் இருந்திருந்தால் நமக்கு ரொம்பகாசுக்குப் பஞ்சமே இல்லை. ரொம்பக்காசு தருவாள்; கோவிச்சுக்கவே மாட்டாள். அப்பறம் அம்மா பணக்காரி தான்; ஏன், நான் கூடப் பணக்காரக் காவேரிதான்.'

காவேரியின் மனம் வெகு நேரம் வரையிலும் காசுகளைப் பற்றியும் காசு முளைக்கக் கூடிய மரங்களைப்பற்றியுமே நினைத்துக் கொண்டிருந்தது. தன்னுடைய கற்பனைக்குத் தகுந்தாற் போல் மானசிகமாக ஒரு காசு மரத்தைத் தனக்குள் உற்பத்தி செய்துகொண்டு அதன் கிளைகளில் குலுங்கி நிற்கும் காசுகளைத் தன் மனக்கண்ணால் கண்டு அனுபவித்துக் கொண்டிருந்தாள். அதைப்போல் ஒரு மரம் தன்னுடைய வீட்டுக்கொல்லையில் அவசியம் இருக்க வேண்டுமென்று அவளுக்குத் தோன்றியது. அதைப்பற்றி யோசித்து யோசித்து அன்றைக்குப் பள்ளிக் கூடம் விடுவதற்குள் ஒரு முடிவுக்கு வந்து விட்டாள்.

மாலை நேரத்தில் வீட்டில் நாகம்மாள் இல்லாத சமயம் பார்த்து, காவேரி தன்னுடைய கலயத்திலிருந்து சில காசுகளை எடுத்துக் கொல்லையில் ஊன்றி வைத்தாள். வழக்கத்தை அனுசரித்துக் கொஞ்சம் தண்ணீரும் தெளித்தாள். அந்த இடத்திற்கு அடையாளமாக ஒரு சிறு குச்சியும் நட்டு வைக்கப்பட்டது. தினந்தோறும் மறந்து விடாமல் அதி

காலையில் எழுந்து அடையாளத்தைச் சுற்றிலும் தண்ணீர் வார்த்து வந்தாள். வாரம் ஒன்றுக்கு மேலாகியும் அந்தப் பொல்லாத காசுகளில் ஒன்றுவது முளை கிளம்பி வெளியே வரவேயில்லை! மண்ணைக் கிளறிப் பார்த்தபோது எல்லாக் காசுகளும் வேரும் விடாமல் தளிரும் விடாமல் முன்னைவிடக் கறுப்பாகப் பாசி பிடித்துப் போய்க் கிடந்தன. காவேரியின் நம்பிக்கை தளர்ந்துகொடுக்க ஆரம்பித்தது.

## 3

சில நாட்கள் சென்ற பிறகு காவேரியின் பள்ளிக்கூடத்தில் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

அன்றைக்கு ஒரு பையன் ஆரஞ்சுப்பழ விதை ஒன்றை அப்படியே விழுங்கிவிட்டுப் பள்ளிக்கூடம் வந்திருந்தானும். மற்ற குழந்தைகளெல்லாம், ''நிச்சயம் அந்தப் பயலோட வயத்திலிருந்து ஆரஞ்சு மரம் முளைக்கப் போறது'' என்று தங்களுக்குள் குசு குசுவென்று பேசிகொண்டார்கள். இந்தப் பேச்சு எப்படியோ காவேரியின் காதுகளில் விழுந்து திடீரென அவளுடைய மனத்தில் ஓர் ஆச்சரியமான மாறுதலை உண்டு பண்ணிவிட்டது.

அன்று பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிப் போகும் போது, காவேரி குதித்துக்கொண்டே ஓட்டமும் நடையுமாய்ப் போய் வீட்டை அடைந்தாள்.

அந்த நிமிடத்திலிருந்து காவேரி கவனத்தோடு தன்னுடைய வீட்டு நடவடிக்கைகளில் சிரத்தை கொண்டாள். எதற்கெடுத்தாலும் தாயிடம் குறுக்கும் நெடுக்குமாய்க் கேள்விகளைக் கேட்டுச் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொண்டாள். சில தினங்களுக்குள் அவளுக்குப் பொதுவாக ஒரு விஷயம் புலப்பட்டுவிட்டது. ''காசில்லை...காசில்லை.'' அவளுடைய தாயின் வருத்தத்திற்கு இதுதான் முக்கிய காரணம்.

'அட பாவமே! நமக்குத் தெரிகிற யோசனைகூட நம் அம்மாவுக்குத் தெரியமாட்டேங்கறதே!' என்று தன் மட்டில் காவேரி பெருமைப்பட்டுக் கொண்டாள்.

தன் யோசனையில் காவேரிக்குத் தீவிரமான நம்பிக்கை இருந்தாலும் தன்னுடைய சிநேகிதி கண்ணம்மாவின் வாயிலாக அதை தெளிவுபடுத்திக்கொள்ள விரும்பினாள். ஆனால் தான் செய்யப்போகும் காரியத்தை ஒருவருக்கும் சொல்லக் கூடாதென்ற பிடிவாதமும் அவளிடம் இருந்தது. ஆகையால் வெகு தந்திரமாக கண்ணம்மாவிடம் பேசினாள்.

''நான் ஒரு மாதுளங் கொட்டையை முழுங்கிவிட்டேண்டி, கண்ணம்மா!'' என்றாள் கண்களை அகலத் திறந்து கொண்டு.

''அப்படியானால் உன்வயத்திலேயிருந்து கட்டாயம் ஒரு மாதுள மரம் முளைக்கும்'' என்றாள் கண்ணம்மா

உடனே காவேரி பேச்சை மாற்றினாள்; ''இல்லேடி, இல்லே! மாதுளங் கொட்டையை இல்லே; ஒரு காசைத்தான் முழுங்கிட்டேன்.''

''சரி, சரி? காசையா முழுங்கினே? காசை முழுங்கினாக் காசு மரம் முளைக்கும்.''

''மரம் முளைச்சா, காசு காய்க்குமோ?''

''போடீ, போ! காசு மாத்திரமா காய்க்கும்? ரூபா, அணா, பைசா நோட்டு, இன்னும் எத்தனை பணம் பூலோகத்திலே இருக்கோ அத்தனையும் கொத்துக் கொத்தாய்க் காய்க்குமே!''

''மரம் எப்படிக் கண்ணம்மா முளைக்கும்?'' என்றாள் காவேரி.

''வயத்திலேயிருந்து முளைச்சு வாய் வழியா மேலே வரும்; வந்தவுடனே பூப்பூக்கும், காய் காய்க்கும்; அப்புறம் எங்கே பார்த்தாலும் கிளைக்குக் கிளை பணம் பணமாய்த் தொங்கும்.''

''அந்தச் சமயத்தில் 'நான் உசிரோட இருப்பேனா?'' என்றாள் காவேரி கலவரத்தோடு.

''நீதான் வயத்திலே காசுமுளைச்சு வர்றபோதே செத்து போயிடுவியே?'' என்று கவலையில்லாமல் பதில் வந்தது.

காவேரியின் முகம் சுருங்கிவிட்டது; இருந்தாலும் அதைக் காண்பித்துக் கொள்ளாமல், கண்ணம்மாவிடம் இது

பற்றி அதிகம் பேச்சுக் கொடுக்கக்கூடாதென்று வீட்டிற்கு ஓடி வந்து விட்டாள்.

இரண்டு மூன்று நாள் காவேரியின் நெஞ்சிற்குள் இந்தப் போராட்டம் இடைவிடாமல் நடந்து வந்தது; தான் உயிரோடு இருப்பதைத் தாய் அதிகமாகவிரும்புவாளா? அல்லது பணந்தான் இப்போது அவளுக்கு முக்கியமாக இருக்கிறதா? கடைசியில் காவேரியின் முடிவுக்கு வந்த விஷயம் பணத்தைப் பற்றியதுதான்.

முதல் நாள் காலையில் ஒருசல்லிக்காசை வாயில்போட்டு விழுங்கினாள்; பலன் தெரியவில்லை. இரண்டாவது நாள் காலணாவை விழுங்கிப் பார்த்தாள்; அப்போதும் ஒன்றும் தெரியக் காணோம். ஒருவேளை தன்னை கண்ணம்மா ஏமாற்றி விட்டாளோ என்கிற சந்தேகங்கூட அவளுக்கு ஏற்பட்டுவிட்டது.

மூன்ருவது நாள் தன்னுடைய ஆத்திரத்தை எல்லாம் சேர்த்து வைத்து, தான் கலயத்திற்குள் போட்டு வைத்திருந்த அத்தனை காசுகளையும் அள்ளி வந்து ஒவ்வொன்ருகப் போட்டு விழுங்கினாள். அத்துடன் தண்ணீரையும் நிறையக் குடித்து வைத்தாள்.

மரம் முளைக்க ஆரம்பித்தது!

அன்றைக்கு மாலையில் காவேரியின் தலை சுற்றியது; கிறுகிறுப்பு அதிகரித்தது; நிலை கொள்ளாதபடி அடி வயிற்றை இழுத்துப் பிடிப்பது போலிருந்தது. வாடித் துவண்டுபோய் மூலையில் உட்கார்ந்திருந்தாள்.

"கட்டாயம் மரம் முளைத்து விட்டது" என்ற அந்த நம்பிக்கை அவளை இத்தனை வேதனைகளையும் பொறுத்துக் கொண்டிருக்கும்படி செய்தது.

## 4

இரவு பாதிப் பொழுதுக்கு மேலாகிவிட்டது. நாகம்மாளின் வீட்டு அடுப்பங்கரை மூலையில் இருந்த சிமினி விளக்கொன்று, 'உயிரை விடுவோமா, வேண்டாமா!' என்ற நிலையில் இருப்பதுபோல் மினுக்கு மினுக்கென்று கண்

சிமிட்டிக்கொண்டிருந்தது. நாகம்மாள் தலைவிரிகோலமாய் உட்கார்ந்து தேம்பிக் கொண்டிருந்தாள். அவளுக்கு அருகில் கீழே விரித்திருந்த கிழிசல் சமுக்காளத்தில் குழந்தை காவேரியின் உடல் அலங்கோலமாய்க் கிடந்தது. அவளுடைய உயிர் இன்னும் போகவில்லை. தொண்டைக்கும் நெஞ்சுக்குமாக இழுத்துக்கொண்டு சிமினி விளக்கின் நிலைமையில் இருந்தது.

காவேரியைச் சுற்றிலும் மஞ்சள் மஞ்சளாய் வாந்தியெடுத்துக் கிடந்தது; அதன் மேலெல்லாம் நாகம்மாள் நெல் உமியை எடுத்துத் தூவி வைத்திருந்தாள்.

வைத்தியகாரப் பண்டிதர் சற்று முன்னே சொல்லிப் போன வார்த்தைகளை நாகம்மாள் நினைத்துப் பார்த்தாள். ''குழந்தைக்கு வயத்திலே களிம்பு ஊறி, பாசி பிடிச்சிருக்கு; ஏதோ என்னாலே முடிஞ்சதைச் செய்யறேன்; உசிரைக் காப்பாத்தக் கடவுளாலேதான் முடியும்.'' நாகம்மாளுக்கு அந்த வார்த்தைகளை நினைத்துப் பார்க்கக்கூடப் பயமாக இருந்தது.

''குழந்தை எப்போதும்போல இருக்கப்போறான்னு நெனைச்சுத்தானே, இன்னிக்குக்கூட அவளுக்கு ஒரு மாம் பழம் வாங்கிட்டு வந்தேன். என்னை இப்படிச் சோதிக்கிறாரே கடவுள்! அம்மா, காவேரி! என் வயத்திலே பாலை வார்த்திடம்மா...'' என்று கோவெனக் கதறினாள்.

காவேரிக்குச் சிறிது சுய நினைவு வந்தது; தாய் தனக்காக வாங்கி வந்த மாம்பழத்தைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு, ''அம்மா'' என்றாள் மெலிந்த குரலில்.

''ஏண்டா, கண்ணு!'' என்று ஆவலுடன் தன் முகத்தை அருகில் கொண்டுபோனாள் தாய்.

''இனிமே உனக்கு ரொம்பப் பணம் கிடைக்கும் அம்மா! நான் இன்னிக்கு நிறையக் காசு முழுங்கியிருக்கேன்; நான் செத்துப்போனவுடனே சீக்கிரம் காசு மரம் முளைக்கும், அப்புறம் உனக்குக் கஷ்டமே இல்லேம்மா!'' என்று தன் முழுப் பலத்தையும் சேர்த்துக்கொண்டு ஒரே மூச்சில் காவேரி சொல்லி முடித்தாள்.

தாயின் நெஞ்சு ஆயிரஞ் சுக்கலாய் வெடித்து, நாலு பக்கமும் பிசிர்—பிசிராய்ச் சிதறி விழுவதுபோல் தோன்றியது. நிலைக்குத்திய பார்வையோடு காவேரியைப் பார்த்துக்கொண்டே இருந்தாள்.

சிமினி விளக்கிலிருந்த எண்ணெயெல்லாம் தீர்ந்து போய்த் திரி எரிய ஆரம்பித்தது. ஒளியின் மஞ்சள் நிறம் மங்கிக்கொண்டே வந்து ஊதாவாக மாற்றமடைந்தது.

''நம்பளோட காசு மரத்திற்குப் பக்கத்திலே இந்த மாம்பழத்தோடே கொட்டையையும் நட்டுவச்சிடம்மா!''— அவ்வளவுதான்; கடைசியாக முணுமுணுத்துக்கொண்டே காவேரி தன்னுடைய கரத்திலிருந்த மாம்பழத்தை நழுவ விட்டாள்.

விளக்கு அணைந்தது.

காவேரியின் தேகத்தைப் பிடிவாதமாகத் தன்னுடைய கொல்லையிலே புதைத்துக்கொண்டாள் நாகம்மாள். அதனுடன் அந்த மாங்கொட்டையும் புதை குழியின் மேல் ஊன்றி வைக்கப்பட்டது.

நாகம்மாள் வார்த்து வந்த தண்ணீரினால்தானோ, அல்லது அவள் தினந்தோறும் பெருக்கிவந்த கண்ணீரினால் தானோ தெரியவில்லை; எப்படியோ அந்த மாங்கொட்டை மாத்திரம் முளைத்து ஓர் இளங்கன்றாக வளர்ந்துவிட்டது.

அந்த மாங்கன்றிற்குத்தான் காவேரியென்று நாகம்மாள் பெயர் வைத்திருந்தாள்; அதுதான் காசுமரம்.



# சுதந்திரப் பறவை

வாசலிலே இரும்புச் சங்கலிகளின் சலசலப்புச் சத்தம் கேட்டது. கையிலிருந்த பத்திரிகையைத் திறந்தபடியே வைத்துவிட்டு எழுந்திருக்காமலே வெளியே பார்த்தேன். நெஞ்சு ஒருகணம் திக்கென்று நின்றுபோய் மறுபடியும் கட்டற்ற வேகத்துடன் அடித்துக்கொண்டது.

''யாரது ரத்தினசாமியா?'' என்று ஆத்திரத்துடன் கேட்டுக்கொண்டே அவசரமாக எழுந்து வெளியே ஓடி வந்தேன். வெளிவாசற் கதவருகில் நான் வருவதற்கும் அந்த மூவரும் என் வீட்டு வாசலைக் கடந்து செல்வதற்கும் சரியாக இருந்தது.

''ரத்தினசாமிதானே?'' என இரண்டாவது தடவை நான் வாய்விட்டு உரக்கக் கத்தியபோது சிகப்புத் தொப்பி அணிந்த அந்த சிறைக் காவலன் என்னைத் திரும்பிப் பாரா மலே ஆம் என்பதற்கறிகுறியாக இயந்திரம்போல் தலை யசைத்து விட்டு முன்போலவே வேகமாக நடந்தான்.

அந்தக் காவலுக்குப் பின்னால் முன்னும் பின்னுமாக இரண்டு கைதிகள் தங்களது தோட்களின்மேல் ரத்தின சாமியின் பிரேதத்தைச் சுமந்து சென்றனர். அவர்களது கைகளில் அப்போது விலங்குகள் காணப்படவில்லை. கால் களில் மாத்திரம் தாராளமாக நடந்து செல்லும் அளவுக்குத் தளைகள் போடப்பட்டிருந்தன.

விலங்குகளின் சலசலப்புச் சத்தம் சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டே வந்து, கடைசியில் அறவே நின்று விட்டது. நான் கண் இமையாமல், அவர்கள் தொலைவில் சென்று மறையும் வரை பார்த்துகொண்டே நின்றேன். எனது பள்ளித்தோழன், முன்னாள் சிறைக்கைதி ரத்தின சாமி, தற்போது சுதந்திர மனிதனாகித் தன் கடைசிப் பிரயாணத்தை இரண்டு கைதிகளின் தோட்கள் வாயிலாக

நடத்திக் கொண்டிருந்தான்! அவன் உடலைப் போர்த்தது இப்போது ஒரு கோடித்துண்டு; கழுத்துக்கு ஓர் ரோஜாப்பூ மாலை!

சிறைக்காவலனின் மனத்தில் என்ன சந்தேகமோ, என்ன பயமோ தெரியவில்லை. நொடிக்கு நொடி தன் கைத் துப்பாக்கியையும் கைதிகளையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே நடந்தான்.

என்னால் வெகு நேரம் இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. கண்களில் வழிந்த நீரைத் துடைத்துவிட்டு மறுபடியும் பார்த்தபோது, அவர்கள் எங்கோ தூரத்துக் கூட்டத்துடன் ஒன்றாய்க் கலந்து விட்டார்கள்.

சற்று நாழிகை சென்று என் மனம் தனக்குத் தானே சமாதானம் சொல்லிக் கொண்டது.

''இனி அவனுக்காக சிறிதேனும் வருந்தாதே! அவன் தான் காவற் கட்டுகளையும் கோட்டைக் கொத்தளங்களை யும் தாண்டிவிட்டானே! அவனை இனி முள் வேலிகளும் மதிற்சுவர்களும் இரும்புக் கதவுகளும், ஒன்றும் செய்ய முடியாது. பிரம்படிகளின் வேதனையையும் துப்பாக்கி முனைகளின் அச்சத்தையும் அவன் தற்போது பொருட் படுத்தும் நிலையில் இல்லை; அவன் சுதந்திரப் பறவை.........! இத்தனை நாட்களாய் ஏங்கிக் கொண்டிருந்த இன்பத்தை இன்று அணைந்துகொண்டு அவன் விடுதலைச் சிறகடித்து விர்ரெனப் பறந்து செல்கிறான். இனியும் அவனுக்காகக் கவலை ஏன்? கண்ணீர் ஏன்?''

பெருமூச்சு விட்டவண்ணம் திரும்பவும் வந்து திண்ணையில் உட்கார்ந்தேன். பத்திரிகை கீழே அலங்கோலமாய்க் கிடந்தது.

## 2

எங்கள் பள்ளிக்கூடத்தில் நடந்த நிகழ்ச்சி இது. அன்று மாணவர்களுக்குப் பரிசு வழங்கும் தினம். ரத்தின

சாமிக்குப் பரிசுகள் கொடுக்கும்போது தலைமை உபாத்தியாயர் பேசினார்:—

''விளையாட்டுக்களில் கெட்டிக்காரனாக இருப்பவன் அநேகமாகப் படிப்பில் அக்கறை இல்லாதவனாய்த்தான் இருப்பான். படிப்பில் சூரப்புலி என்றாலோ, அநேகமாக அவனுக்கும் ஓட்ட ஆட்டங்களுக்கும் அதிக தூரமாய்த்தான் இருக்கும். இவ்விரண்டிலும் ஒன்றாய்த் தேர்ச்சி பெற்றவனைக் காண்பது மிகவும் அரிது. அத்தகைய ஒருவனை நம் பள்ளிக்கூடம் அடைந்திருக்கிறது.''

''ரத்தினசாமி வெறும் புத்தகப் புழுவல்ல; எழுத்தில் உணர்ச்சி பொங்குகிறது. உண்மையில் எதிர்காலத்தின் சிறந்த தலைவனாவதற்கு அவனிடம் அறிகுறிகள் காணப்படுகின்றன. அவன் விரைவில் ஒரு பெரிய பொறுப்பை நம்மிடையே வகிக்கப் போகிறான்...''

அவர் இன்னும் எவ்வளவோ அவனைப் பற்றிப் பேசினார். அவ்வளவிற்கும் அவன் தகுதியானவன்தான். அவனிடம் எங்களுக்கு ஒரு தனிமதிப்பு உண்டு. செல்வாக்கு இருந்தது. அவனது தன்னலமற்ற சுபாவத்தால் நாங்கள் அனைவரும் அவன்பால் கவரப்பட்டோம்.

அப்போது அவனுடைய அப்பா பர்மாவுக்குச் சென்று ஒரு நல்ல உத்தியோகத்தில் இருந்தார். சம்பளம் நிறைய வந்து கொண்டிருந்தது. அவன் மட்டிலும் அங்கு செல்லாமல்,இங்கேயே தங்கி விட்டான். அவனுக்கு அம்மா கிடையாது. அப்பா இங்கிருந்து புறப்படுவதற்கு முன்னரே நாலைந்து வருடங்களுக்கு முன்பாக, இரண்டாம் கல்யாணம் செய்து கொண்டார். அவருக்கு இப்போது ஆணும் பெண்ணுமாக இரண்டு குழந்தைகள்.

மாதந் தவறாது ரத்தினசாமிக்குப் பணம் வரும். நன்றாகச் செலவழிப்பான். கவலையில்லாமல் பொது விஷயங்களில் ஈடுபட்டு பொழுது போக்குவான். எப்போதும் விடுதியில் அவன் அறை கலகலப்பாகவே இருக்கும்.

## 3

ரத்தினசாமியின் முகம் பேயறைந்ததுபோல் இருந்தது. பித்துப்பிடித்தவன்போல் கலைந்த தலைமயிரை வாராமல் என் அறைக்கு வந்தான். அவனுடைய குரல் மிகக் கடுமையாக இருந்தது. ''நான் இனிமேல் படிக்கப் போவதில்லை, சேது! இன்றைக்கே படிப்பைவிட்டுவிட்டேன். ஏதாவது பிழைப்புக்கு வழி தேடப் போகிறேன்'' என்றான்.

காரணத்தை அவனிடம் கேட்டேன். அவன் தகப்பனார் வெடிவிபத்துக்குள்ளாகி ரங்கூனில் இறந்து விட்டார். சித்தி, குழந்தைகளுடன் கால் நடையாகவே பர்மாவைக் கடந்து இந்தியா வந்து சேர்ந்தாள். வழியில் பையன் தவறி விட்டான்; பெண் குழந்தைகளோடு கல்கத்தாவில் ரெயிலேறி இங்கு வந்து சேர்ந்திருக்கிறாள். அவனுடைய படிப்பின் முடிவு யோசனையைக் கேட்டவுடன் தலைமை ஆசிரியர் திடுக்கிட்டார். ''அடுத்த வருடத்திலிருந்து உனக்கு உபகாரச் சம்பளம் வாங்கித் தருகிறேன்; உன்னைப் பற்றிய எல்லா விஷயங்களையும் நான் கவனித்துக் கொள்கிறேன். எப்படியாவது சில நாட்கள் பொறுத்துக் கொண்டிரு; படிப்பைப் பாதியில் விட்டு விடாதே'' என்றார்.

அவன் யாருடைய பேச்சையும் கேட்கவில்லை. யாருடைய உதவியையும் கோரவில்லை. அன்றே பெட்டி படுக்கைகளை எடுத்துக்கொண்டு விடுதியை விட்டுக் கிளம்பினான். அப்புறம் அந்த வருடம் முழுவதும் அவன் எங்கள் ஊரில் காணப்படவில்லை.

## 4

நான் சென்னையில் மேல் படிப்பைத் தொடங்கிய சமயத்தில் ஒரு நாள் செய்திப் பத்திரிகையொன்றில் இந்தச் செய்தி காணப்பட்டது. அதைப் படித்தபடியே அவ்விடத்தில் வாயடைத்து உட்கார்ந்துவிட்டேன். சில தினங்கள் வரை அடிக்கடி என் நினைவு அச்செய்தியைச் சுற்றியே சுழன்று கொண்டிருந்தது.

இளைஞனின் விபரீதச் செய்கை என்ற தலைப்பின் கீழ்: ''ரத்தினசாமி என்னும் வாலிபன் தனக்கு வேலை கொடுக்க மறுத்த காரணத்திற்காகத் திருச்சி பாங்கர் சுந்தரேசனைக் கடுமையாகத் தாக்கிவிட்டான். அருகிலிருந்த அவர் மனைவி கூச்சலிடவே, வீட்டு வேலைக்காரர்கள் ஓடி வந்து அவனைப் பிடித்துப் போலீசாரிடம் ஒப்படைத்தனர். பாங்கரின் நிலைமை கவலைக்கிடமாக இருக்கிறது.''

மேற்கண்ட செய்தியைப் பிரசுரித்த அதே பத்திரிகை பின்னும் ஒரு மாதம் கழித்து, 'ரத்தினசாமிக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது' என்னும் செய்தியையும் வெளியிட்டிருந்தது.

## 5

ரத்தினசாமியின் செய்கையைப் பற்றிய விவரத்தைச் சென்னையில் என்னைப் பார்க்க வந்த நண்பன் ஒருவன் எனக்குக் கூறினான்.

அவன் பள்ளிக்கூடத்தை விட்டு நேரே தம் உறவினர்கள் வசிக்கும் ஒரு கிராமத்திற்குச் சென்றான். அங்கு ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்தித் தன் சித்தி கொண்டு வந்திருந்த சொற்பப் பொருளைக் கொண்டு இரண்டு மூன்று மாதங்கள் வாழ்க்கையை நடத்துவதற்கான சாமான்களை வாங்கி வைத்தான். அதற்குள் எப்படியேனும் தான் ஒரு வேலையுடன் திரும்பி வந்து அவர்களைத் தன்னுடன் வைத்துக் கொள்வதாகச் சொல்லிப் புறப்பட்டான்.

எங்கெங்கோ வேலைக்காக அலைந்தான். சித்தியிடம் வாங்கி வந்த பணமெல்லாம் காலியாகிவிட்டது; வேலை கிடைத்தபாடில்லை. கடைசியில் திருச்சி வந்து பாங்கர் சுந்தரேசனிடம் வேலைக்காக மன்றாடினான். ஆனால் பள்ளிக்கூடத்தின் பக்கமோ, மாணவ நண்பர்களிடமோ அவன் ஒருபோதும் வரவில்லை.

''நிர்க்கதியாக நிற்கும் சித்தியையும் அவள் குழந்தையையும் காப்பாற்ற வேண்டும். உங்கள் பாங்கில் ஏதாவது...''

பாங்கர் நல்லவர்தாம்; தன்னால் முடியாது என்று சொல்லி அனுப்பியிருப்பார். ஆனால் விதி அவரை விட வில்லை. தம்முடைய இரண்டாந்தாரம் இளம் மனைவி அருகில் இருந்ததால் தமது நகைச் சுவையை அவளுக்குக் காண்பிக்க விரும்பி, ''ஆள்தான் வாட்டசாட்டமாயிருக் கிறாயே, இக்காலத்தில் பட்டாளத்திற்குப் போகலாமே!'' என்றார்.

''வெள்ளைக்காரர்கள் நம் பட்டாளத்தை நம்மை அடக்கத்தான் வைத்திருக்கிறார்கள். விடுதலை பெற்ற நாடில்லை இது. அப்படியிருந்தால் பெருமையுடன் சேர்ந் திருப்பேன்.''

''என்னப்பா பிழைப்புக்கு வழியில்லை யென்றால் இதை யெல்லாம் பார்த்து முடியுமா?...உன் சித்தி என்ன அப்படி இளையவளா? அல்லது கோஷாவா?''

பக்கத்தில் நின்ற அவர் மனைவி குனிந்த வண்ணமே கொல்லென்று சிரித்தாள்.

''காசில்லாத உன் அப்பாவுக்கு இரண்டாந்தாரம் எதற் கப்பா பெண்டாட்டி?'' பாங்கர் மேலே பேசினார்.

ரத்தனசாமி காலையிலிருந்து இதுவரையில் பட்டினி. பசி மயக்கம் போதாதென்று அவனுக்கு அன்று வந்த கடிதமும் அப்படியிருந்தது. அவன் சித்தி எழுதியிருந்தாள், 'அடுத்த நாள் பொழுது விடிந்தால் என்ன செய்வதென்று!'

இந்தச் சமயத்திலா இந்த கேலிச் சிரிப்பு? அதுவும் பெண் பிள்ளையின் எதிரிலா தன் ஏழைமையைக் கண்டு, தன்பட்டினி யைக் கண்டு, ஒருவன் இப்படிக் கேலி செய்வது? அந்தப் பெண்ணின் முகத்தை அப்போதுதான் ஏறிட்டுப்பார்த்தான். அவளும் அப்போதுதான் தன் கணவனைப் பார்ப்பதை விட்டு இவன் பக்கம் திரும்பினாள். அந்த முகம்! கல்லூரியில் எங்க ளுடன் ஒன்றாகப் படித்த பணக்காரப் பெண் யமுனா! காசுள் ளவர் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறார்.

அவன் வெறி கொண்டான். பக்கத்து மேசையில் கிடந்த ரூல் கழி பாங்கரை நோக்கிச் சுழன்றது. பின்பு? பத்திரிகை யில் படித்த செய்திதான்.

# 6

சென்னையிலிருந்து திரும்பி வந்ததும், முதல் வேலையாய் அனுமதி பெற்றுக்கொண்டு அவனைச் சிறையில் பார்க்கச் சென்றேன்.

ஆ! ரத்தினசாமிதானா அவன்? என் கண்கள் என்னைக் கேலி செய்தன. மாணவர்களின் கூட்டத்து மத்தியிலே, பின்புறம் கைகளைக் கட்டிக்கொண்டு போர்க்களத்து வீரன்போல் உணர்ச்சி பொங்கும் வார்த்தைகளைக் கொட்டும் என் ஆருயிர் நண்பன் ரத்தினசாமி எங்கே? அதல பாதாளத்தில் சுழலும் பஞ்சடைந்த விழிகள் கொண்ட இந்த எலும்புக்கூடு எங்கே?

''நல்ல வேளை; நீயாவது நினைவோடு என்னை வந்து பார்த்தாயே? அது கிடக்கட்டும்; இப்போது வந்தது சரிதான். இன்னும் சில நாள் தாமதித்திருந்தாயானால், நான் உன்னைப் பார்க்காமலே கண்ணை மூடியிருப்பேன்.''

அவன் நோய்க் கட்டிலில் படுத்திருந்தான். இவ்வளவு மோசமான நிலைக்கு அவன் வந்தவுடன், திரும்பவும் எழுந்திருப்பான் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. நான் இவ்வளவு நாள் அவனைப் பார்க்க முடியாததற்கு அவனிடம் காரணம் கூறிவிட்டு அவனைப்பற்றி விசாரித்தேன்.

அவன் திடீரென்று, பாதியில் நிறுத்தியவன் பேச்சை ஆரம்பிப்பதுபோல் ஆரம்பித்தான்.

''சேது! நான் இந்திரியங்களை வென்ற மகானுபாவனாகி விடவில்லை. அவற்றை வெல்லும் வழிகளும் எனக்குத் தெரியாது. ஒடுக்கப்பட்ட என் ஒவ்வொரு உணர்ச்சியும் இந்த நாலு சுவர்களின் கடின மறைவுக்குப் பின்னே என்னென்ன உருவங்களுடன் வெளியேறிப்பேய்போல் என்னைப் பிய்த்துத் தின்கின்றன, தெரியுமா?—என் ஆசைக்கொரு அளவில்லையப்பா! நாளுக்கு நாள் எத்தனை எத்தனை ஆசைகள் புதிது புதிதாய்த் தோன்றித் தலைவிரித்தாடுகின்றன தெரியுமா? அந்த ஆசைகள் என் பள்ளிக்கூடத்து ஆசைகளைப்போல் அவ்வளவு மென்மையானவை அல்ல. நாடு, தேசம், மக்கள்,

மொழி, முன்னேற்றம் இவைகளைப்பற்றியெல்லாம் எனக்கு இப்போது கவலை இல்லை. என் கவலை, கனவு, நினைவெல்லாம் இப்போது நான், நான், நான்!

''ஒருவேளை நல்ல சாப்பாட்டிற்காக, ஒரு நாள் மாலை நேரத்தின் கடற்கரைக் காற்றுக்காக, ஒரு நாள் கை வீசி வெளியில் நடப்பதற்காக நான் எவ்வளவு ஏக்கம் ஏங்கித் தவித்திருக்கிறேன் தெரியுமா?

''மனிதனைச் சிறையிலிட்டால் அவனைத் திருத்திவிடலாமென்று நினைக்கிறார்களே; அது வெறும் பொய்க் கனவு! எனக்கு மரணதண்டனை விதித்திருந்தால் நான் அதை மகிழ்ச்சியோடு ஏற்றிருப்பேன்; என்னை இங்கு இவர்கள் சாகவும் விடவில்லை பிழைக்கவும் விடவில்லை.

''ஒருமுறை நான் தப்பி ஓடப் பார்த்தேன். அதன்வெகுமதியைப்பார்!''

இப்படிச்சொல்லி அவன் தன் முதுகைத் திருப்பினான். என் விழிகள் அம்முதுகைக் காணச், சகியாமல் வெடித்து விடுவனபோல் விழித்தன. என்ன கோரம்! ஒரு காலத்தில் நிகரற்ற தலைவனாய் வரப்போகிறானென நாங்கள் மனப்பால் குடித்த அந்த நண்பனது முதுகில் தென்னைமரத்தின் மட்டைகள் விழுந்த வரம்புகள் போல, பிரம்படித்தழும்புகள்காட்சியளித்தன. —இன்றைய நாட்டில் ஏழைக்கு உணர்ச்சி இருக்கக்கூடாது. அவன் லட்சியக் கனவும் காணக் கூடாது. சோற்றுக்கு வழி கோலாத நாட்டில் லட்சியம் எங்கே உருப்படப்போகிறது?

நான் கண்ணீர் விட்டுக் கதறினேன். அதிகாரி என்னை வெளியே அனுப்பிவிட்டார். அவன் அன்றொரு நாள் எங்கள் கூட்டத்தில் முழங்கிய சொல் எனக்கு அப்போது ஞாபகம் வந்தது. ''நம் சமுதாயத்தின் தற்போதையப் போக்கு நம் அடிப்படைத் தேவைகளைக் கவனிக்கவில்லை. அதை அடியோடு வேரறுத்துவிட்டு நாம் ஒரு புதிய சமுதாயத்தை ஏற்படுத்த வேண்டும்!''

வாசலிலே திரும்பவும் இரும்புச் சங்கிலிகளின் சத்தம் கேட்டது. போய்ப் பார்த்தேன். கைதிகள் ஈர மண் ஒட்டிய மண் வெட்டிகளோடு தங்கள் சிறைக்கூடத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள், ரத்தினசாமி விடுதலை பெற்று விட்டான்!



# வசந்த நினைவு

## 1

அது வசந்த காலம். செடிகளும் கொடிகளும் பூத்துக் குலுங்கும் காலம். வண்டுகளும், வண்ணாத்திப் பூச்சிகளும் தேனுக்காகப் போட்டியிடும் காலம். ஏன்? எனக்கும் அவளுக்கும்கூட அப்போது வசந்தகாலந்தான்!

அந்த வசந்தகாலம் போய்விட்டது. அடுத்த வசந்தம் வந்தது. ஆனால் எனக்கல்ல வெளியுலகத்திற்கு. அதன் பிறகு இப்படியே ஒன்பது வசந்தங்கள் வந்து வந்து போயின.

இவ்வருடமும், அதோ அந்தச் சுற்றுச் சுவருக்கு அப்பால் நிற்கும் அரசமரத்தைப் பாருங்கள். நேற்று இலையுதிர்ந்து திக்கற்ற அநாதைபோல் மொட்டையாய் நின்றது. இன்றைக்குக் கணவனின் வரவு நோக்கிக் காத்திருக்கும் புதுப்பெண்போல, பசும் பொற்றளிர்களால் முகத்திரையிட்டுக் காத்து நிற்கிறது.

நான் பெருமூச்சு விட்டேன்; எனக்கும் இனி வசந்த காலம் வருமா? இதுவரை அதைப்பற்றி ஏனோ நான் அக்கறைப்படவில்லை.

## 2

நான் இந்தக் கிராமத்திற்குப் புதிது. இங்கிருக்கும் மருத்துவ மனைக்கு 'டாக்டராக' வந்து பத்து நாட்கள்தாம் இருக்கும். நோயாளிகள் அதிகம்பேர் வராததால் பொழுது போவதே சிரமமாயிருந்தது.

அன்று பகல் முழுவதும் வழக்கம்போல் ஒரு வேலையுமில்லாமல் உட்கார்ந்திருந்தேன். இரவில்தான் பத்து மணிக்கு மேல் யாரோ வந்து என் அறைக் கதவைத் தட்டினார்கள்.

வெளியே வந்து பார்த்தபோது ஒரு கூட்டம் எனக்காகக் காத்திருந்தது.

அந்த ஊர் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வண்டியிலிருந்து கீழே விழுந்துவிட்டாராம். முழங்காலில் பெருத்த காயம். அதற்காகத்தான் அத்தனை சனங்கள் வந்திருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் ஒரு பெண் அவர் மனைவியாக இருக்கவேண்டும். குழந்தைகளையும் அழைத்து வந்திருந்தாள்.

கை விளக்கை வைத்துக்கொண்டு ஒரு விதமாகக் காயத்தைக் கட்டிக்கொண்டிருந்தேன். அவருடைய குழந்தைகள் அவைகளுக்கு எப்படித்தான் தங்கள் தந்தையின் வேதனை தெரியுமோ—ஓயாமல் வீரிட்டழுதன. மனைவியும் துக்கம் தாங்காமல் கதறினாள். எனக்கு அவர்களுடைய நிலைமையை காண மனந்தாளவில்லை. விரைவில் வேலையைக் கவனித்து எல்லோரையும் வீட்டிற்கனுப்பினேன்.

ஆனால் அதன் பிறகு நான் படுக்கையில் சென்று படுத்த போது எனக்குத் தூக்கம் வரவில்லை; விபரீதமான பல எண்ணங்கள் முளைத்துத் துன்புறுத்தின. அந்த ரெவின்யூ இன்ஸ்பெக்டரின் மனைவி மக்கள் அவருக்காக ஆஸ்பத்திரியில் அழுத குரல் இடையிடையே விட்டுவிட்டு ஒலித்துக் கொண்டிருந்தது.

''ஆமாம், உனக்கு இப்படி ஏதாவது துன்பம் நேர்ந்து விட்டால், உன் துன்பத்தைக் கண்டு கண்ணீர் விடுவதற்கு உனக்கு இப்படி ஒரு மனைவி வேண்டாமா?'' என்று எனக்குள் ஒரு குரல் என்னையே கேட்பது போலிருந்தது.

சரியான கேள்விதான். எனக்கும் எத்தனையோ நண்பர்கள் இருக்கிறார்கள்; இருந்தாலும் அவர்களது அன்பு நம் வாழ்க்கையிலேயே இரண்டற ஒன்றிப் போகக் கூடிய ஒரு பெண்ணின் அன்புக்கு ஈடாகுமா?—இது போன்ற எண்ணத்திற்கு இன்றுதான் என் மனம் இடம் கொடுத்தது.

இதற்கு முன் ஒரே ஒரு முறை என் உள்ளத்தில் பசுமை கண்டேன்; அதுவும் வெப்பத்தினால் வறண்டு போய் விட்டது; மீண்டும் இனியேனும் அதில் மழை பொழியுமோ என்னவோ?

# 3

'ரெவின்யூ இன்ஸ்பெக்டர்' சாம்பசிவத்திற்கு முழுவதும் குணமாகிவிட்டது. அவர் என்னுடன் நெருங்கிப் பழக ஆரம்பித்தார். அவரைப்போல் ஒரு நண்பர் எனக்கு அந்தச் சமயத்தில் கிடைத்தது எவ்வளவோ நலமாக இருந்தது.

ஒருநாள் அவர் திடீரென்று என்னிடம் ''என் மனைவிக்கு உங்களை ஏற்கனவே தெரியுமாமே? நேற்றுத்தான் பத்மா இதை என்னிடம் சொன்னாள்'' என்றார்.

''பத்மாவா!''—

என் உள்ளம் சிலிர்த்தது. இதயம் நின்று நின்று அடித்துக்கொண்டது. அன்று இருட்டில் நான் அவளைத் தெரிந்துகொள்ளவில்லை—

''நான் தான் அன்று கவனிக்கவில்லையென்றால் பத்மாவாவது என்னிடம் சொல்லியிருக்கக் கூடாதா?''

''அவளுக்கும் அப்போது உங்களைத் தெரிந்துகொள்ள முடியவில்லை; பெயரை விசாரித்த பின்புதான் சந்தேகம் நீங்கியதாம்'' என்றார்.

இன்னும் அவர் என்னிடம் ஏதேதோ பேசிக்கொண்டிருந்துவிட்டுப் புறப்பட்டார். அவர் அப்போது என்னிடம் என்ன பேசிக் கொண்டிருந்தாரோ தெரியாது, என் கவனமெல்லாம் பழையகாலக் குப்பைகளைக் கிளறுவதில் மும்முரமாயிருந்தன.

# 4

பத்மா பட்டணத்தைச் சேர்ந்தவள்; நானும் பட்டணத்தைச் சேர்ந்தவன். இருவரும், அவரவர்கள் சித்தி வீட்டிற்கு, அந்தக் கிராமத்திற்கு வந்திருந்தோம். அந்த ஊரின் சிவன் கோயிலில்தான் நாங்கள் முதன் முதலில் சந்தித்தது.

'ஏது திடுதிப்பென்று இந்தக் கிராமத்தில்கூட ஒரு நவநாகரிகம் காட்சியளிக்கிறதே' என்று நினைத்தேன். அவளும்

என்னைப் பார்த்தபொழுது அப்படித்தான் நினைத்திருக்க வேண்டும். அதை அவளுடைய பார்வை சொல்லியது.

எங்கள் சந்தேகம் உடனுக்குடன் தீர்ந்துவிட்டது.

''இதோ, இந்தப் பிள்ளையாண்டானும் பட்டணத்திலிருந்துதான் வந்திருக்கிறன். இவனை உனக்குத் தெரியுமோ!'' என்றுள் அவளோடு வந்திருந்த அவள் சித்தி.

''பட்டணம் இந்தப் பட்டிக்காட்டைப்போல் இல்லை சித்தி; ஒரே வீட்டில் குடியிருந்தால்கூட அடுத்த வீட்டுக்காரரை அங்கே தெரியாது'' என்று சொல்லிவிட்டு ''நீங்கள் பட்டணத்தில் எங்கே இருக்கிறீர்கள்?'' என்றுள் என்னிடம்.

நான் பதிலளித்தேன். அப்போது தொடங்கிய எங்கள் பேச்சு, அன்றிரவு பத்து மணிக்குத்தான் முடிந்தது.

அடுத்த நாளிலிருந்து ஒன்று, அவள் என் வீட்டிற்கு வந்து விடுவாள். இல்லாவிடில் நான் அவள் வீட்டிற்குப் போய்விடுவேன். இருவருக்கும் பேச்சில் பொழுது போவதே தெரியாது.

என்னிடம் பேசிய நேரம்போக மற்ற சமயத்திலெல்லாம் அவள் கவனம் தையல் வேலையில் ஈடுபட்டிருக்கும். நான் பாரதி கவிதையில் ஆழ்ந்துவிடுவேன். அவளுக்கு நூலும் கைக்குட்டைகளும் எப்படியோ அப்படி எனக்குப் பாரதி கவிதையும் படம் வரையும் வழக்கமும்.

நாட்கள் பறந்தன. அதைப்போலவே என் நெஞ்சம் எதையோ நினைத்து உயர உயரப் பறந்தது. அதிகம் கூறுவானேன்? அவளை என் இதய தெய்வமாக்கினேன். அத்துடன் அவளைப் பற்றியும் இப்படி நினைத்தேன்.

''எனது உள்ள நெகிழ்வை அவள் இன்னும் தெரிந்து கொள்ளாமலா இருக்கப் போகிறுள்? அவள் என்னுடன் பழகும்போது எவ்வளவு மகிழ்ச்சியாக, எவ்வளவு மலர்ச்சியுடன் பழகுகிறுள், அவளது கருவிழிகள் தாம்—பாற்கடலில் மிதக்கும் கரு நீலப்படகுகள் தாம்—என்னிடம் தினந்தினம் எத்தனையோ இன்பக் கதைகள் சொல்லுகின்றனவே! இன்னும் என்ன சந்தேகம்?''

ஆனாலும் நான் நிம்மதியடையவில்லை. அவளை முற்றும் தெரிந்துகொள்ள வேண்டுமென்று, அதற்காக ஒரு முயற்சி செய்தேன். அது எவ்வளவு பைத்தியக்காரத்தனமென்று எனக்கு அப்போது தெரியவில்லை. வயது இருபத்துநான் கல்லவா?

## 5

இரவுபகலாய்க் கண்விழித்து ஒரு படமெழுதினேன். பூஞ்சிட்டொன்று, சிவந்த ரோஜா இதழைக் கவ்விக் கொண்டு ஒரு செடியிலிருந்து மற்றொரு செடிக்கு 'ஜிவ்' வென்று தாவிச் செல்கிறது. அந்த இதழில் ''என் அருமைப் பத்மாவுக்கு'' என்று ஆரம்பித்துக் கீழ்கண்ட வரிகள் காணப்படுகின்றன. பாரதி பாட்டில் ஒரு சிறு மாற்றம், அவ்வளவுதான்.

**காற்று வெளியிடைக்கண்மணீ—நின்றன்**
**காதலை எண்ணிக் களிக்கின்றேன்.**

இந்தக் கடிதத்தை எவ்வளவு அழகுபடுத்த முடியுமோ அவ்வளவு அழகுபடுத்தி அவள் அறைக்குக் கொண்டு போனேன். நல்ல வேளை; அவளைத் தவிர அங்கு வேறு யாரும் இல்லை.

கடிதத்தை அவள் பார்த்தாள். பார்த்துவிட்டு, ''இதோ பாருங்கள், பரசு!'' என்றாள்.

அவள் குரல் என் நெஞ்சில் அறைந்தது. இமைகளை மெதுவாக உயர்த்தினேன்; அவைகள் அதே கணம் அவளைக் காண வெட்கிக் கீழே தாழ்ந்தன.

''நல்ல ஆண் பிள்ளைகள்?'' மறுபடியும் கோபத்தோடு ஒரு சொல் அம்பு வெளிப்பட்டது. கடிதத்தை என்னிடமே நீட்டினாள்.

நானாகத்தான் வீடு வந்து சேர்ந்தேனோ, அல்லது என் பாதங்களின் கீழ் இருந்த தரைதான் அதன் இருப்பிடத்தி லிருந்து பெயர்ந்து என்னை என் வீட்டிற்குக் கொண்டு வந்து தள்ளியதோ தெரியாது.

பெட்டி படுக்கையுடன் அன்றே சென்னைக்குக் கிளம்பினேன். சித்தி ஒன்றும் தெரியாமல் கலங்கினாள்.

பத்து வருடங்கள் ஆகப் போகின்றன; ஆனால் நேற்று வரையில் என்னிடம் தெளிவில்லை. காரணந் தெரியாத ஒரு புதிரைக் குறித்து எனக்குள் ஏங்கிக்கொண்டிருக்கிறேன்—இந்த ஏக்கத்திற்கு முடிவே கிடையாதா?

அந்தக் காலத்தில் அவள் பேச்சு, விளையாட்டு, சிரிப்பு, பார்வை இவற்றிற்கெல்லாம் என்னபொருள்? தினந் தவறினாலும் அவளது வருகை தவறாதே. அவ்வளவு அன்போடு பழகினாளே!—இத்தனையும் செய்துவிட்டு என் புனிதமான வேண்டுகோளை அலட்சியம் செய்தாளே, இதன் பொருளென்ன? அவளால் அத்தகைய வெறுப்புக்குள்ளாகும்படி நான் செய்த குற்றம் என்ன?......பாசாங்குக்காரி! அத்தனையும் வேஷமும், நடிப்பும், சாகசமுந்தானா?

சந்தேகம் தெளியும் நாள் வந்துவிட்டது. என் கேள்விகளுக்கு நான் பதிலறிந்து கொண்டேன். அவளே—நண்பர் சாம்பசிவத்தின் மனைவி பத்மாவே—இதை என்னிடம் தெரிவித்தாள். ஒருநாள் அவள் தன் குழந்தைகளை அழைத்துக் கொண்டு மருத்துவமனைக்கு வந்தபோது இந்த வாய்ப்புக் கிடைத்தது.

''உங்களுக்கு உயிருக்குயிரான ஆண் நண்பர்கள் இருக்கிறார்களே, அவர்களுடன் நீங்கள் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்வதில்லையா? அவர்கள் சுகதுக்கங்களில் நீங்கள் கலந்து கொள்வதில்லையா? அவர்களுடன் பொழுது போக்குவதில் நீங்கள் உற்சாகம் கொள்வதில்லையா? யோசித்துப் பாருங்கள். ஆண் வர்க்கம், ஆண் வர்க்கத்துடன் மட்டுந்தான் தோழமை பாராட்ட வேண்டுமென்ற நியதி எங்காவது உண்டா?

''அந்தச் சமயத்தில், அந்தக் கிராமத்தில் உங்கள் நட்பு எனக்கு எவ்வளவோ அருமையாக இருந்தது. உங்களுடைய பெருந்தன்மையைப் பற்றியும் கண்ணிய சுபாவத்தைப் பற்றியும் என் மாமா பிள்ளையிடம்—இப்போது என் அகத்துக்காரராயிருப்பவரிடம்—பெருமையடித்துக்கொள்ள

வேண்டுமென்றிருந்தேன். ஆனால் கடைசியில்தான் தங்கள் மனம் எனக்குத் தெரிந்தது.

''உங்கள் மேலும் குற்றம் இல்லை; அது வயதின் கோளாறு. உங்களைத் திடீரென்று கோபித்துக் கொண்டதைப்பற்றி நான் எத்தனை நாட்கள் எனக்குள் வருத்தப் பட்டிருக்கிறேன் தெரியுமா? அன்றைக்கே உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருக்கவேண்டும். நீங்கள் தான் உடனே ஊருக்குக் கிளம்பிவிட்டீர்களே!.........கிடக் கட்டும். இதுவரையில் நடந்தவற்றை மறந்துவிடுங்கள். நானும் அவரும் சீக்கிரம் உங்கள் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்கிறோம். என்ன சரிதானா?'' என்றாள்.

''சரி'' என்று தலையசைத்தேன் நான்.

---



